# திருநாவுக்கரசர் தேவாரப் பாடல்களில் இசை

முனைவர் இ. அங்கயற்கண்ணி



தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

# திருநாவுக்கரசர் தேவாரப் பாடல்களில் இசை


முனைவர் இ. அங்கயற்கண்ணி

இணைப் பேராசிரியை மற்றும் தலைவர்

இசைத்துறை






தமிழ்ப் பல்கலைக்கழகம்

தஞ்சாவூர்

ISBN : 81-7090-293-2

பண்ணிசைப் பாதுகாத்தல் அறக்கட்டளை நிதியிலிருந்து வெளியிடப்படுகிறது

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு : 233

திருவள்ளுவராண்டு 2032 ஆவணி - செப்டம்பர் 2001

| | | |
|---|---|---|
| நூல் | : | திருநாவுக்கரசர் தேவாரப் பாடல்களில் இசை |
| ஆசிரியர் | : | இ. அங்கயற்கண்ணி |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | இசை |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பக்கம் | : | (x + 230) = 240 |
| தாள் | : | டி.என்.பி.எல். மேப்லித்தோ |
| அளவு | : | டெம்மி 1/8 |
| நூற்கட்டுமானம் | : | சாதாக்கட்டு |
| விலை | : | உரு. **140-00** |
| படிகள் | : | 500 |
| அச்சுப்பதிவம் | : | நியூசன் ஆப்செட் பிரிண்டர்ஸ், தஞ்சாவூர் |
| அச்சு | : | தமிழ்ப் பல்கலைக்கழக மறுதோன்றி அச்சகம், தஞ்சாவூர். |



# தமிழ்ப் பல்கலைக்கழகம்

தஞ்சாவூர் - 613 005 - இந்தியா

முனைவர் கதிர். மகாதேவன்
துணைவேந்தர்

## அணிந்துரை

'தமிழோடிசை பாடல் மறந்தறியேன்' என்னும் குறிக்கோளுடன் வாழ்ந்தவர் திருநாவுக்கரசர். இறை உணர்வு கலந்த சமுதாயச் சீர்திருத்தக் கருத்துக்களை மக்களிடையே கொண்டு செல்வதற்கு இசையை ஓர் ஊடகமாகப் பயன்படுத்தியவர். அன்னாரின் வாழ்க்கை வரலாறு, இலக்கியக் கொள்கைகள், பாடற்பொருள் விளக்கங்கள், யாப்பமைதி போன்றவை குறித்துப் பல்வேறு நிலைகளில் ஆய்வுகள் நிகழ்ந்திருக்கும் இன்றைய சூழலில் இசை அணுகுமுறையோடு திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல்களைத் தமிழ்ப் பல்கலைக்கழக இசைத்துறைத் தலைவர் முனைவர் இ. அங்கயற்கண்ணி ஆராய்ந்திருப்பது பொருத்தமானதே.

திருநாவுக்கரசரின் திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் முதலான பதிகங்களின் பாடற் கருத்துக்கள் - அதனோடு பொருந்திய பண்ணிசை, அரிய இசைக் குறிப்புகள் போன்ற செய்திகள் இந்நூலில் சிறப்பாக ஆய்வு செய்யப்பட்டுள்ளன. மேலும், இப்பாடல்கள் இசை அரங்குகளில் பாடப்பட்டுப் பிரபலமடைய வேண்டும் என்ற நோக்கத்தில் பாடல்களுக்குரிய இசை முறை சுரதாளக் குறியீடுகளோடு கொடுக்கப்பட்டுள்ளன.

தற்போதைய கிருதி, கீர்த்தனை, பதம் முதலான இசைப் பாடல்களின் அமைப்பிற்குத் திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல்களே முன்னோடியானவை என்ற கருதுகோளினை முன் வைத்துத் 'தலையே நீ வணங்காய்' என்ற பாடல் வரியில் பல்லவியின் தோற்றம் காணப்பெறுவது இவ்ஆய்வில் உணர்த்தப்பட்டுள்ளது. திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல்கள் பாடும் முறையினை (சுத்தாங்கம்) விரிவாக ஆராய்ந்து தற்போது இசை அரங்குகளில்

'இராக ஆலாபனை செய்து பின்னர்க் கீர்த்தனை பாடுதல்' என்னும் இசை நெறிக்குத் திருநாவுக்கரசரின் பாடல்கள் முன்னோடியாக விளங்கிய நிலை இவ் ஆய்வில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

திருநாவுக்கரசரை அருணகிரிநாதர், தியாகராச சுவாமிகள் போன்ற பிற்கால இயலிசைப் புலவர்களோடு ஒப்பிட்டு இசைவழி பக்தி நெறியில் இறைவனை அடையலாம் என்ற இயலிசைப் புலவர்களின் கோட்பாடு இந்நூலில் திறம்பட உணர்த்தப்பட்டுள்ளது. மேலும் கர்நாடக மாநிலத்தைச் சேர்ந்த அக்க மகாதேவியாரின் (12ஆம் நூற்றாண்டு) பாடல்களைத் திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல்களோடு ஒப்பிட்டு இவ்விருவரும் வெவ்வேறு காலங்களில், வெவ்வேறு இடங்களில் வாழ்ந்திருப்பினும் ஒருமித்த கருத்துக்களை வெவ்வேறு மொழிகளில் கூறி மக்களை வழிநடத்தியுள்ளனர்; இசை, மதம், மொழி, இனம், நாடு ஆகியவற்றைக் கடந்து மக்களை இணைக்க வல்லது என்னும் இந்நூலாசிரியரின் கூற்று ஏற்புடையது.

திருநேரிசைப் பதிகங்கள் முழுவதற்கும் கொல்லிப் பண் என்ற ஒரேஒரு பண் மட்டுமே தரப்பட்டுள்ளது. இதனைப் பாடும் முறை வழக்கினை மனத்திற் கொண்டும் இப்பதிகங்கள் பிரபலமடைய வேண்டும் என்ற கருத்தின் அடிப்படையிலும், இவை அனைத்துப் பண்களிலும் பாடப்பெற வேண்டும்; திருநாவுக்கரசரின் பாடல்கள் இசையரங்குகள் மட்டுமின்றி, நாட்டிய அரங்குகளிலும் இடம்பெறச் செய்ய வேண்டும் என்பது போன்ற ஆசிரியரின் கருத்துக்கள் வரவேற்கத்தக்கன.

திருநாவுக்கரசரின் திருத்தாண்டகப் பதிகங்களின் இசை அமைப்பு, 'இசைத்துறைக்கு நாவுக்கரசரின் கொடை' என்ற வகையில் அணுகி, இந்த இசை உருவைத் தியாகராச சுவாமிகள் தம்முடைய அரிகாம்போதி இராகப் பாடல்களில் நன்கு பொருத்தி உள்ளார் என்னும் இந்நூலாசிரியரின் கருத்துச் சிந்திக்கத்தக்கது.

இறுதியாக மரபு என்பதை அடித்தளமாகக் கொண்டு, காலத்தின் தேவைக்கேற்ப, மக்களின் இரசனைக்கேற்ப, பாடல் தரும் உணர்ச்சிக்கேற்பப் பாடல்கள் - பண்கள் இடம்பெறலாம்; தேவாரப் பாடல்கள் இசையை முறையாகப் பயிற்றுவிக்கும் பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழக இசைத்துறைகள் போன்ற நிறுவனங்களில் பயிற்றுவிக்கப்பட வேண்டும் எனும் ஆசிரியரின் கருத்துக்கள் மனங்கொள்ளத்தக்கன.

'திருநாவுக்கரசர் தேவாரப் பாடல்களில் இசை' என்ற இந்நூல் ஒரு சிறந்த இசை ஆய்வு நூல்; இசை பயிலும் மாணவர்கட்கும், இசை ஆய்வில் ஈடுபடுவோர்க்கும், இசைக் கலைஞர்களுக்கும் பயன் தரத்தக்க நல்ல நூல் என்று பாராட்டுகிறேன்.

இந்த ஆய்வு நூலை எழுதிய முனைவர் இ. அங்கயற்கண்ணி தமிழ்ப் பல்கலைக்கழக இசைத்துறையில் ஒன்பது ஆய்வு நூல்களை உருவாக்கியவர். ஐந்து நூற்களின் பதிப்பாசிரியர் குழுவில் பணியாற்றியுள்ளார். தமிழ்ப் பல்கலைக்கழக இசைத்துறையில் தொடர்ந்து ஆய்வியல் நிறைஞர் (எம்ஃபில்), முனைவர் பட்ட ஆய்வுகளை நெறிப்படுத்தியும், பல்கலைக்கழக நல்கைக்குழுவின் சிறப்புநிலை ஆய்வுத் திட்டத்தைச் செயல்படுத்தியும், அறக்கட்டளைச் சொற்பொழிவுகள், புத்தொளிப் பயிற்சிகள், மாணவர்களுக்குரிய இசைப் போட்டிகள் நடத்துதல் ஆகிய பன்முகப் பணிகளை ஆற்றி வரும் இந்நூலாசிரியரின் உழைப்பைப் பெரிதும் பாராட்டி மகிழ்கிறேன். இசையுலகம் இந்நூலினைப் போற்றிப் பயன் கொள்ளும் என்று நம்புகிறேன்.

04-09-2001 (கதிர். மகாதேவன்)

# பொருளடக்கம்

## முன்னுரை

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர் இயற்றிய தேவாரப் பாடல்கள் தமிழ் இசைக்கும், சமயநெறிக்கும் வளம் சேர்க்கும் சிறந்த இலக்கியங்களாகும். இம்மூவருள், முதிர்ந்த அனுபவம் வாய்ந்த திருநாவுக்கரசர் இயற்றிய தேவாரப் பாடல்கள் இறை உணர்வோடு சமுதாய சீர்திருத்தக் கருத்துக்களை உள்ளடக்கிய இசைப் பாடல்களாகும். திருநாவுக்கரசரின் வாழ்க்கை வரலாறு, இலக்கியக் கொள்கைகள், பாடற்பொருள் விளக்கங்கள், யாப்பமைதி, ஆன்மீக நெறி போன்ற பொருண்மைகளில் பல்வேறு ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. ஆனால் இப்பாடல்களின் இசை தொடர்பான செய்திகள் மக்களிடையே பரவலாக அறிமுகமாகவில்லை. எனவே திருநாவுக்கரசர் பாடல்களில் இசைக்குச் சிறப்பிடம் அளிக்கும் வகையில் முதன்முறையாக இவ்வாய்வு மேற்கொள்ளப் பெறுகிறது.

திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல் அமைப்பினைத் தற்கால இசை உருப்படிகளோடு ஒப்பிட்டு ஆராய்தல்; பாடல்களில் ஆங்காங்கு காணப்படும் இசைக் குறிப்புக்களை ஆராய்தல்; இப்பாடல்கள் பாடப்பட்டு வரும் மரபினை ஆராய்தல்; இப்பாடல்களை மக்களிடையே பரப்புவதற்கு மேற்கொள்ள வேண்டிய வழிமுறைகளைக் கண்டறிதல் போன்றவை இவ்வாய்வின் நோக்கங்களாகும்.

திருநாவுக்கரசர் இயற்றிய 312 பதிகங்கள் முழுமையாக இந்நூலில் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. இவ்வாய்வு இசைத்துறையில் மேற்கொள்ளப்பட்டிருப்பதால், பாடல்களோடு பொருந்தி நிற்கும் பண்ணிசைத் தன்மை, பாடல்களில் காணப்படும்

இசைச் செய்திகள், இதுவரையில் நூல்களில் சுரதாளக் குறிப்புடன் வெளிவராத பாடல்கள் சிலவற்றிற்குச் சுரதாளக் குறிப்பு அமைக்கும் முயற்சி, இப்பாடல்களைப் பிரபலமாக்குவதற்கு மேற்கொள்ள வேண்டிய பணிகள் போன்றவற்றிற்கு மட்டுமே சிறப்பிடம் அளித்து இவ்வாய்வு மேற்கொள்ளப் பெறுகிறது.

புதுவை பிரெஞ்சு மொழியியல் நிறுவனம் அறிஞர் டி.வி.கோபாலய்யர் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 1985 ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ள **தேவாரம் பண்முறை, தொகுதி இரண்டு** இவ்வாய்வுக்குரிய ஆதார நூலாகும். மேலும், சென்னைத் தமிழிசைச் சங்கம் வெளியிட்டுள்ள **பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும்** (1974) என்ற நூலும் ஆண்டுதோறும் தமிழிசைச் சங்கம் வெளியிடும் பண் ஆராய்ச்சிக் கூட்ட அறிக்கைகளும், திருநாவுக்கரசர் தேவாரப் பாடல்கள் குறித்த பல இயலிசை அறிஞர்கள், ஓதுவார்கள் ஆகியோரின் கருத்துக்களை அறிய உதவி புரிந்தன.

டாக்டர்.வ.சு.செங்கல்வராய பிள்ளை எழுதியுள்ள **தேவார ஒளிநெறிக் கட்டுரைகள் (அப்பர்)**, டாக்டர். ந.சுப்பு ரெட்டியார் எழுதியுள்ள **நாவுக்கரசர்**, பேராசிரியர். க.வெள்ளை வாரணனார் எழுதியுள்ள **பன்னிரு திருமுறை வரலாறு**, திரு.சொ.சிங்காரவேலன் எழுதியுள்ள **அப்பர் தேவாரத்திறன்**, டாக்டர். ம.சா.அறிவுடைநம்பி எழுதியுள்ள **திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணப்படும் இலக்கியக் கொள்கைகள்** போன்ற நூல்களும், இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் கருத்தரங்குக் கட்டுரைகளும், திருநாவுக்கரசர் வாழ்க்கை வரலாறு, இவர்தம் பாடல்களில் பொதிந்துள்ள கருத்துக்கள், பாடற்பொருள் விளக்கங்கள், யாப்பமைதி போன்ற செய்திகளை அறிய உறுதுணையாக அமைந்தன.

இசைக் கலைஞர்களாகிய தருமபுரம் வேலாயுத ஓதுவார், தருமபுரம் பி.சுவாமிநாதன், சோ.முத்துக்கந்தசாமி தேசிகர், காஞ்சிபுரம் விநாயக முதலியார், து.சோமசுந்தர தேசிகர், வே.சோமசுந்தரம், டாக்டர் சேலம் ஜெயலெஷ்மி

முதலியோர் பாடியுள்ள ஒலிநாடாக்கள் திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல்கள் இசையோடு பாடப்பட்டு வரும் மரபினை அறிய உதவின.

இயல் ஒன்று, **திருநாவுக்கரசர் தேவாரம் பற்றிய ஆய்வுச் செய்திகள்** என்னும் தலைப்பில் அமைந்துள்ளது. இதில் திருநாவுக்கரசரின் தேவாரப் பதிகம் மற்றும் பாடற்றொகை, பாடல் அமைப்பு, திருநாவுக்கரசர் பதிகங்களின் பண்கள், இதுவரை சுரதாளக் குறிப்புடன் வெளிவந்துள்ள திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல்கள், தேவாரம் பாடப்படும் முறை போன்ற செய்திகள் இடம்பெற்றுள்ளன.

இயல் இரண்டு, **திருநாவுக்கரசர் தேவாரப் பாடல்களின் இசைச் சிறப்பு** என்னும் தலைப்பில் அமைந்துள்ளது. இதில் குறிப்பாக பண்ணாங்கமாகப் பாடப்பட்டு வரும் பதிகங்களின் இசைச் சிறப்பு பண் வரிசையில் ஒவ்வொன்றாக ஆராயப்பட்டுள்ளது. ஒவ்வொரு பண்ணிற்கும் பாடுவதற்கேற்ற வகையில் ஒவ்வொரு பாடல் சான்றாகவும் தரப்பட்டுள்ளது.

இயல் மூன்று, **திருநாவுக்கரசரின் திருநேரிசைப் பதிகங்களின் இசைச் சிறப்பு** என்னும் தலைப்பில் அமைந்துள்ளது. திருநேரிசைப் பதிகங்கள் ஒவ்வொன்றிலும் அடங்கியுள்ள கருத்துக்கள், அதற்கேற்ப பொருந்தி நிற்கும் பண்ணிசைத் தன்மை, பாடல்களில் காணப்படும் இசைக் குறிப்புக்கள் போன்றவை தனித்தனியாக ஆராயப்பட்டுள்ளன. இதுவரையில் சுரதாள குறிப்புடன் வெளிவராத பாடல்கள் சிலவற்றிற்குச் சுரதாளக் குறிப்பும் வரையப்பட்டுள்ளன. பாடுவதற்கேற்ற ஒரு பாடலும் சான்றாக இவ்வியலில் தரப்பட்டுள்ளது.

இயல் நான்கு, **திருநாவுக்கரசரின் திருவிருத்தப் பாடல்களின் இசைச் சிறப்பு** என்னும் தலைப்பிலானது. இப்பாடல்களில் அடங்கியுள்ள பொதுக்கருத்துக்களும், இதனை இசையோடு வெளிபடுத்தக்கூடிய பண்களின் பொருத்தமும் ஒவ்வொரு பதிகமாக எடுத்து ஆராயப்பட்டுள்ளது. நூல்களில் சுரதாளக் குறிப்புடன் வெளிவராத ஒருசில பாடல்களும் இசையமைக்கப்பட்டுச்

சுரதாளக் குறிப்புக்களுடன் தரப்பட்டுள்ளன. பாடுவதற்கேற்ற ஒவ்வொரு பாடல் சான்றாகவும் இவ்வியலில் தரப்பட்டுள்ளது.

இயல் ஐந்து, **திருநாவுக்கரசரின் திருக்குறுந் தொகைப் பதிகங்களின் இசைச் சிறப்பு** என்னும் தலைப்பிலானது. இதில் திருக்குறுந்தொகைப் பாடற் கருத்துக்களும், அதனோடு பொருந்தி நிற்கும் பண்ணிசைத் தன்மையும் ஒவ்வொன்றாக ஆராயப்பட்டுள்ளன ஒரு சில பாடல்களுக்குச் சுரதாளக் குறிப்புக்களும் எழுதப்பட்டுள்ளன. பாடுவதற்கேற்ற பாடல் ஒன்றும் சான்றாக தரப்பட்டுள்ளது.

இயல் ஆறு, **திருநாவுக்கரசரின் திருத்தாண்டகப் பாடல்களில் இசை** என்னும் தலைப்பிலானது. இதில், ஆறாம் திருமுறையில் அடங்கியுள்ள 99 திருப்பதிகங்களின் இசைச் சிறப்பு விரிவாக ஆராயப்பட்டுள்ளது. சுத்தாங்கமாக அரிகாம்போதி இராகத்தில் மரபு வழியாக இப்பாடல்கள் பாடப்பட்டு வரும் பெற்றிமை ஆராயப்பட்டுள்ளது. தியாகராஜ சுவாமிகள் அரிகாம்போதி இராகத்தில் இயற்றியுள்ள கீர்த்தனைகளைத் திருநாவுக்கரசரின் திருத்தாண்டகப் பதிகங்களோடு ஒப்பிட்டிருப்பது இவ்வியலின் குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

இயல் ஏழு, இவ்வாய்வில் கண்ட முடிவுகளைத் தொகுத்துரைப்பதாகும்.

பின்னிணைப்பில், திருநாவுக்கரசரின் 312 திருப்பதிகங்கள் பட்டியலிடப்பட்டுள்ளன. மேலும்,இதில் சுரதாளக் குறிப்புடன் நூல்களில் வெளிவந்துள்ள பாடல்களும் இடம்பெற்றுள்ளன. இவ்வாய்வுக்குப் பயன்படுத்திய துணை நூல்களும் பட்டியலிடப்பட்டுள்ளன.

இவ்வாய்வு நிறைவு பெறுவதற்குப் பலவகையிலும் உதவிபுரிந்த தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர், நூலகர் உள்ளிட்ட அனைவருக்கும் நன்றி உரியது.

# 1

# திருநாவுக்கரசர் தேவாரம் பற்றிய ஆய்வுச் செய்திகள்

மூவர் அருளிய திருப்பதிகங்களுள் திருநாவுக்கரசர் அருளிய பாக்களே, 'தேவாரம்' என்று முதலில் அழைக்கப்பட்டது. இப்பாக்களை 'விருத்தாப்பிய தேவாரம்' எனவும் கூறுவதுண்டு.

"இணைகொ ளேழெழு நூறிரும் பனுவல்
ஈன்றவன் திருநாவினுக் கரையன்"[1]

எனவரும் தொடரால் சுந்தரமூர்த்தி சுவாமிகள், நாவுக்கரசர் பாடிய திருப்பதிகங்களின் தொகையினைக் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். "எழு எழுநூறு இரும்பனுவல்" எனும் தொடர், நாலாயிரத்துத் தொளாயிரம் பதிகம் என்று பொருள் படுவதாகும். இவ்வாறே நம்பியாண்டார் நம்பியும் "பதிகம் ஏழெழுநூறு பகருமா கவியோகி" எனத் திருநாவுக்கரசரைப் போற்றுமுகத்தாற் 4900 என்றே தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.[2]

திருமுறை கண்ட புராணம் பாடிய உமாபதி சிவனார்,

"திருநாவுக் கரையரெனுஞ் செம்மையாளர்
தீயமணர் சிறைநீங்க வதிகை மேவுங்
குறுநாமப் பரஞ்சுடரைப் பரவிச் சூலை
கொடுங் கூற்றாயின வென்ன வெடுத்துகோதி
லொரு மானைத் தரிக்குமொரு வரையுங்காறு

1. சுந்தரமூர்த்தி சுவாமிகள தேவாரம். 7:65-2 "அணி கொளாடையும் பூணணி மாலைய" - எனத் தொடங்கும் பதிகம்.
2. நம்பியாண்டார் நம்பி அருளிச் செய்த "திருநாவுக்கரசு தேவா திருவேகாதச மாலை" பாடல் 7. அடி - 1. பதினோராந்திருமுறை, திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து வெளியீடு, சென்னை, 1950, பக்கம் 454.

மொரு நாற்பத் தொன்பதி னாயிரமதாக
பெருநாமப் புகலூரிற் பதிகங்கூறிப்
பிஞ்ஞகனா ரடியிணைகள் பெற்றுளாரே”[3]

என்று கூறுவதால் நாவுக்கரசர் 49,000 பதிகங்கள் பாடியனவாகத் தெரிகின்றது. ஆனால் நாவுக்கரசர் பாடியனவாக அபயகுல சேகர மன்னனுக்குக் கிடைத்த பதிகங்கள் 321 ஆகும். அவற்றுள் 312 பதிகங்கள் மட்டுமே தற்போது அச்சில் வந்துள்ளன. இவை நான்காம், ஐந்தாம், ஆறாம் திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளன. இதன்படி நான்காம் திருமுறையில் 113 பதிகங்களும் 1069 பாடல்களும் அமைந்துள்ளன. ஐந்தாம் திருமுறையில் 100 பதிகங்களும் 1015 பாடல்களும் அமைந்துள்ளன. ஆறாம் திருமுறையில் 99 பதிகங்களும் 980 பாடல்களும் அமைந்துள்ளன. இவை 126 தலங்கள் பற்றிய 275 பதிகங்களாகவும், 37 பொதுப் பதிகங்களாகவும் குறிக்கப் பெற்றுள்ளன.[4]

### திருநாவுக்கரசர் தேவாரப் பாடல் அமைப்பு

திருநாவுக்கரசர் தேவாரப் பதிகங்கள் பெரும்பாலும் பத்து பாடல்கள் உடையனவாக உள்ளன. சிலவற்றில் 11 பாடல்கள் உள்ளன. ஒருசில பதிகங்கள் 9 பாடல்களையும், சில 8 பாடல்களையும், சில 6 பாடல்களையும், சில 5, 4, 3, 2, 1 பாடல்களையும் கொண்டு திகழ்கின்றன. 12,20,30 பாடல்கள் கொண்ட பதிகங்களும் சில காணப்படுகின்றன. இவற்றினைப் பின்வருமாறு காணலாம்.

55 பதிகங்கள் - 11 பாடல்கள் உடையவை.
(IV 3,14,15,17,19,22,61,84,86,97,111,113,
V 1,10,14,16,17,19,25,30,33,35,37,39,44,
47,51,52,63,64,65,92,94,95
VI 2,3,4,14,15,18,19,22,25,28,38,46,51,53,
55,64,70,71,75,96,97)

16 பதிகங்கள் - 9 பாடல்கள் கொண்டவை.

3. உமாபதி சிவனார் திருமுறை கண்ட புராணம், பாடல் எண். 15, திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் வெளியீடு, 1982.
4. கோபாலய்யர்.டி.வி.(ப.ஆ) தேவாரம் (பண்முறை) தொகுதி இரண்டு, அப்பரும் சுந்தரரும், பிரெஞ்சு மொழியியல் நிறுவனம், பாண்டிச்சேரி, 1985.

(IV 27,70,71,73,103
V 9,26,40,76,79,91
VI 57,61,85,86,88)

6 பதிகங்கள், 8 பாடல்கள் கொண்டவை
(IV 77,110
V 38,60
VI 81,87

5 பதிகங்கள் 7 பாடல்கள் கொண்டவை
IV 102,104
V 67,78
VI 40

4 பதிகங்கள் 6 பாடல்கள் கொண்டவை
IV 28,79
V 15
VI 26

1 பதிகம் 5 பாடல்கள் கொண்டது
V 81

2 பதிகங்கள் 4 பாடல்கள் கொண்டது
IV 105
V 85

3 பதிகங்கள் 3 பாடல்கள் கொண்டது
IV 106,109
V 85

5 பதிகங்கள் 2 பாடல்கள் கொண்டது
IV 46,50,98,108
VI 92

2 பதிகங்கள் 1 பாடல் கொண்டது
IV 83
VI 72

3 பதிகங்கள் 12 பாடல்கள் கொண்டது
V 7,53
VI 7

1 பதிகம் 20 பாடல்கள் அமைந்தது

IV 92

1 பதிகம் 30 பாடல்கள் கொண்டது
V 97

**திருநாவுக்கரசர் பதிகங்களில் பண்கள்**

திருநாவுக்கரசர் திருப்பதிகங்களில் பின்வரும் பத்து பண்கள் இடம் பெற்றுள்ளன. அவையாவன :

கொல்லி
காந்தாரம்
பியந்தைக் காந்தாரம்
சாதாரி
காந்தார பஞ்சமம்
பழந்தக்க ராகம்
பழம் பஞ்சுரம்
இந்தளம்
சீகாமரம்
குறிஞ்சி

இவற்றுள் கொல்லி, காந்தாரம், பியந்தைக் காந்தாரம் ஆகிய மூன்று பண்களும் தற்போதைய நவரோசு இராகத்திற்குப் பொருத்தமாக உள்ளன. சாதாரிப்பண் பந்துவராளி இராகத்திற்கும், காந்தார பஞ்சமம் கேதார கௌள இராகத்திற்கும், பழந்தக்க ராகம், சுத்த சாவேரி அல்லது ஆரபி இராகத்திற்கும், பழம் பஞ்சுரம் சங்கராபரண இராகத்திற்கும், இந்தளம் மாயா மாளவ கௌள இராகத்திற்கும், சீகாமரம் நாதநாமக்ரியை இராகத்திற்கும் குறிஞ்சிப்பண் அரிகாம்போதி இராகத்திற்கும் பொருத்தமாக உள்ளன.[5] இப்பண்களுக்குரிய இராக இலக்கணங்கள் இந்நூலாசிரியரின் **திருஞானசம்பந்தர் தேவாரப் பாடல்களில் இசை** என்னும் நூலில் விரிவாக தரப்பட்டுள்ளன.

திருநாவுக்கரசர் கையாண்ட பண்களுக்குரிய கட்டளைகளாக, திருமுறை கண்ட புராணத்தில், பண் கொல்லிக்கு இரண்டு கட்டளைகளும், மற்றவற்றிற்கு முறையே ஒவ்வொரு கட்டளைகளும் கூறப்பட்டுள்ளன.

5. பண் ஆராய்ச்சிக் கூட்ட அறிக்கைகள், தமிழிசைச் சங்கம், சென்னை, 1972, 1973

.................. .................. வாகீசர் அருந்தமிழின்
முந்தாய பலதமிழுக் கொன்றொன்றா மொழிவித்து
நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு நாட்டிலிரண்
டுந்தாடுங் குறுந்தொகைக்கோர் கட்டளையா
விரித்துரைத்தார்
தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்தங்
காண்டகையார்[6] ...... ........... ..................

இதிலிருந்து பண் கொல்லி இரண்டு விதமாகவும் மற்றவை ஒரே மாதிரியான மெட்டிலும் தாளத்திலும் பாடப்பட்டு வருகின்றன என்பது தெளிவாகிறது.

திருநேரிசை, திருவிருத்தம், திருத்தாண்டகம், திருக்குறுந்தொகை ஆகிய நான்கும், திருநாவுக்கரசர் தேவாரத்தில் இடம் பெற்றுள்ள பாவின அமைப்புக்களாகும். இவற்றுள் திருநேரிசை கொல்லிப் பண்ணிலும், திருத்தாண்டகம் அரிகாம்போதி இராகத்திலும் விருத்தமாக பாடப்படடு வருகின்றன. திருவிருத்தம் கௌசிகப் பண்ணிலும், பழம் பஞ்சுரப் பண்ணிலும் திருக்குறுந் தொகைப் பாடல்கள் பூரி கலியாணியிலும் மரபுவழியாக பாடப்பட்டு வருகின்றன.[7]

**திருநாவுக்கரசர் தேவாரப் பாடல்கள் சுரதாளக் குறிப்புடன்**

மூவர் இயற்றிய தேவாரப் பாடல்களின் இசைமுறையை சுரதாளக் குறிப்புடன் நூல் வடிவாக முதன்முதலில் வெளியிட்ட பெருமை திரு. எம்.எம். தண்டபாணி தேசிகர் அவர்களையே சாரும்.[8] இந்நூலை பின்பற்றி டாக்டர் எஸ்.இராமனாதன் அவர்கள் வெளியிட்ட **தேவாரப்பண் இசை** என்ற நூலும் தமிழ்ப் பல்கலைக்கழக இசைத்துறையினர் வெளியிட்ட **மூவர் திருமுறைப்**

6. உமாபதி சிவனார் **திருமுறை கண்ட புராணம்** திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் வெளியீடு, 1982.

7. பண் ஆராய்ச்சிக் கூட்ட அறிக்கைகள், தமிழிசைச் சங்கம், சென்னை. 1971, 1972.

8. தண்டபாணி தேசிகர், எம்.எம். **தேவாரத் திவ்வியப் பிரபந்தத் திருப்புகழ்ப் பாடல்கள்** (பழைய பண் முறையில் இசை அமைப்புடன்), தமிழ் இசைச் சங்கம், சென்னை, 1966.

9. **மூவர் திருமுறைப் பாடல்கள்**, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1988.

பாடல்கள்[9] என்ற நூலும், திரு.வே.சோமசுந்தரம் அவர்கள் எழுதி கோலாலம்பூரில் வெளியிட்ட திருமுறை இசை அமுதம் என்ற நூலும் வெளிவந்துள்ளன.[10]

இவற்றுள் சுரதாள குறிப்புடன் இதுவரையில் வெளிவந்துள்ள திருநாவுக்கரசர் தேவாரப் பாடல்கள் அடங்கிய பட்டியலைப் பின்வரும் அட்டவணையிற் காணலாம்.

| பாடல் தொடக்கம் | பண் | இராகம் | தாளம் | புத்தக விவரம் |
|---|---|---|---|---|
| 1.கூற்றாயின வாறு | கொல்லி | நவரோசு | (ஆதி (2களை) | தே.தி.தி.பா. பக்.2 தேவாரப் பண் இசை, பக்.4 |
| 2.அடுத் தானை | காந்தா ரம் | நவரோசு | கண்ட சாபு | மூவர் திருமுறைப் பாடல்கள், பக்.77 |
| 3.கைப்போது மலர் | காந்தா ரம் | நவரோசு | கண்ட சாபு | மூ.தி.பா. பக்.78 |
| 4.மெய்யெ லாம்வெண் | காந்தா ரம் | நவரோசு | கண்ட சாபு | மூ.தி.பா. பக்.79 |
| 5.பற்றற்றார் சேர் பழம் | பழம் பஞ்சுரம் | சங்கரா பரணம் | ஆதி | மூ.தி.பா. பக்.80 |
| 6.சொன் மாலை பயில் | பழந்தக்க ராகம் | ஆரபி | ரூபகம் | மூ.தி.பா. பக்.81 |
| 7.வேதியா வேதகீத | கொல்லி | நவரோசு | ஆதி | மூ.தி.பா. பக்.84 |
| 8.மனமெனும் தோணி | கொல்லி | நவரோசு | - | மூ.தி.பா. பக்.85 |
| 9.சிவனெனு மோசை | பியந்தை காந்தாரம் | நவரோசு | திச்ரதிரி புடை | மூ.தி.பா. பக்.86 |

10.சோம சுந்தரம்.வே. (தொ.ஆ) *திருமுறை இசை அமுதம்*, ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் *தேவஸ்தானம்*, கோலாலம்பூர், 1974.

| | | | | |
|---|---|---|---|---|
| 10.சூலப் படையானை | சீகாமரம் | நாதநாமக்ரியா | மிச்ரசாபு | மூ.தி.பா. பக்.87 |
| 11.தலையே நீ வணங்காய் | சாதாரி | பந்துவராளி | ரூபகம் | திருமுறை இசை அமுதம் பக்.65 |
| 12.சொற்றுணை வேதியன் | காந்தார பஞ்சமம் | கேதார கௌளை | ஆதி (உகளை) | தி.இ.அ. பக்.67 |
| 13.மாசில் வீணையும் | - | பூர்வி கல்யாணி | ஆதி | தி.இ.அ. பக்.69 |
| 14.வாழ்த்த வாயும் | - | இந்தோளம் | ஆதி | தி.இ.அ. பக்.70 |
| 15.நமச்சிவாயவே | - | கரகரப்ரியா | திச்ரதிரிபுடை | தி.இ.அ. பக்.71 |

தருமபுரம் சுவாமிநாதன், ஓதுவார் முத்துக்கந்தசாமி தேசிகர், டாக்டர் சேலம் ஜெயலட்சுமி ஆகியோர் ஒலி நாடாக்களிலும் பாடல்கள் சிலவற்றைப் பாடி வெளியிட்டுள்ளனர்.[11]

திரைப்படங்களின் வாயிலாக திருநாவுக்கரசரின் ஒருசில பாடல்கள் பிரபலமடைந்துள்ளன. 'மாசில் வீணையும்' என்னும் பாடல் **திருவருட் செல்வர்** என்னும் படத்தில் பூர்வி கல்யாணி இராகத்தில் அமைந்து எளிய மக்களின் கவனத்தையும் ஈர்த்துள்ளது.

தற்போது காணப்படும் தேவார இசை முறையின் அடிப்படையில் தேவாரம் பாடும் முறையைத் தேவாரம் ஓதுதல், தேவார பாராயணம், தேவார இசையரங்கு என்று மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

இவற்றுள் தேவாரம் ஓதும் முறையே மரபுவழிப்பட்ட முறையாகும். தேவாரத்தை கற்கும்போது சரியான உச்சரிப்புடனும், பாடல்களின் பொருளை புரிந்து கொண்டு ஓதவுட முதலில் கற்க வேண்டும். இதற்கு **சுத்தாங்கம்** என்று பெயர். அதாவது தாளமில்லாமல்

11. ஒலிப்பதிவு நாடா, 4SE1, 107,108.

பண்ணிற்கேற்ப பாடல்களின் பொருணர்ந்து சொற்களின் சீர் பிரித்து சரியான உச்சரிப்புடன் ஓதும் முறை. திருநாவுக்கரசர் இயற்றிய திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை போன்றவை இவ்வாறு சுத்தாங்கமாகப் பாடப்படுகின்றன.

தேவாரம் ஓதும் முறை திருக்கோயில்களில் ஓதுவார்களால் இன்றும் ஓதப்பட்டு வருகின்றது.

தேவார பாராயணம், தேவார இசையரங்கு போன்றவற்றில் சுத்தாங்கம் என்கிற முறை மட்டுமன்றி, அதோடுகூட பண்ணாங்கம் என்கிற முறையும் கையாளப் படுகிறது. பண்ணாங்கம் என்பது பாடல்களைத் தாளத்துடன் கூடிய இசைமுறையுடன் பாடுவதாகும். இம்முறை பாடல்களை உணர்வோடு பாடுவதற்கும் துணை புரியும்.

தேவாரத்தை முதலில் கற்கும்போது சுத்தாங்க முறையிலேயே கற்றல் வேண்டும். திருக்கோவில்களில் இறைவன் முன் பக்தி பூர்வமாகப் பாடுவதற்கு இம்முறை பயனளிக்கும். தேவார இசையரங்குகளில் இப்பாடல்கள் சுத்தாங்கமாகவும், பண்ணாங்கமாகவும் பாடப்பட்டு வருகின்றன. பாடல்களின் பண்கள் அல்லது இராகங்களின் முழு உருவம் வெளிப்படும் வகையில் பாடுவதற்கு இம்முறை மிகவும் பயனுள்ளது.

மேற்கண்டவற்றிலிருந்து திருநாவுக்கரசர் இயற்றிய தேவாரப் பாடல்களின் இசை ரீதியான செய்திகள் அறிமுகப்படுத்தப் பட்டுள்ளன. இப்பாடல்களின் இசைச் சிறப்புக்களைப் பின்வரும் இயல்களில் விளங்கக் காணலாம்.

2

# திருநாவுக்கரசர் தேவாரப் பாடல்களின் இசைச் சிறப்பு

நான்காம் திருமுறையில் திருநாவுக்கரசர் இயற்றிய பதிகங்களுள் முதல் இருபத்தொரு பதிகங்கள் பண்ணாங்கமாக அதாவது தாளத்துடன் கூடிய இசை முறையில் பாடுவனவாகத் திகழ்கின்றன. இப்பதிகங்கள் வருமாறு :

| வ. எண் | பாடலின் தொடக்கம் | பாடப்பட்ட தலம் | பண் |
|---|---|---|---|
| 1 | கூற்றாயினவாறு | திருஅதிகை வீரட்டானம் | கொல்லி |
| 2. | சுண்ணவெண் சந்தனச் சாந்தும் | திருஅதிகை வீரட்டானம் | காந்தாரம் |
| 3. | மாதர்ப் பிறைக் கண்ணியானை | திருஐயாறு | காந்தாரம் |
| 4. | பாடிளம் பூதத்தினானும் | திருஆரூர் | காந்தாரம் |
| 5. | மெய்யெல்லாம் வெண்ணீறு | திருஆரூர் | காந்தாரம் |
| 6. | வனபவளவாய் திறந்து | திருக்கழிப் பாலை | காந்தாரம் |
| 7. | கரவாடும் வன்நெஞ்சர்க்கு | திருக்கச்சி ஏகம்பம் | காந்தாரம் |
| 8. | சிவனெனும் ஓசை அல்லது | பொது | பியந்தைக் காந்தாரம் |
| 9. | தலையே நீ வணங்காய் | திருஅங்க மாலை | சாதாரி |

| | | | |
|---|---|---|---|
| 10. | முளைக்கதிர் இளம்பிறை | திருஅதிகை வீரட்டானம் | காந்தார பஞ்சமம் |
| 11. | சொல் துணை வேதியன் | பொது | காந்தார பஞ்சமம் |
| 12. | சொல் மாலை பயில்கின்ற | திருப்பழனம் | பழந்தக்க ராகம் |
| 13. | விடகிலேன் அடிநாயேன் | திருஐயாறு | பழந்தக்க ராகம் |
| 14. | பருவரை ஒன்று சுற்றி | பொது | பழம்பஞ்சுரம் |
| 15. | பற்றுஅற்றார் சேர் | பொது | பழம்பஞ்சுரம் |
| 16. | செய்யர்வெண் நூலர் | திருப்புகலூர் | இநதளம் |
| 17. | எத்தீப்புகினினும் | திருஆரூர் அரநெறி | இந்தளம் |
| 18. | ஒன்று கொல் ஆம் | பொது | இந்தளம் |
| 19. | சூலப்படையானை | திருஆரூர் | சீகாமரம் |
| 20. | காண்டலே கருத்து ஆய் | திருஆரூர் | சீகாம்ரம் |
| 21. | முத்து விதானம் | திருஆரூ | குறிஞ்சி |

இனி இப்பதிகங்களின் இயல் இசை அடைப்பை ஒவ்வொன்றாக ஆராய்லாம்.

**கொல்லிப்பண்**

முதற் பாடலான "கூற்றாயினவாறு விலக்ககலீர்" எனத் தொடங்கும் திருஅதிகை வீரட்டான தலத்துப் பதிகப் பாடல் கொல்லிப் பண்ணில் அமைந்தது. இப்பதிகமே திருநாவுக்கரசரால் பாடப்பட்ட முதற்பதிகமாகும். இஃது தி நநாவுக்கரசர் தீராத வயிற்று நோயாகிய சூலை நோயால் வருந்திய நிலையில் பாடப்பட்டது. இப்பாடல் எழுந்த வரலாற்றைச் சிறிது நோக்குவோம்.

திருமுனைபாடி என்னும் நாட்டில் திருவாமூர் என்ற ஊரில் புகழனார் - மாதினியார் என்போர் இல்லற வாழ்க்கை மேற்கொண்டு வாழ்ந்து வந்தனர். அவர்கட்கு திலகவதியார் என்ற பெண் குழந்தையும், மருணீக்கியார் என்ற ஆண் குழந்தையும் இருந்தன. திலகவதியாருக்கு 12

ஆண்டுகள் நிரம்பும் தறுவாயில் கலிப்பகையார் என்ற படைத்தளபதிக்கு திருமணம் முடிக்க உறுதி செய்யப்பட்டது. ஆனால் திருமணம் நிகழ்வதற்கு முன்னர் நாட்டில் போர் மூண்டது. மன்னரின் ஆணைப்படி கலிப்பகையார் போர்க்களத்திற்கு அனுப்பப்பட்டார். அங்கு இறந்துவிட்டார்.

இதற்கிடையே புகழனார் நோய்வாய்ப்பட்டு இறந்தார். தம் கணவரின் பிரிவாற்றாமல் மாதினியாரும் உடனிறந்தார்.

இவ்வாறு சிறுவயதிலேயே பெற்றோரையும், தமக்கு நிச்சயித்திருந்த வரையும் இழந்த திலகவதியார், தம் தம்பி மருள்நீக்கியாரை வளர்த்து ஆளாக்க வேண்டும் என்பதற்காக பூவும் பொட்டும் அணியாமல் கைம்மை நோன்பு மேற்கொண்டு துறவுக்கோலம் பூண்டு மருணீக்கியாரை அன்போடு பேணி காத்து வளர்த்து வந்தார்.

சில ஆண்டுகள் கழித்து மருணீக்கியார் சமண சமயத்தில் ஈடுபாடு கொண்டார். பாடலிபுத்திரம் சென்று சமண சமயத்து அருங்கலைகளை கற்றார். இவருடைய ஆழ்ந்த புலமையையும் சிந்தனைத் தெளிவையும் கண்டு வியந்த சமணர்கள், இவருக்குத் தருமசேனர் என்னும் பெயர் சூட்டித் தம் குருவாக ஏற்றுக் கொண்டனர்.

தனித்து விடப்பட்ட திலகவதியார் சிவனருள் பெறுதற்பொருட்டு திருவதிகை வீரட்டானம் சேர்ந்தார். அங்கு தினமும் கோயிற் திருப்பணிகள் செய்து தம் நாட்களை கழித்து வருகையில், ஒரு நாள் தம் தம்பியார் நினைவு எழுந்தது. சமணப் படுகுழியில் வீழ்ந்து கிடக்கும் தம் தம்பியை விடுவிக்க வேண்டுமென இறைவனை வேண்டி நின்றார். சிவபெருமான் திலகவதியாரின் கனவில் தோன்றி, மருணீக்கியாரைச் சூலை நோய் பற்றச் செய்து ஆண்டருள்வோம் என்று கூறி அருளினார். இதற்கேற்ப தருமசேனர் சூலை நோய் பற்றி அதனால் தாங்கொணா துயறுற்றார். சமண சமயத்தில் தாம் கற்ற மந்திரங்கள் அனைத்தையும் பயன்படுத்திச் சூலை நோய் தீர்க்கும் முயற்சியில் ஈடுபட்டார். எதற்கும் நோய் தீராமல் போகவே சமணர்கள் இவரை கைவிட்டனர். இறுதியாகத் தம்

நிலையை தம் தமக்கையாருக்கு தெரிவித்து வருமாறு சமையற்காரனை அனுப்பினார். அவன் திருவதிகை அடைந்து தருமசேனரின் நிலையை திலகவதியாருக்கு எடுத்துக் கூறினார். திலகவதியார், தம் தம்பி இருக்குமிடமான சமண பள்ளிக்குத் தாம் வர இயலாமையைத் தருமசேனருக்குத் தெரிவிக்குமாறு கூறி அனுப்பினார். அவனும் திலகவதியார் கூறியதைத் தருமசேனரிடம் அறிவித்தனன்.

தருமசேனர் மிகவும் மனம் தளர்வுற்றார். இந்நிலையில் சமண சமயத்தில் வெறுப்புற்று, சமணக் கோலங்களை நீக்கினார். திலகவதியார் தங்கியிருந்த திருமடத்தை அடைந்து திலகவதியாரின் பாதத்தில் வீழ்ந்து வணங்கினார்.

திலகவதியார் தம் தம்பியை தம் பாதத்தினின்றும் எழச் செய்து, இஃது சிவபெருமான் திருவுளமே என்று கூறி, அப்பரமனின் திருவடிகட்கு நாளும் தொண்டு செய்கவென்று அன்புக் கட்டளையிட்டார். தம் -தம்பியார் கோயிலுக்குள் நுழைவதற்கு ஐந்தெழுத்தை ஓதி திருநீறு கொடுத்தார்.

பொழுது புலர்ந்தவுடன், வழக்கம்போல் கோயில் திருப்பணி செய்வதற்கு தம் தம்பியையும் உடனழைத்துக் கொண்டு வீரட்டானப் பெருமான் கோயிலை அடைந்தார்.

அங்கு மருணீக்கியார் கோயிலைத் தொழுது வலம் வந்து நெடிது விழுந்து வணங்கினார். வீரட்டான பெருமானின் அருளினால் தமிழ்ப் பாமாலை இயற்றும் வல்லமை பெற்றார். தமக்குற்ற சூலை நோய் நீங்கவும், இப்பூவுலக மக்களெல்லாம் உய்யவும், "கூற்றாயினவாறு" எனத் தொடங்கும் பதிகத்தைப் பாடினார். அப்பதிகத்தின் முதற்பாடல் வருமாறு :

"கூற்றாயினவாறு விலக்ககலீர்
கொடுமை பல செய்தன நானறியேன்
ஏற்றாய் அடிக்கே இரவும் பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்றா தென்வயிற்றின் அகம்படியே

குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேன் அடியேன் அதிகைக் கெடில
வீரட்டானத்துறை அம்மானே"

இப்பாடலுக்குரிய சுரதாள குறிப்பினை பின்இணைப்பில் காணலாம்.

இப்பதிகத்தின் ஆறாவது பாடலில் தாம் சைவநெறியில் நிற்காது சமணநெறியைப் பின்பற்றி இருந்ததை எண்ணி பின்வருமாறு வருந்துகிறார்.

**சலம், பூவொடு, தூபம் மறந்தறியேன்**
**தமிழோடு இசை பாடல் மறந்தறியேன்**
**நலம் நீங்கிலும் உன்னை மறந்தறியேன்**
**உன் நாமம் என்நாவில் மறந்தறியேன்**
**உலந்தார் தலையில் பலி கொண்டு உழல்வாய்**
**உடலுள் உறுசூலை தவிர்த்து அருளாய்**
**அலந்தேன், அடியேன் அதிகைக் கெடில**
**விரட்டானத்து உறை அம்மானே!**

தேவார இசையரங்குகளில் இப்பாடல் மிகப் பிரபலமாக உள்ளது. இப்பதிகத்தின் எல்லா பாடல்களிலும் சூலை நோய் தவிர்த்து அருளாய்! என்று சிவபெருமானை நோக்கி முறையிடும் அமைப்பில் உள்ளது. இப்பாடலை நவரோசு ஆதி தாளத்தில் பாடும் வழக்கம் உள்ளது. இப்பாடலில் "தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்" என்னும் வரியில் தமிழிசை பற்றிய குறிப்பு காணப்படுகிறது. இவ்வாறு இப்பதிகம் பாடிய நிலையில், "செந்தமிழ்ப் பதிகம் பாடிய பான்மையினால் நின் பெயர் "நாவுக்கரசு" என உலகேழினும் நிலை பெற்று வழங்குவதாகுக" என்ற இறைவனின் அருள்வாக்கு அங்கிருந்தோரனைவரும் கேட்கும் வண்ணம் வானின் கண் எழுகின்றது.

அதுமுதல் தருமசேனர் "நாவுக்கரசர்" ஆயினார்.[1]

**காந்தாரம்**

"சுண்ண வெண் சந்தனச் சாந்தும்" எனத் தொடங்கும் பதிகம் காந்தாரப் பண்ணில் அமைந்துள்ளது.

1. சுப்புரெட்டியார்.ந. நாவுக்கரசர், வேங்கடம் பதிப்பகம், சென்னை, 1986.

இஃது திருஅதிகை வீரட்டானத் தலத்துக்குரியது. ஒவ்வொரு பாடலும் ஐந்து வரிகளைக் கொண்டு திகழ்கின்றது. ஒவ்வொரு பாடலின் இறுதி வரியும்,

"அஞ்சுவது யாதொன்றும் இல்லை
அஞ்ச வருவதும் இல்லை"

என்று முடிகின்றது. இப்பதிகத்தின் முதற்பாடல் வருமாறு:

"சுண்ணவெண் சந்தனச்சாந்தும், சுடர்த்திங்கள் சூளாமணியும்
வண்ண உரிவை உடையும், வளரும் பவளநிறமும்
அண்ணல் அரண்முரண் ஏறும் அகலம்வளாய அரவும்
திண்ணெண் கெடிலப் புனலும், உடையார் ஒருவர் தமர், நாம்
அஞ்சுவது யாதொன்றும் இல்லை; அஞ்ச வருவதும் இல்லை".

இவ் இறுதி வரியானது ஒவ்வொரு பாடலின் தலைப்பு வரியாக அமைகின்றது. இவ்வரி இப்பாடலின் யாப்பு முறையினின்றும் வேறான யாப்பில் அமைந்துள்ளமை குறிப்பிடத்தகுந்தது. இவ்வாறான அமைப்பே பிற்காலத்தில் 15ஆம் நூற்றாண்டில் எழுந்த அருணகிரிநாதர் திருப்புகழ்ப் பாடல்களில் "தொங்கல்" என்கிற அமைப்பாக வளர்ச்சியடைந்தது எனலாம்.[2]

திருப்புகழில் ஒருவரியில் ஒரு குறிப்பிட்ட அமைப்புச் சந்தம் மூன்று முறை ஒரே சீராக மடங்கி, அவ்வமைப்பினின்றும் மாறுபட்ட சந்தத்தில் முடிவுறுகிறது. சான்றாக,

தனதான தந்த தனதான தந்த
தனதான தந்த - தனதானா
விறல்மாற னைந்து மலர்வாளி சிந்த
மிக வானிலிந்து - வெயில்காய

2. திருப்புகழ் போன்ற சந்தப் பாடல்களில் ஒவ்வொரு பாடலிலும் அதனதன் சந்தக் குறிப்பின் முற்பகுதி அமைப்பிலிருந்து மாறுபட்டு அடிகளின் ஈற்றில் 'தனதான' என்றோ தந்ததான என்றோ ஓர் அழகிய தனியான சீர் அமையப் பெறும். இசை மரபில் இது 'தொங்கல்' என வழங்கப்படுகிறது.

இங்கு தனதான என்ற சந்தம் இசை வழக்கில் "தொங்கல்" என்று கூறப்படுகிறது.

மேற்குறிப்பிட்ட பாடலின் இறுதிவரி ஏனைய வரிகளினின்றும், அமைப்பு ரீதியாக மாற்றம் கொண்டுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத்தகுந்தது.

"சுண்ணவெண் சந்தனச்சாந்தும்" என்ற பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும், "அஞ்சுவது யாதொன்றும் மில்லை அஞ்ச வருவதும் இல்லை" என்ற வரி, ஐந்தாவது வரியாக, முழுமையான வரியாக அமைவதால் இதனை 'நாலடி மேல் வைப்பு' என்று யாப்பு வகையாகக் கொள்ளுதலே முறைமை என்பது திரு.முத்துக் கந்தசாமி தேசிகர் அவர்களின் கருத்து.

**இப்பதிகம் பாடப்பட்ட சூழல்**

திருநாவுக்கரசர் சைவ நெறியைக் கடைபிடித்து வருவதை அறிந்த சமண துறவிகள், பல்லவ மன்னனிடம் சென்று, சமணத் தலைவராக இருந்த தருமசேனர், தமக்கு சூலை நோய் வந்ததென்று பொய் சொல்லி சைவ சமயத்திற்குச் சென்றுவிட்டார் என்று கூறினர். சமணர்கள் பேச்சைக் கேட்டு மன்னனும் திருநாவுக்கரசருக்குப் பல இன்னல்கள் அளித்து வந்தான். அதில் ஒன்றாக, மன்னனின் பட்டத்து யானையைக் கட்டவிழ்த்து நாவுக்கரசருக்கு எதிராக விடும்படி சமணர்கள் கூறியதற்கேற்ப, மன்னனும் ஆணையிட்டான். யானை ஒரு குன்றம் புறப்பட்டு வருவது போல் திருநாவுக்கரசரை நோக்கி வருகின்றது. அவரோ தம்மை நோக்கி வரும் களிறினைக் கண்டு சிறிதும் அஞ்சாது சிவபெருமானை நினைந்தவண்ணம் யானையை நோக்கி, இறைவனுடைய அடியார்கள் எதற்கும் அஞ்ச வேண்டுவதில்லை. இனி யாம் அஞ்சும்படி வருவதாகிய இடையூறு எதுவுமில்லை என்னும் கருத்துடன் இப்பதிகத்தைப் பாடுகின்றார்.

இதனைக் கேட்ட யானை, நாவுக்கரசரை வலஞ் செய்து வந்து அவர்க்கெதிரே நிலத்தில் தாழ்ந்து வணங்கி அவ்விடம் விட்டு அகன்று சென்றுவிட்டது.

காந்தாரப் பண்ணிலமைந்த மற்றொரு பதிகம்,

"மாதர் பிறை கண்ணியானை" எனத் தொடங்குகிறது. இஃது திருஐயாறு தலத்துப் பதிகமாகும். இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலும் ஐந்து வரியில் அமைந்துள்ளது. இறுதி வரியாக, "கண்டேன், அவர் திருப்பாதம்; கண்டறியாதன கண்டேன்" என்று அமைந்துள்ளது. இவ்வாறு இப்பதிகத்தில் பதினொரு பாடல்கள் காணப்படுகின்றன. இதனை ஓதுவார்கள் மரபுவழியில் நவரோசு இராகத்தில் எளிமையான மெட்டில் பாடி வருகின்றனர். இப்பாடல் சுரதாள குறிப்புடன் நூல்களில் காணப்படாமையால் இப்பாடலின் சுரதாள குறிப்பு இங்கு கொடுக்கப்படுகிறது.

பண் : காந்தாரம்
ஆரோசை : பதநிசரிகமப
அமரோசை : பமகரிசநிதப
இராகம் : நவரோசு
(29 ஆவது மேளகர்த்தாவாகிய
தீரசங்கராபரணத்தில் பிறந்தது)
தாளம் : ரூபகம்

| 0 /4 | 0 /4 |
|---|---|
| தாநீ சாசா சாசா | சா, கரீ; சநிதப |
| மாதர் பிறை கண்ணி | யா னை .... |
| | சரிகமபா மகரிசநித |
| | யா.... னை.... |
| பத நீ சாசா சாரீ | காமா கா; ; ; |
| மலையான் ம க ளொடும் | பா . டி . . . |
| மா காமா பா, பபா | ரீ;கமபம மககரி |
| போ தொடு நீர்சுமந் | தேத்தி .. .... |
| சரிகா ரீ ரீசாரி | காமப கரீ, சா; |
| புகுவார் அவர் பின்பு | கு...வேன் |

பின்வரும் அடிகளையும் இதே இசையமைப்பில் பாட வேண்டும்.

யாதும் சுவடு படாமல் ஐயாறடைகின்றபோது
காதல் மடப்பிடியோடும் களிறு வருவன கண்டேன்
கண்டேன், அவர் திருப்பாதம்; கண்டறியாதன
கண்டேன்

பாடலின் இறுதி வரியான "கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்" என்னும் வரி இரண்டு முறைகள் மடங்கி பாடப்படுகின்றது.

இப்பாடலுக்குரிய பண்ணை, அதாவது நவரோசு இராகத்தின் முழு வடிவத்தை விளங்கக் காட்டுவதற்காக இவ்வாறு மடக்கி பாடப்படுவதாகக் கருதலாம்.

காந்தாரப் பண்ணில் மேலும் நான்கு பாடல்கள் உள்ளன. அவை வருமாறு :

**பாடு இளம் பூதத்தினாலும் - திருஆரூர்**
**மெய்எலாம் வெண்நீறு சண்ணித்த - திருஆரூர்**
**வனபவள வாய் திறந்து - திருக்கழிப்பாலை**
**கரவாடும் வன் நெஞ்சர்க்கு - திருக்கச்சி ஏகம்பம்**

இவை நான்கும் பத்து பாடல்களைக் கொண்டு திகழ்கின்றன. இவற்றுள் "மெய் எலாம் வெண்நீறு" எனத் தொடங்கும் பதிகம் 'பழமொழித் திருப்பதிகம்' என்று சிறப்புப் பெயர் கொண்டு அழைக்கப்படுகிறது. ஒரே பதிகத்திலேயே பத்துப் பழமொழிகளை அடுக்கிப் பாடியிருப்பதால் இப்பெயர் பெற்று விளங்குகிறது. முன்னமே ஆரூரரைத் தொழுதல் விட்டு சமண சமயம் புகுந்து பாழ்பட்டதையெண்ணி உருகும் பதிகமாக இஃதமைகின்றது. இப்பதிகத்தின் முதல் பாடல் வருமாறு :

"மெய் எலாம் வெண்நீறு சண்ணித்த மேனியான் தாள்
தொழாதே
உய்யல் ஆம் என்று எண்ணி, உறிதூக்கி உழி தந்தேன்
உள்ளம்விட்டு
கொய் உலா மலர்ச்சோலைக் குயில் கூவ மயில்
ஆடும் ஆரூரரைக்
கையினால் தொழாது ஒழிந்து, கனி இருக்கக் காய்
கவர்ந்த கள்வனேனே!"

இப்பாடலில், "கனி இருக்கக் காய் கவர்தல்" என்னும் பழமொழி கூறப்படுகிறது. இதனைச் சைவமிருக்க அதைவிடுத்துச் சமணம் சார்ந்த தம் செயலோடு ஒப்பிட்டு உவமையாகப் பாடுகின்றார்.

"இனிய வுளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய் கவர்ந்தற்று"[3]

என்று திருவள்ளுவரும் இப்பழமொழியைக் கையாண்டுள்ளமை இங்கு குறிப்பிடத்தகுந்தது. இப்பாடலில் அமைந்துள்ள மற்ற பழமொழிகள் வருமாறு:

1. முயல்விட்டுக் காக்கைப்பின் போன ஆறே
2. அறம் இருக்க மறம் விலைக்குக் கொண்ட ஆறே
3. பனிநீரால் பரவை செயப் பாவித்தேனே
4. ஏதன் போர்க்கு ஆதனாய் அகப்பட்டேனே
5. இருட்டு அறையில் மலடு கறந்து எய்த்த ஆறே
6. விளக்கு இருக்க மின்மினித் தீக் காய்ந்த ஆறே
7. பாழ் ஊரில் பயிக்கம் புக்கு எய்த்த ஆறே
8. தவம் இருக்க அவம் செய்து தருக்கினேனே
9. கரும்பு இருக்க இரும்பு கடித்து எய்த்த ஆறே

"கரவாடும் வன்நெஞ்சர்க்கு" எனத் தொடங்கும் பதிகத்தின் இறுதிப்பாடல் மிகவும் பிரபலமானது. இப்பாடல் வருமாறு :

"அடுத்தானை உரித்தானை அருச்சுனற்குப் பாசுபதம்
கொடுத்தானை குலவரையே சிலை ஆகக் கூர்அம்பு
தொடுத்தானை, புரம் எரிய சுனைமல்கு கயிலாயம்
எடுத்தானைத் தடுத்தானை - என் மனத்தே வைத்தேனே"

இப்பாடல் யதுகுல காம்போதி இராகத்தில் மிகப் பிரபலமாகியுள்ளது. செவ்வழிப் பண்ணில் குறிப்பாக நாட்டிய அரங்குகளில் பரவலாக பாடப்பட்டு வருகிறது. திருஞானசம்பந்தரின் செவ்வழிப் பண்ணில் அமைந்த பாடலான "தொண்டரஞ்சு களிறும்"[4] என்னும் பாடலின் இசை அமைப்பைத் தழுவி "கொண்டு கூட்டி"[5] முறையில் இஃது செவ்வழிப் பண்ணில் மாற்றப்பட்டுள்ளது. இப்பாடல் காந்தாரப் பண்ணில் சுரதாள குறிப்புடன் வெளிவந்துள்ளது. இதனை பின்இணைப்பில் காணலாம்.

3. திருக்குறள் - எண். 100, அதி. 10:10
4. திருஞான சம்பந்தர் தேவாரம் - 2 : திருக்கேதாரம் - பாடல் - 1.
5. பொருள் தொடர்புடைய நீண்ட வரியை சிறு பகுதிகளாக பகுத்து நிறுத்தி, அவற்றைப் பல்வேறு வகையில் இணைத்துக் காட்டுவது "கொண்டுகூட்டுதல்" என்று பெயர்.

மாற்றம் அடைந்துள்ள செவ்வழிப் பண்ணில் சுரதாள குறிப்புடன் இங்கு கொடுக்கப்படுகிறது.

பண் : செவ்வழி
தாளம் : திச்ரதிரிபுடை
இராகம் : யதுகுலகாம்போதி
(28 ஆவது மேளகர்த்தாவாகிய அரிகாம்போதியில் பிறந்தது)
ஆரோசை : சரிமபதச்
அமரோசை : ச்நிதபமகரிசா

| /3 | 0 | 0 |
|---|---|---|
| ; ; ; கா சா ; | ரீ, மபாமா | மா ; ; ; |
| . . . அ டுத் | தா . . . | னை . . . |
| ; காமா; பா; | மாமா பாதா | தாநீதாபா |
| . உரித் | தா . . . | . . . . |
| பதநிதபம . தாபாதா | தா ; ; ; | தச்ாநி தா; |
| னை ....... அருச்சு | னற் . . | கு . . . |
| தா; ; நீதாபா | மாமா பாதா | தாநீ தாபா |
| பா . . சு . . | ப . . . | தம் . . . |
| பதநிதபம . பாதா; | ச்ா ; ; ; | ச்ா ; ; ; |
| . . . . . . கொடுத் | தா . . . | னை . . . |
| ; தாதாதாச்ா, நி | தா ; தா ; | ; நீதாபா |
| . கு ல வ ரை . | . யே | . . . . |
| ; மா மா; கா, ம | பா; மாபா | ம ப தா ; ; |
| . சி லை . ஆ . | . க . | . . . . . |
| பா, தச்ா ச்ாதாபா | பாதா தா பா | மாதா பாமா |
| கூர் . அம் . . | பு . . . . | . . . . . |

இவ்வாறே மற்ற இரண்டு அடிகளையும் பாட வேண்டும்.

மாற்றமடைந்த இம் மெட்டு பண் முறையானது அல்ல. நவரோசு இசை அமைதியில் பாடுவதே முறைமை என்பது ஒரு சிலரின் கருத்து.

### பியந்தைக் காந்தாரம்

பியந்தைக் காந்தாரப் பண்ணில், "சிவன் எனும் ஓசை" எனத் தொடங்கும் பதிகம் அமைந்துள்ளது.

இப்பாடல் நவரோசு இராகத்தில் திச்ர திரிபுடை தாளத்தில் சுரதாள குறிப்புடன் வெளிவந்துள்ளது. (பின்இணைப்பில் காண்க) இஃது பொதுப் பதிகமாகும். இப்பதிகம் வருமாறு:

சிவன் எனும் ஓசை அல்லது, அறையோடு, உலகில்
திருநின்ற செம்மை உளதே?
அவனும் ஓர் ஐயம் உண்ணி; அதன் ஆடை ஆவது;
அதன் மேல் ஓர் ஆடல் அரவம்;
கவண் அளவு உள்ள உள்கு; கரிகாடு கோயில்; கலன்
ஆவது ஓடு, கருதில்;
அவனது பெற்றி கண்டும், அவன் நீர்மை கண்டும்,
அகம் தேர்வர், தேவர் அவரே.

சாதாரி

"தலையே நீ வணங்காய்" எனத் தொடங்கும் பதிகம் இப்பண்ணில் அமைந்துள்ளது. நம் உடலின் ஒவ்வோர் உறுப்பையும் இறை பணிக்கே செலவிட வேண்டும் என்ற கருத்தில் இப்பதிகம் அமைந்திருப்பதால், இஃது "திருஅங்க மாலை" என்று சிறப்புப் பெயர் பெற்று விளங்குகின்றது.

இப்பதிகத்தில் கண்ணி அமைப்பில் 12 பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு பாடலின் முதல் வரியும் அப்பாடல் இறுதியில் மடங்கி வந்துள்ளமை குறிப்பிடத்தகுந்தது. இப்பதிகத்தின் முதற்பாடல் வருமாறு :

"தலையே நீ வணங்காய்! - தலைமாலை
தலைக்கணிந்து
தலையாலே பலி தேரும் தலைவனை - தலையே,
நீ வணங்காய்"

ஒவ்வொரு பாடலும் மூன்று தாள வட்டங்களைக் கொண்டு விளங்குகிறது. இதனை நான்காகச் செய்ய வேண்டும் என்ற இசைநெறி நோக்கம் கருதி ஒவ்வொரு பாடலின் முதல் வரியும் இறுதியில் மடங்கி பாடப் படுவதாகக் கருதலாம். இப்பாடல் பந்துவராளி இராகத்தில் பாடப்படுகிறது. இந்த இராகத்தின் முழு வடிவத்தை ஒவ்வொரு பாடலிலும் புகுத்த வேண்டும் என்ற நோக்கம் கருதியும் முதல் வரி இறுதியில் மடங்கி பாடப்படுவதாகக் கருதலாம். பாடலின் சுரதாள குறிப்பினை பின்இணைப்பில்

காணலாம்.

**காந்தார பஞ்சமம்**

இப்பண்ணில் இரண்டு பதிகங்கள் உள்ளன. அவை வருமாறு :

முளைக்கதிர் இளம்பிறை - திருஅதிகை வீரட்டானம்
சொல் துணை வேதியன் - பொது

ஒவ்வொரு பதிகத்திலும் 10 பாடல்கள் காணப்படுகின்றன. "முளைக்கதிர்" எனத் தொடங்கும் பதிகத்தின் 9,10 ஆம் பாடல்கள் தருமபுரம் சுவாமிநாதன் பாடியுள்ள ஒலிநாடாவில் உள்ளன.[6]

இப்பாடலின் இசை அமைப்பு குறிப்பிடத்தகுந்தது. ஒரு பதிகத்தின் இரண்டு பாடல்களை எடுத்து, அதாவது எட்டு வரிகளை பல்லவி இசை இரண்டு வரிகளுக்கும், அனுபல்லவி இசை இரண்டு வரிகளுக்கும், சரணம் அடுத்த பாடலின் முதல் இரண்டு வரிகளுக்கும் அமைக்கப்பட்டு உள்ளது. 7,8 வரிகள் அனுபல்லவி போலாறு பாடப் பெறுதல் வேண்டும். இவ்வாறாக ஒரு கீர்த்தனை இசை அமைப்பில் இப்பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன.

இப்பாடல்கள் இதுவரையில் சுரதாள குறிப்புடன் வெளிவராமையால், இங்கு இவற்றிற்குச் சுரதாள குறிப்பு அமைத்துக் கொடுக்கப்படுகின்றது.

| | |
|---|---|
| பண் | : காந்தார பஞ்சமம் |
| இராகம் | : கேதார கௌளை<br>(28வது மேளகர்த்தாவாகிய<br>அரிகாம்போதியில் பிறந்தது) |
| ஆரோசை | : சரிமபநிச் அமரோசை : ச்நிதபமகரிச |
| தாளம் | : ஆதி |

| /4 | 0 | 0 |
|---|---|---|

**பல்லவி**

| | | |
|---|---|---|
| ; ச்சாச்சா சநிரிச் நிதபா | ;மபாதபா | தபமகரீரீ |
| . வெறிஉறு வி.ரி. ச.டை | .புர . ள. | வீ. . . சிஓர் |

6. மூவரின் தேவாரம் தருமபுரம் ப.சுவாமிநாதன், 4 பாகங்களில் வாணி ஒலி நாடாக்கள் எண் 4SE1, 107,108, சென்னை.

| | | |
|---|---|---|
| ; ரிபாமகா ரீரிம கரிசா | ; ரீமாபா | ச்ா ; நிதபா |
| . பொறிஉறு வி.ரி.சடை | அரைய | தா . க.வும் |

**அனுபல்லவி**

| | | |
|---|---|---|
| ; ச்ரிச் நிதப பநிச்ா ரீரீ | ;ரி;மாக்ரீ | ச்ரிக்ரி ரிம்க்ரி |
| . நெறி உறு குழல் உமை | .பா.கம் | ஆ . . . க . வும் |
| ச்ா | ;ரிப்ாம்க்ா | ரீம்க் க்ரிச்ா |
| . " | .பா.கம் | ஆ..க.வும் |
| ;பரீச்ச்ாச்நிரிச் நிதபா | ;பாநீமா | பாநீநீச்ா |
| .கிறிபட உ.ழி. தர்வர் | .கெடில | வா.ணரே |

**சரணம்**

| | | |
|---|---|---|
| ;,நீநிநீ நீச்ா ரீநீ | ;,நிச்ா நீ | நிச்ரிநிரிச்நித |
| ..பூண்டதேர் அரக் கனை | ..பொரு இல் | மால்...ல்வ |
| பா,-ச்ாநிதா பாதபமகரிம | கரிரீமாபா | ச்ா;நிதபா |
| ரை-தூண்டுதோள் அவைபட.. | ..அடர்த்த | தா ளி.னார் |

(முன்பாடலின் இறுதி இரண்டு வரிகளைப் போன்று கீழ்க்கண்டவற்றைப் பாடவும்)

**ஈண்டுநீர்க் கமலவாய் மேதி பாய்தர**
**கீண்டு தேன் சொரிதரும் கெடில வாணரே.**

இவ்வாறு தேவாரப் பாடல்களைக் கீர்த்தனைப் பாடல்களாக்கும் முயற்சி வரவேற்கத் தகுந்தது. ஆனால் பிற கீர்த்தனையைப் போன்று பல்லவி இரண்டு முறைப்பாடுதல்; அநு பல்லவிக்குப் பிறகு பல்லவியைத் திரும்பப் பாடுதல்; மற்றும் சரணத்திற்குப் பிறகு பல்லவியைத் திரும்பப் பாடுதல் போன்ற அமைப்பு கீர்த்தனையாக்கம் செய்யப்பட்ட தேவாரப் பாடல்களில் காணப்படவில்லை. காரணம் கருத்துத் தொடர்ச்சி தடைபடாமல் இருக்க வேண்டும் என்பதற்காகவும் பண் உருவத்தை முழுமையாக தடைபடாமல் காட்ட வேண்டும் என்பதற்காகவுமே என்று கூறலாம்.

அடுத்து, "சொல்துணை வேதியன்" எனத் தொடங்கும் பதிகம், "நமச்சிவாயத் திருப்பதிகம்" என்ற சிறப்புப் பெயர் பெற்று அழைக்கப்படுகிறது. நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்தின் சிறப்பினை விளக்குவதால்

இப்பெயர் பெற்றது. ஒவ்வொரு பாடலின் இறுதி சொற்றொடரும் "நமச்சிவாயவே" என்று முடிகிறது. இப்பாடலின் இசை அமைப்பு, திருஞானசம்பந்தரின் "இடரினும் தளரினும்" என்ற பாடலின் இசையுடன் ஒப்பிடத் தகுந்ததாக உள்ளது.[7] இப்பாடல் வருமாறு :

சொல் துணை வேதியன், சோதி வானவன்,
பொன்-துணைத் திருந்து அடி பொருந்தக் கைதொழ
கல்-துணைப் பூட்டி ஓர் கடலில் பாய்ச்சினும்
நல்-துணை ஆவது நமச்சிவாயவே!

## இப்பாடலோடு தொடர்புடைய வரலாறு

பட்டத்து யானையை திருநாவுக்கரசர் மேல் விட்ட பிறகும், நாவுக்கரசரின் பாடல் வன்மையால் அப்பட்டத்து யானை அவரை வலம் வந்து வழிபட்டதைக் கண்ட சமணத் துறவிகள் மன்னனிடம் சென்று தருமசேனர் சமண மதத்திலிருந்தபோது தாம் கற்ற மந்திரத்தைக் கொண்டு நம் வலிமையை கெட்டொழித்து நமது புகழுக்கும் இழிவு தேடுகிறான் என்று கூறி மன்னனை கோபமடையச் செய்கின்றனர். அரசன் கோபமுற்று "இனி அவனுக்கு செய்யத்தகுந்த தண்டனை யாது?" என்று கேட்கின்றார். சமணர்கள் "அவனைக் கல்லோடு சேர்த்துக் கயிற்றினால் பிணித்துக் கடலில் தள்ள வேண்டும்" என்று கூறுகின்றனர். அரசனும் அவ்வாறே ஆணையிடுகின்றான்.

கொலை வெறி கொண்ட சமணர்கள், அரசன் ஆணையை மேற்கொண்டு திருநாவுக்கரசரை அழைத்துச் சென்று கல்லோடு பிணித்துப் படகிலேற்றிக் கடல் நடுவே தள்ளிவிட்டு திரும்புகின்றனர். சமணர்கள் சென்ற பின்னர் திருநாவுக்கரசர் "எப்பரிசாகினும் ஆக ஏத்துவன் எந்தையை" என்று கூறி ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதுகின்றார். "சொற்றுணை வேதியன்" எனத் தொடங்கும் நமச்சிவாயத் திருப்பதிகத்தைப் பாடி போற்றுகின்றார். இப்பதிகத்தின் முதற்பாடலில்,

"கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சிவாயவே"

7. திருஞானசம்பநதா தேவாரம் - திருவாவடுதுறை தலம் 2ம் திருமுறை பதிகம் - 26, பாடல் 1.

என்னும் குறிப்பில் இந்நிகழ்ச்சியை அகச்சான்றாகக் குறிப்பிட்டுள்ளார்.

**பழந்தக்க ராகம்**

இப்பண்ணில் பின்வரும் இரண்டு பதிகங்கள் காணப்படுகின்றன. இவை ஒவ்வொன்றும் பத்துப் பாடல்கள் கொண்டு விளங்குகின்றன.

சொல் மாலை பயில்கின்ற - திருப்பழனம்
விடகிலேன் அடிநாயேன் - திருஐயாறு

"சொல் மாலை" எனத் தொடங்கும் பாடல் மிகப் பிரபலமாக இசையரங்குகளில் பாடப்பட்டு வருகின்றது. தற்போதைய ஆரபி இராகத்திற்கு நேரான இசை அமைப்பில் இஃது பாடப்பட்டு வருகின்றது. இப்பதிகத்தின் ஐந்தாம் பாடலில் பின்வரும் இசைக்குறிப்பு காணப்படுகிறது.

"பண் பொருந்த இசை பாடும் பழனம் சேர் அப்பனை"

இக்குறிப்பில் பண் பொருந்த இசைபாடுதலின் முக்கியத்துவத்தைக் குறிப்பிடுகிறார். இக்கருத்து,

"பண்என்னாம் பாடற்கியைபின்றேல் - கண்என்னாம்
கண்ணோட்ட மில்லாத கண்"[8]

என்னும் திருக்குறளுடன் ஒப்பிடத்தகுந்த வகையில் உள்ளது.

"விடகிலேன் அடிநாயேன்" எனத் தொடங்கும் பாடலில், சைவ சமயம் விட்டு சமண சமயம் பற்றிக் காலங்கழித்த செயலைக் குறித்து வருந்துவதாக உள்ளது. இப்பாடல் வருமாறு :

"விடகிலேன், அடிநாயேன்; வேண்டியக்கால் யாதொன்றும்
இடகிலேன்; அமணர்கள்தம் அறவுரை கேட்டு அலமந்தேன்
தொடர்கின்றேன், உன்னுடைய தூமலர்ச் சேவடி காண்பான்
அடைகின்றேன் ஐயாறர்க்கு ஆள்ஆய்நான் உய்ந்தேனே"

இப்பதிகத்தின் இரண்டு முதல் எட்டு வரையிலான ஆறு பாடல்கள் யாப்பு ரீதியில் சிறப்பிடம் பெற்றுத்

8. திருக்குறள் எண். 573, அதி. 58:3.

திகழ்கின்றன. எதுகை, மோனை அணிகள் இவற்றில் அதிக அளவில் இடம்பெறுகின்றன. சான்று,

நணியானே! சேயானே! நம்பானே! செம்பொன்னின்
துணியானே! தோலானே! சுண்ணவெண் நீற்றானே
மணியானே! வானவர்க்கு மருந்து ஆகிப்பிணி தீர்க்கும்
அணியானே! ஐயாறர்க்கு ஆள்ஆய் நான் உய்ந்தேனே

இவ்வித அணிக்கு வடமொழியில் அநுப்ராசம் என்று பெயர் உண்டு. முத்துசுவாமி தீட்சிதரின் அநேக பாடல்களில் இவ் அணி இடம்பெறுகிறது. சான்று : பிலகரி இராக கிருதி பல்லவி.

"காமாக்ஷி வரலெஷ்மி கமலாக்ஷி ஜயலக்ஷ்மி ஸ்ரீ"[9]

மேற் கண்ட தேவாரப் பாடலின் அமைப்பு, மாணிக்கவாசகரின் "முத்தி நெறி அறியாத" என்னும் பாடல் இசை அமைப்பிற்கும் பொருந்த உள்ளது. மரபு வழியாக பாடப்பட்டுவரும் இப்பாடல் மெட்டு ஆரபி இராகத்தில் (பழந்தக்கராகப் பண்ணில்) அமைந்திருப்பது குறிப்பிடத்தகுந்தது. எனவே இசை ரீதியாக மாணிக்கவாசகர், திருநாவுக்கரசர் பாடல்களில் செல்வாக்கு பெற்றுள்ளார் என்று கருத இடமுள்ளது.

**பழம் பஞ்சுரம்**

இப்பண்ணில் பின்வரும் இரண்டு பதிகங்கள் இடம்பெறுகின்றன.

பருவரை ஒன்று சுற்றி - பொது
பற்றற்றார் சேர் பழம் பதியை - பொது

இவை 11 பாடல்களாக அமைகின்றன.

"பருவரை ஒன்று சுற்றி" எனத் தொடங்கும் பதிகம் "தச புராணம்" என்று சிறப்புப் பெயர் பெற்று விளங்குகின்றது. இப்பதிகத்தில் அமைந்துள்ள பாடற் பொருள் பற்றி இப்பெயர் பெற்றுள்ளதாகக் கருதலாம். பத்து புராண கதைகளைப் பாடற் பொருளாகக் கொண்ட இப்பதிகத்தை இசை அரங்கு மட்டுமன்றி ஆடல் அரங்கிலும்

---

9. ரங்க ராமானுஜ ஐயங்கார் ஆர்.ஸ்ரீ கிருதி மணிமாலை இரண்டாம் பாகம். பம்பாய், 1976

இடம்பெறச் செய்யலாம். ஆடல் அரங்கில் இப்பாடல்களின் பொருளுக்கேற்ப அபிநயம் பிடிக்க வாய்ப்புள்ளது.

இப்பதிகம் பழம்பஞ்சுரப் பண்ணில், அதாவது சங்கராபரண இராகத்தில் அமைந்திருப்பினும், ஆடல் அரங்குகளில் இடம்பெறும் போது இப்பதிகத்தின் 11 பாடல்களையும் ஒரே இராகத்தில் பாடும்போது சலிப்பு ஏற்படும். இக்குறையை, இப்பதிகத்தை இராகமாலிகையாக அமைப்பதன்மூலம் நிறைவு செய்யலாம். இரண்டு பாடல்களுக்கு ஒரு பண் என்ற முறையில் இப்பதிகத்தின் 10 பாடல்களை ஐந்து இராகங்கள் கொண்ட இராக மாலிகையாக அமைக்கலாம்.

மேற்கண்ட பதிகம் இன்றுவரை பழம் பஞ்சுரப் பண்ணாகவே கருதப்படுகிறது. ஆனால் இப் பதிகத்தின் சந்த அமைப்பினை (கட்டளை) ஆராயும்போது இப்பதிகம் பியந்தைக் காந்தாரப் பண்ணாக (வேயுறுதோளி பங்கன் பதிகம் போன்று) இருக்கக்கூடும் என்று கருத இடமுண்டு. இக்கருத்தினை தருமை-யாதீனம் ஸ்ரீலஸ்ரீ குரு மகா சன்னிதானமும், மற்ற பல இசை வல்லுநர்களும் ஏற்றுக் கொண்டுள்ளனர்.

அடுத்து, "பற்றற்றார்சேர்" எனத் தொடங்கும் பதிகம் பாவநாசத் திருப்பதிகம் என்ற சிறப்புப் பெயர் கொண்டு விளங்குகின்றது. இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் இறைவனை நினைந்து உருகும் வகையில் வைத்தேன், மறவேனே, உள்ளம் நிறைந்ததே என்ற தொடர்கள் வந்து, இறுதிப்பாடலின் இறுதி வரியில்,

"எந்தை பெம்மான், என் எம்மான்" "என்பார் பாவம்நாசமே" என்று முடிகின்றது. இதனால் "பாவநாசத் திருப்பதிகம்" என்ற சிறப்புப் பெயரினை ஈற்றுத் தொடரால் பெற்று விளங்குகின்றது.

**இந்தளம்**

"செய்யர்; வெண்நூலர்;"
"எத்தீப் புகினும் எமக்குஒரு தீதுஇலை"
"ஒன்று கொல் ஆம் அவர் சிந்தை உயர்வரை"

ஆகிய மூன்று பதிகங்கள் இப்பண்ணில் அமைந்துள்ளன.

முதலில் குறிப்பிட்ட பதிகம் திருப்புகலூர் தலத்திற்குரியது. இதில் 10 பாடல்கள் உள்ளன. 10 ஆம் பாடலில்,

"கறுத்தார், மணிகண்டம்; கால்விரல் ஊன்றி
இறுத்தார், இலங்கையர் கோன் முடிபத்தும்
அறுத்தார், புலன்ஐந்தும்; ஆயிழைபாகம்
பொறுத்தார்-புகலூர்ப் புரிசடையாரே"

என்றவாறு இராவணன் பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

இரண்டாவதாக குறிப்பிட்ட பதிகம் திருஆரூர் அரநெறி என்னும் தலத்திற்குரியது. 11 பாடல்களைக் கொண்ட இப்பதிகம் எதுகை, மோனை, இயைபு அணிகள் நிரம்பப் பெற்று அமைந்துள்ளது. சான்றாக இப்பதிகத்தின் ஒன்பதாம் பாடலைக் காணலாம்.

"முடிவண்ணம் வான மின் வண்ணம்; தம்மார்பின்
பொடிவண்ணம் தம் புகழ் ஊர்தியின் வண்ணம்;
படிவண்ணம் பாற்கடல் வண்ணம்; செஞ்ஞாயிறு
அடிவண்ணம்-ஆரூர் அரநெறியார்க்கே"

அடுத்து, "ஒன்று கொல் ஆம் அவர் சிந்தை உயர்வரை" எனத் தொடங்கும் பதிகம், "விடம் தீர்த்த திருப்பதிகம்" என்னும் சிறப்புப் பெயருடன் விளங்குகிறது. ஒவ்வொரு பாடலும், ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்பது போன்ற எண்ணுடன் தொடங்குகின்றது. இவ்வாறு 10 பாடல்கள் இப்பதிகத்தில் உள்ளன.

**இப்பதிகம் எழுந்த வரலாறு**

சமணர்களின் சூழ்ச்சியால் பல்வேறு துன்பங்களுக்கு ஆளாகிய திருநாவுக்கரசர் அத்துன்பங்களையெல்லாம் இறையருளால் வென்றார். தலங்கள் தோறும் சென்று இறைவனை பல பாடல்களால் போற்றி மகிழ்ந்து வந்தார்.

ஒரு சமயம் திங்களூர் என்ற ஊருக்கு வந்த திருநாவுக்கரசர், அங்குள்ள தண்ணீர்பந்தல், கிணறு, குளம், அறச்சாலைகள் யாவும் திருநாவுக்கரசர் என்ற தம் பெயரைக் கொண்டு விளங்குவதைக் கண்டு இவற்றை எல்லாம் அமைத்தவர் யார் என்று அவ்வூரிலுள்ளோரிடம்

கேட்க, அவர்களும் திங்களூரைச் சேர்ந்த அப்பூதி அடிகள் என்ற அந்தணரே ஆவார் என்று மறுமொழி பகர்ந்தனர். இதைக் கேட்ட திருநாவுக்கரசர் அப்பூதி அடிகள் இல்லத்திற்குச் சென்றார்.

அப்பூதி அடிகள் தம் இல்லத்திற்கு வந்திருப்பவர், தாம் வணங்கும், தம் குலதெய்வமான திருநாவுக்கரசு பெருமானே என்பதை அறிந்து அளவிலா மகிழ்ச்சியுற்றார். தம் மனைவி, மக்கள் முதலிய சுற்றத்தாருடன் திருநாவுக்கரசரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி தம் இல்லத்தில் திருவமுது செய்யுமாறு வேண்டினார். அப்பரும் அவருடைய அன்புக்கு கட்டுப்பட்டவராகிறார்.

திருவமுது அறுசுவையும் பொருந்தி வெவ்வேறு சிறப்பினில் ஆக்கப் பெற்றது. அப்பூதி அடிகள் "திருநாவுக்கரசு" என்னும் பெயருடைய தம் மூத்த புதல்வனை தோட்டத்திற்குச் சென்று வாழைக் குருத்தை அரிந்து வரும்படி அனுப்புகின்றார். அவனும் தம் வீட்டின் பின்புறத்திலிருந்த தோட்டத்திற்குச் சென்று வாழைக் குருத்தை அரிகின்றான். அப்போது அதனடியில் மறைந்திருந்த பாம்பு அவனைத் தீண்டியது. அதைச் சிறிதும் பொருட்படுத்தாமல் விரைந்து வந்து வாழைக் குருத்தைத் தம் தாயிடம் கொடுத்தான். உடனே நஞ்சு தலைக்கேறி மயங்கி விழுந்து உயிர் துறந்தான். அப்பூதி அடிகளும், அவர்தம் துணைவியாரும், பெருமான் திருவமுது உண்பதற்கு தடையேற்பட்டதே என்று மனங்கலங்கி தம் மகனின் சவத்தை வீட்டின் ஒருபுறத்தில் ஒளித்து வைத்து திருநாவுக்கரசரை அமுது உண்ண அழைத்தனர்.

இறைவன் திருவருளால் நடந்ததையுணர்ந்த நாவுக்கரசர், அப்பூதி அடிகள் மகனின் சவத்தைக் கோயிலுக்குக் கொணரச் செய்தார். அந்த உடலை நோக்கிச் சிவபெருமான் அருள் புரியும் வண்ணம் "ஒன்று கொலாமவர்" எனத் தொடங்கும் இப்பதிகத்தைப் பாடுகின்றார்.

ஒன்று கொல்ஆம் அவர் சிந்தை உயர்வரை;
ஒன்று கொல்ஆம் உயரும் மதி சூடுவர்

ஒன்று கொல்ஆம் இடு வெண்தலை கையது;
ஒன்று கொல்ஆம் அவர் ஊர்வது தானே

இரண்டு கொல் ஆம் இமையோர் தொழு பாதம்;
இரண்டு கொல் ஆம் இலங்கும் குழை பெண் ஆண்
இரண்டு கொல் ஆம் உருவம்; சிறுமான், மழு,
இரண்டு கொல் ஆம் அவர் ஏந்தின தாமே.

மூன்று கொல் ஆம் அவர் கண்நுதல் ஆவன
மூன்று கொல் ஆம் அவர் சூலத்தில் மொய் இலை
மூன்று கொல் ஆம் கணை கையதுவில் நாண்
மூன்று கொல் ஆம் புரம் எய்தின தாமே.

நாலு கொல் ஆம் அவர் தம் முகம் ஆவன
நாலு கொல் ஆம் சனனம் முதல் தோற்றமும்
நாலு கொல் ஆம் அவர் ஊர்தியின் பாதங்கள்
நாலு கொல் ஆம் மறை பாடின தாமே.

அஞ்சு கொல் ஆம் அவர் ஆடு அரவின் படம்
அஞ்சு கொல் ஆம் அவர் வெல்புலன் ஆவன
அஞ்சு கொல் ஆம் அவர் காயப்பட்டான் கணை
அஞ்சு கொல் ஆம் அவர் ஆடின தாமே.

ஆறு கொல் ஆம் அவர் அங்கம் படைத்தன
ஆறு கொல் ஆம் அவர் தம் மகனார் முகம்
ஆறு கொல் ஆம் அவர் தார்மிசை வண்டின்கால்
ஆறு கொல் ஆம் சுவை ஆக்கின தாமே.

ஏழு கொல் ஆம் அவர் ஊழி படைத்தன
ஏழு கொல் ஆம் அவர் கண்ட இருங்கடல்
ஏழு கொல் ஆம் அவர் ஆளும் உலகங்கள்
ஏழு கொல் ஆம் இசை ஆக்கின தாமே.

எட்டு கொல் ஆம் அவர் ஈறில் பெருங்குணம்
எட்டு கொல் ஆம் அவர் சூடு மின மலர்
எட்டு கொல் ஆம் அவர் தோளிணை யாவன
எட்டு கொல் ஆம் திசை யாக்கினதாமே.

ஒன்பது போல் அவர் வாசல் வகுத்தன
ஒன்பது போல் அவர் மார்பினில் நூல் இழை

ஒன்பது போல் அவர் கோலக் குழல்சடை
ஒன்பது போல் அவர் பார்இடம் தானே.

பத்துக் கொல் ஆம் அவர் பாம்பின்கண், பாம்பின்பல்,
பத்துக் கொல் ஆம் எயிறு(ந) நெரிந்து உக்கன
பத்துக் கொல் ஆம் அவர் காயப்பட்டான் தலை
பத்துக் கொல் ஆம் அடியார் செய்கை தானே.

பத்துப் பாடல்களைப் பாடியவுடன், உயிர்துறந்த திருநாவுக்கரசு உறக்கம் நீங்கி எழுபவனைப் போன்று உயிர் பெற்றெழுந்தான். எழுந்து திருநாவுக்கரசரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.

இப்பதிகம் சிவபெருமானின் திருமேனியில் அமைந்த அளப்பரிய தோற்றங்களை ஒன்று முதல் பத்து ஈறாக வைத்து எண்ணும் நிலையில் அமைந்தது. அப்பூதி அடிகளின் மகனின் உடலில் ஏறிய விடத்தை இப்பதிகம் போக்கியதால் இஃது "விடந்தீர்ந்த திருப்பதிகம்" என்ற சிறப்புப் பெயருடன் வழங்கப்பெறுகிறது.

விடம் தீர்க்கும் அருமருந்தான இப்பதிகத்தை இசையோடு பாடி நாமும் பயனுறலாம். இவ்வகையில் முதற்பாடல் எளிய இசை மெட்டில் சுரதாள குறிப்புடன் இங்கு கொடுக்கப்படுகிறது.[10]

பண் : இந்தளம்
தாளம் : ஆதி
இராகம் : மாயாமாளவ கௌளை

| /4 | 0 | 0 |
|---|---|---|
| ; , சாசரீ காகாமா; | ;மா; மா | மாமாப மகா |
| ஒன்று கொலாம்அவர் | .சிந். தை | உயர் வரை |
| ; , பாகாமாபா,ம தபதா | ;கமபதபம | மகரீ பமகரி |
| ஒன்றுகொ லாம்உயரும் | .ம.தி... | சூ..டு..வர் |
| சரீ-பாகமா பதந் தாபா | ; ,பாத பா | மா; தபபம |
| . . ஒன்றுகொலாம் இடு | வெண்தலை | கை ய.து |
| கா,-மாமமா மா,மதபதா | ;கமாபமா | மகரீ பமகரி |
| . . ஒன்றுகொ லாம்அவர் | ஊர்வது | தா . . னே. . |

10 இப்பாடலுக்கு நூல் ஆசிரியரால் இசையமைக்கப்பட்டுச் சுரதாளக் குறிப்பு வரையப்பட்டுள்ளது.

சதி

இப்பதிகத்தின் பின்வரும் மற்ற பாடல்களையும் இதே இசை அமைப்புடன் பாட வேண்டும்.

**சீகாமரம்**

இப்பண்ணில் பின்வரும் இரண்டு பதிகங்கள் காணப்படுகின்றன.

1. சூலப்படையானை
2. காண்டலே கருத்துஆய் நினைந்திருந்தேன்

இவ்விரண்டு பதிகங்களும் திருஆரூர் தலத்தில் பாடப் பெற்றவை. முதலில் குறிப்பிட்ட பதிகத்தில் ஒவ்வொரு பாடலின் இறுதி சீரும், "நான் கண்டது ஆரூரே" என்று நிறைவடைகிறது. பதினொரு பாடல்களைக் கொண்டு விளங்கும் இப்பதிகத்தின் பத்தாம் பாடலில்,

"தான் தழுவு கையன், தாமரைப் பூஞ் சேவடியன்
கோள் தால வேடத்தன், கொண்டது ஓர் வீணையினான்
ஆடு அரவக் கிண்கிணிக் கால் அன்னான் ஓர் சேடனை
ஆடும் தீக் கூத்தனை-நான் கண்டது ஆரூரே"

என்பது போல் இராவணனைப் பற்றிய குறிப்பு காணப் படுகிறது.

இப்பாடலைச் சுரதாள குறிப்புடன் பின் இணைப்பில் காணலாம். "காண்டலே கருத்தாய்" எனத் தொடங்கும் பதிகம் பத்து பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலின் இறுதி வரியின் இறுதி தொடர், "திருஆரூர் அம்மானே" என்று நிறைவடைகிறது. பத்தாம் பாடலில் இராவணன் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. இப் பாடலின் மூன்றாம் வரியில்,

"பாடுவார் பணிவார் பல்லாண்டு இசைகூறு பத்தர்கள்
சித்தத்துன்புக்கு
தேடிக்கண்டு கொண்டேன்; திருஆரூர் அம்மானே"

என்றவாறு இசைக்குறிப்பு காணப்படுகிறது.

**குறிஞ்சி**

குறிஞ்சிப் பண்ணில் "முத்துவிதானம்" எனத்

தொடங்கும் ஒரு பதிகம் மட்டுமே இயற்றப்பட்டுள்ளது. இப்பதிகம் திருஆரூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்களைக் கொண்ட இப்பதிகத்தில் ஒவ்வொரு பாடலின் இறுதிவரி இறுதித் தொடரும், “ஆதிரை நாளால் அது வண்ணம்” என்று நிறைவடைகின்றது. இப்பதிகம் “திருஆதிரைத் திருப்பதிகம்” என்ற சிறப்புப் பெயரால் வழங்கப்படுகிறது.

இப்பாடல் ஓதுவார்களால் பாடப்பட்டு வந்திருப்பினும், சுரதாள குறிப்புடன் இதுவரையில் நூல்களில் வெளிவரவில்லை. எனவே இங்கு சுரதாள குறிப்புடன் கொடுக்கப்படுகிறது.

பண் : குறிஞ்சி
தாளம் : திச்ரதிரிபுடை
இராகம் : அரிகாம்போதி
(28ஆம் மேளகர்த்தா இராகம்)

| /3 | 0 | 0 |
|---|---|---|
| ;பா; மாகாமா | பா ; ; ; | ; ; பா ; |
| முத் து . வி | தா . . . | . . ணம். |
| ;தாநீ தாபா ; | பாமா பாதா | தாநீதாபா |
| மணி பொன்க | வ . . . | ரி . . . |
| மா . பாமா ; ; மா | கமபா; மப | தா; பதநித |
| . முறை . . . | யா . . லே | . . . . . |
| பம-தா தா; தா; | தா ; ; ; | தாநீ தபமப |
| . . பத் தர் க | ளோ . . . . | . . . டு . . . |
| ,ம-தாதா; தா; | தாநீ தநிச்ா | நிச்ரீ; ச்ா |
| . . பத்தர் க | ளோ . . . . | . . டு . . |
| ; கா; மாபா; | ; ; ; கம | பதநிச்ா, நித |
| . பா வையர் | . . . சூ. | ழ . . . . . . . |
| பம-காமா கரீ, சா | பமகரி சரிகம | பதநிச் நிச்ரிச் நித |
| ..பலிப் பின் | னே.. .... | ..... ..... .. |
| பம – தா தா; தா; | தா நீ தநிச்ா | நிச்ரீ; ச்ா |
| . . பத்தர் க | ளோ . . . . | டு . . . . . |
| ;கா; மா பா; | ; ; ; கம | பதநிச்ா, பா |
| .பா வையர் | . . . சூ . | ழ . . . |

;காமா கரீ, கா; ; ; ; ; ; ; ; ; ;
.பலி பின். னே. . . . . . . . . . . . . . .

(மற்ற இரண்டு அடிகளையும் இதே போல் பாட வேண்டும்)

வித்தகக் கோல வெண்தலை மாலை விரதிகள்
அத்தன் ஆரூர் ஆதிரைநாளால் அதுவண்ணம்!

**முடிவுரை**

இதுகாறும் கூறியவற்றில் திருநாவுக்கரசர் இயற்றிய தேவாரப் பதிகங்களுள் 21 பதிகங்கள் பண்ணாங்கமாக பாடப்படுபவை என்றும் இவை 10 பண்களில் அமைக்கப்பட்டுள்ளன என்றும் அறிய முடிகிறது. இவ்வியலில் இப்பண்கள் பாடல்களின் அமைப்பிற்கும் கருத்திற்கும் பொருந்தி நிற்கும் தன்மை ஆராயப்பட்டுள்ளது. இதுவரை சுரதாள குறிப்புடன் நூல்களில் வெளிவராத ஐந்து பண்களில் அமைந்த பாடல்களுக்குச் சுரதாள குறிப்பு அமைக்கப்பட்டுள்ளன. இவ்வகையில் இப்பாடல்கள் இசை அரங்கிலும் ஆடல் அரங்கிலும் இடம்பெறும் வாய்ப்புகளும் ஆராயப் பட்டுள்ளன.

இனி சுத்தாங்கமாக பாடப்படும் பாடல்களின் இசைச் சிறப்புக்களை மேற்கொண்டு வரும் இயல்களில் விளங்கக் காணலாம்.

# 3

# திருநாவுக்கரசர் திருநேரிசைப் பதிகங்களின் இசைச் சிறப்பு

திருநாவுக்கரசர் இயற்றியுள்ள பதிகங்களில் தாளத்துடன் பண்களில் அமைந்த பதிகங்கள் மட்டுமன்றி தாளம் போடப்படாமல் பாடப்படும் பதிகங்களும் அடங்கும். இவை திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் என்ற வகைகளில் அமைந்துள்ளன. இந்நான்கு வகைகளில் அமைந்துள்ள பதிகங்களுள் திருநேரிசைப் பதிகங்கள் நான்காம் திருமுறையில் 22 முதல் 79 வரையிலடங்கும். இவற்றின் இயற்சிறப்பும், இதனோடு பொருந்திய இசைச்சிறப்பும், இப்பாடல்களில் காணப்படும் இசைக்குறிப்புக்களும் இவ்வியலில் ஆராயப்படுகிறது.

நேரிசையை யாப்பு வகை என்று இயற்புலவர்கள் கூறுகின்றனர். "நேரிசை பாடி அறுபதம் உறங்கும்" என்று வண்டுகள் நேரிசையைப் பாடியதாக திருஞானசம்பந்தர் பல இடங்களில் பாடியுள்ளார். திருமுறை கண்ட புராணத்தில் 39 ஆம் செய்யுளில் "நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு நாட்டிலிரண்டும்" என்ற தொடர் வருகிறது.[1] இதில் நேரிசையாகிய கொல்லி என்பதனால் நேரிசையும் கொல்லியும் ஒன்று என அறியலாம். மேலும் இதில் நேரிசைக்கு இரண்டு கட்டளைகள் கூறப்பட்டுள்ளதையும் அறிய முடிகிறது. இவ்விரண்டு கட்டளைகள் என்பது கொல்லிப் பண்ணில் அமைந்த இரண்டு வகையான இசை மெட்டுக்கள் என்று கருதலாம்.

1. திருமுறை கண்ட புராணம் - 39 ஆம் செய்யுள், திருப்பனந்தாள் காசிமடம் வெளியீடு, எண் - 26.

ஓதுவார்கள் கொல்லிப் பண்ணை பாடுவதிலிருந்து இப்பண் நவரோசு இராகத்திற்குப் பொருத்தமாக உள்ளமையை அறிய முடிகிறது.[2]

கொல்லிப் பண் நேரிசைக் கொல்லி, விருத்தக்கொல்லி என்று இரண்டு வகையாக வழக்கத்தில் கூறப்பட்டு வருகிறது. நான்காம் திருமுறையில் திருநேரிசையுடன் திருவிருத்தம் என்ற வகை தேவாரப் பதிகங்களும் இடம் பெற்றிருப்பதால், விருத்தக் கொல்லியை கொல்லிப் பண்ணில் அடங்கிய திருவிருத்தம் என்று கூறுவாருமுளர்.[3]

ஓதுவார்கள் திருநேரிசையை பண்ணாங்கமாகவும், அதாவது தாளத்துடனும், சுத்தாங்கமாகவும், அதாவது தாளம் போடாமல் விருத்தமாகவும் பாடி வருகின்றனர்.

தேவாரப் பதிப்புக்களில் கொல்லி என்று பண் குறித்து இரண்டு பதிகங்கள் காணப்படுகின்றன. மற்ற பதிகங்கள் அனைத்தும் திருநேரிசை என்று குறிப்பிடப்பட்டிருப்பதால் இவை பெரும்பாலும் கொல்லிப் பண்ணில் அதாவது நவரோசு இராகத்தில் சுத்தாங்கமாக பாடப்பட்டு வருவதாகக் கருதலாம்.

இனி, இப்பதிகங்கள் ஒவ்வொன்றினையும் தனித்தனியாக ஆராயலாம்.

கொல்லிப் பண்ணிற்குரியதாக இரண்டு திருநேரிசைப் பதிகங்கள் உள்ளன.

1. செஞ்சடைக் கற்றை முற்றத்து
2. பத்தனாய்ப் பாட மாட்டேன்

மேற்குறிப்பிட்ட இவ்விரண்டு பதிகங்களும், கோயில் என்றழைக்கப்படும் சிதம்பரம் தலத்திற்குரியவை.

"பத்தனாய் பாட மாட்டேன்" எனத் தொடங்கும் பதிகத்தின் இறுதிப்பாடல்,

"மண்உண்ட மாலவ(ன்)னும், மலர் மிசை மன்னினானும்
விண்உண்ட திருஉரு(வ்)வம் விரும்பினார் -காணமாட்டார்;

2 பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும், தமிழ் இசைச் சங்கம், சென்னை, 1974, பக்கம். 50.

3. மேறபடி நூல் பக். 213

திண்ணுண்ட திருவே! மிக்க தில்லைச் சிற்றம்பலத்தே
பண்ணுண்ட பாடலோடும், பரம நீ ஆடும் ஆறே"

என்று பண்ணுண்ட பாடலோடு தில்லைச் சிற்றம்பலத்து இறைவன் ஆடும் பாங்கினைக் குறிப்பிட்டுள்ளார்.

அடுத்து, "இரும்பு கொப்பளித்த யானை" எனத் தொடங்கும் பதிகம், "கொப்பளித்த திருநேரிசை" என்னும் சிறப்புப் பெயர் கொண்டு விளங்குகிறது. இது திருஅதிகை வீரட்டானம் என்னும் தலத்திற்குரியது. இப்பதிகத்தில் பத்து பாடல்கள் அடங்கியுள்ளது. இப்பாடல்களின் ஒவ்வொரு வரியின் இரண்டாம் சீர் "கொப்பளித்த" என்னும் சொல் பயின்று வருவதால் இஃது "கொப்பளித்த திருநேரிசை"தீ என்னும் சிறப்புப் பெயர் பெற்று விளங்குகிறது. பாடல்தோறும் பயின்ற சொற்பொருள் அமைப்பால் இவ்வாறு சிறப்புப் பெயர் பெற்று விளங்குகிறது.

இப்பதிகத்தின் முதற்பாடல் வருமாறு :

"இரும்பு கொப்பளித்த யானை ஈர் உரி போர்த்த ஈசன்
கரும்பு கொப்பளித்த இன்சொல் காரிகை பாகம் ஆக
சுரும்பு கொப்பளித்த கங்கைத் துவலை நீர் சடையில் ஏற்ற,
அரும்பு கொப்பளித்த சென்னி, அதிகை வீரட்டனாரே"

4. "வெண் நிலா மதியம் தன்னை" எனத் தொடங்கும் பதிகம் திருஅதிகை வீரட்டானம் என்னும் தலத்திற்குரியது. பத்து பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் ஆறாவது பாடல் குறிப்பிடத்தகுந்தது இப்பாடல் வருமாறு :

"வரிமுரி பாடி என்றும் வல்லஆறு அடைதும் நெஞ்சே!
கரிஉரி மூட வல்ல கடவுளைக் காலத்தாலே;
சுரிபுரி விரிகுழலாள், துடி இடைப் பரவை அல்குல்
அரிவை, ஓர்பாகம் போலும்-அதிகை வீரட்டனாரே".

இப்பாடலில் வரிமுரி பாடுதலைக் குறிப்பிடுகிறார். வரிமுரி என்பது ஒரு பாடல் வகையாக இருக்கலாம். இளங்கோவடிகள் கானல்வரியில இயற்றியுள்ள முரிவரி என்னும் பாவகையைச் சான்றாக இங்குக் காட்டலாம்.[4]

"பொழிறரு நறுமலரே புதுமணல் விரிமனலே

4. இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகார மூலமும் அடியார்க்கு நல்லார் உரையும், உ.வே.சாமிநாதய்யர் நூல் நிலைய வெளியீடு, சென்னை, 1978. பக் 207.

பழுதரு திருமொழியே பணையிள வனமுலையே"

இயற்பாவிலோ அல்லது இசையிலோ. ஒரு சந்தத்தில் எடுத்து மற்றொன்றில் உடனே மாற்றிப் பாடுவது 'முரி' என்னும் பாவகையிலடங்கும்.

"எடுத்த இயலும் இசையும் தம்முள்
முரித்துப் பாடுதல் முரியெனப் படுமே"

என்பது சிலப்பதிகார உரை மேற்கோளாகும்.[5]

திருஞானசம்பந்தர் இயற்றிய "மாதர் மடப்பிடியும்" எனத் தொடங்கும் திருத்தருமபுர தலத்துப் பதிகம் "முரி" என்னும் இப்பாவகையிலடங்கும். யாழ்முரி என்னும் சிறப்புப் பெயரோடும் விளங்குகிறது.

திருஞானசம்பந்தரிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்த நாவுக்கரசர், ஞானசம்பந்தர் இயற்றிய, "மாதர் மடப்பிடியும்" எனத் தொடங்கும் இப்பதிகத்தை நினைந்து, "வரிமுரி பாடி என்றும் வல்லஆறு அடைதும் நெஞ்சே" என்று பாடினார் போலும்.[6]

5. "நம்பனே! எங்கள் கோவே" எனத் தொடங்கும் பதிகம் திருஅதிகை வீரட்டான தலத்திற்குரியது. இப்பதிகம் திருநாவுக்கரசர் தாம் சைவ நெறி சாராது இருந்ததை நினைந்து வருந்திப் பாடும் வகையில் அமைந்துள்ளது. பத்துப் பாடல்களைக் கொண்ட இப்பதிகத்தின் ஒன்பதாம் பாடல் சான்றாக இங்கு தரப்படுகிறது.

"பிணிவிடா ஆக்கை பெற்றேன்; பெற்றம் ஒன்று ஏறுவானே!
பணிவிடா இடும்பை என்னும் பாசனத்து அழுந்துகின்றேன்;
துணிவுஇலேன்; தூயன் அல்லேன்; தூமலர்ப் பாதம்
காண்பான்
அணியனாய் அறிய மாட்டேன்-அதிகை வீரட்டனீரே!"

6. "மடக்கினார் புலியின் தோலை" எனத் தொடங்கும் பதிகம் திருஅதிகை வீரட்டான தலத்திற்குரியது. ஒன்பது பாடல்களைக் கொண்ட இப்பதிகத்தின் பின்வரும் இரண்டாம் பாடலில் இசைக்குறிப்பு காணப்படுகிறது.

5. சிலம்பு. கானல் வரி (14-16) அரும்பதவுரையாசிரியர் மேற்கோள் செய்யுள்.
6. திருஞானசம்பந்தர் தேவாரம் எண். மூன்றாம் திருமுறை பதிகம் 56 முதல் 66 வரை.

"சூடினார், கங்கை யாளை; சூடிய துழனி கேட்டுஅங்கு
ஊடினாள், நங்கையாளும்; ஊடலை ஒழிக்க வேண்டிப்
பாடினார், சாமவேதம்; பாடிய பாணியாலே
ஆடினார்-கெடில வேலி அதிகை வீரட்டனாரே"

இதில் அதிகை வீரட்டனார் சாம வேதம் பாடியதையும், அவ்வாறு பாடிய தாளத்திற்கேற்ப ஆடியதையும் குறிப்பிடுகிறார். (பாணி-தாளம்)

7. "முன்பெலாம் இளைய காலம்" எனத் தொடங்கும் பதிகம் திருஅதிகை வீரட்டான தலத்திற்குரியது. இப்பதிகம் ஆறு பாடல்களைக் கொண்டுள்ளது. ஆறாவது பாடலில் இராவணனைப் பற்றிய குறிப்புள்ளது.

"மைஞ்ஞலம் அனைய கண்ணாள் பங்கன் மாமலையை
ஓடி
மெய்ஞ் ஞரம்பு உதிரம் பில்க, விசை தணிந்து, அரக்கன்
வீழ்ந்து,
கைஞ்ஞரம்பு எழுவிக் கொண்டு, காதலால் இனிது
சொன்ன
கின்னரம் கேட்டு உகந்தார்-கெடில வீரட்டனாரே"

இராவணன் இசைத்த கின்னர இசையைக் கேட்டு மகிழ்ந்த வீரட்டனாரின் செயல் இங்கு குறிப்பிடப் பட்டுள்ளது.

8. "ஊனினுள் உயிரை வாட்டி" எனத் தொடங்கும்பதிகம் திருச்செம்பொன் பள்ளி தலத்திற்குரியது. பத்து பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் மூன்றாம் பாடலில் பண் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. இப்பாடல் வருமாறு :

"வெள்ளியர்; கரியர்; செய்யர்; விண்ணவர் அவர்கள்
நெஞ்சுள்
ஒள்ளியர்; ஊழிஊழி உலகம் அது ஏத்த நின்ற
பள்ளியர்; நெஞ்சத்து உள்ளார்; பஞ்சமம் பாடி ஆடும்
தெள்ளியர்; கள்ளம் தீர்ப்பார்-திருச் செம்பொன்
பள்ளியாரே"

இவ்வாறுபஞ்சமப் பண் பற்றி குறிப்பிட்டிருந்தாலும்

திருநாவுக்கரசர் பாடிய பதிகங்களில் பஞ்சமப் பண்ணிற்கு உரிய பதிகங்கள் காணப்படவில்லை. திருஞானசம்பந்தர் இயற்றிய பதிகங்களுள் 11 பதிகங்கள் பஞ்சம பண்ணிற்கு உரியவை. அவற்றிலும் பஞ்சம பண் குறிப்பு அடங்கிய திருச்செம்பொன் பள்ளி தலத்தைச் சேர்ந்த பதிகம் ஏதும் காணப்படவில்லை.

திருஞானசம்பந்தர் பாடல்களில் ஈடுபாடு கொண்ட திருநாவுக்கரசர் பஞ்சமப் பண்ணிலும் பதிகங்கள் பாடியிருககலாம். எனவே பஞ்சம பண்ணை அகச் சான்றாகக் காட்டியிருக்கும் இப்பாடல் பஞ்சமப் பண்ணிலேயே இசை அமைய வாய்ப்பாக உள்ளது.[7]

பண் : பஞ்சமம்
தாளம் : ரூபகம்
இராகம் : ஆஉ.றிரி

| 0 /4 | 0 /4 |
|---|---|
| சமா கமா பமா பச்ா | நீ ; தா ; பா ; |
| வெள் ளியர் கரி யர்செய் | யர் . . . . |
| பதா நிநீ ச்ச்ா ச்ரிநி | ச்ா ; ; ; ; ; |
| விண் ணவர் அவர் கள்நெஞ் | சு ் ர . . . . . |
| நீ, நிதா தநீ ச்ரிறி | ச்ா ; ; ; , பபா |
| ஒள் ளியர் ஊ ழிஊ | ழி . . . . உல |
| பா, தபம மா, மமா | கமபம கமகரி ரீ; |
| கம் அது ஈத்தநின் | று . . . . . . |

(மற்ற இரண்டு அடிகளையும் இதே இசை அமைப்புடன் பாட வேண்டும்)

ஆனால் நேரிசைக் குரியது கொல்லிப் பண்ணே என்றிருப்பதால், திருநாவுக்கரசர் இதனைப் பஞ்சமப் பண்ணில் பாடியிருக்க வாய்ப்பில்லை என்றும் பஞ்சமப் பண்ணில் இப்பாடலை ஏற்க மறுப்போருமுண்டு. இஃது மேலும் ஆய்வுக்குரியது.

9. "நங்கையைப பாகம் வைத்தார்" எனத் தொடங்கும் பதிகம் திருககழிப்பாலை தலத்திறகுரியது. பத்து பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் இரண்டாம்

7. ஆசிரியரால் இசை அமைக்கப்பட்டுச் சுரதாளக் குறிபபு வரையப்பட்டுள்ளது.

பாடலில், திருநாவுக்கரசர் இறைவன், தம்மை பண்ணினை பாடவைத்த திறத்தைக் கூறுகின்றார். இப்பாடல் வருமாறு :

"விண்ணினை விரும்ப வைத்தார்; வேள்வியை கேட்க
வைத்தார்;
பண்ணினை பாட வைத்தார்; பத்தர்கள் பயில வைத்தார்;
மண்ணினைத் தாவ நீண்ட மாலினுக்கு அருளும்
வைத்தார்;
கண்ணினை நெற்றி வைத்தார்-கழிப்பாலைச்
சேர்ப்பனாரே"

10. "பொள்ளத்த காயம் ஆய" எனத் தொடங்கும் பதிகம் திருக்கடவூர் வீரட்டம் தலத்திற்குரியது. பத்து பாடல்கள் கொண்ட இப்பதிகம் திருநாவுக்கரசர் தாம் சமணரால் தீநெறி சார்ந்து வாழ்ந்த வாழ்க்கையை எண்ணி வருந்திப் பாடுவதாக அமைந்துள்ளது. இப்பதிகத்தின் இரண்டாம் பாடல் வருமாறு :

"மண் இடைக் குரம்பை தன்னை மதித்து, நீர் மையல் எய்தில்
விண் இடைத் தருமராசன் வேண்டினால் விலக்குவார்ஆர்?
பண் இடைச் சுவைகள் பாடி ஆடிடும் பத்தர்க்கு என்றும்
கண் இடை மணியர் போலும், கடவூர் வீரட்டனாரே"

இப்பாடலில் பாடலின் சுவைகளுக்கேற்ப (இரசம்) பாடி ஆடிடும் பத்தர்களைப் பற்றி குறிப்பிடுகிறார். இதில் பண் என்னும் சொல்லை பாடல் என்னும் பொருளைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

11. "உரித்திட்டார், ஆனையில் தோல் உதிர" எனத் தொடங்கும் பதிகம், திருப்பயற்றூர் தலத்திற்குரியது. பத்து பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் ஒவ்வொரு பாடலின் இறுதிச் சீரும் "திருப்பயற்றூரனாரே" என நிறைவடைகின்றது. இப்பதிகத்தின் பத்தாம் பாடலில், இராவணனை பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

"மூர்த்திதல மலையின் மீது போகாதா, முனிந்து நோக்கி,
பார்த்து தான் பூமி மேலால் பாய்ந்து, உடன் மலையைப்
பற்றி,
ஆர்த்திட்டான் முடிகள் பத்தும் அடர்த்துநல் அரிவைஅஞ்சத்
தேத்தெத்தா என்னக் கேட்டார்-திருப்பயற்றூரனாரே"

இப்பதிகத்தின் நான்காம் பாடலில்,

....சாமுண்டி சாமவேதம்
கூத்தொடும் பாட வைத்தார்''

என்று சாமவேதம் பாட வைத்தமையைக் குறிப்பிடுகிறார்.

12. "இந்திரனோடு தேவர் இருடிகள்" எனத் தொடங்கும் பதிகம் திருமறைக்காடு தலத்திற்குரியது. பத்து பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் ஐந்தாம் பாடல் வருமாறு :

''விண்ணினார் விண்ணின் மிக்கார் வேதங்கள் விரும்பி ஓதப்
பண்ணினார் கின்னரங்கள் பத்தர்கள் பாடி ஆடக்
கண்ணினார் கண்ணினுள்ளே சோதியாய் நின்ற எந்தை
மண்ணினார் வலம்கொண்டு ஏத்தும் மாமறைக் காடனாரே''

இதில் கின்னர வாத்தியங்களும் பக்தர்கள் பாடி ஆடும் குறிப்பு காணப்படுகிறது. இப்பதிகத்தின் ஆறாம், ஏழாம் பாடல்களில் மேலும் இசைக்குறிப்பு காணப்படுகிறது. ஆறாம் பாடலின் இரண்டாம் வரியில், "தம்கையில் வீணை வைத்தார்" என்றவாறு வீணை பற்றிய குறிப்பு காணப்படுகிறது. ஏழாம் பாடல், "கீதராய், கீதம் கேட்டுக் கின்னரம் தன்னை வைத்தார்" என்றவாறு கீதத்திற்கேற்றவாறு கின்னர வாத்திய ஒலியை இசைத்த குறிப்பு காணப்படுகிறது. இங்கு கீதம் என்பது இசைப்பாடல் என்று பொருள்படுவதாகக் கொள்ளலாம்.

13. "தேரையும் மேல் கடாவி" எனத் தொடங்கும் பதிகம் திருமறைக்காடு தலத்திற்குரியது. பத்து பாடல்கள் கொண்ட இப்பதிகம் முழுவதும் இராவணனை இறைவன் தம் காலின்கீழ் அழுத்தியமையும், இராவணன் தம் கை நரம்புகளை கொண்டு இசையெழுப்பி இறைவனை மகிழ்வித்த நிகழ்ச்சியுமே பொருளாகக் கொண்டுள்ளது. இஃது அபிநயத்திற்கு ஏற்ற வகையில், ஒரு நல்ல நாட்டியத்திற்கு ஏற்றதொரு நாட்டிய இசைப்பாடலாக மிளிர்கின்றது. இப்பதிகத்தின் பத்தாம் பாடல் வருமாறு :

''கங்கைநீர் சடையுள் வைக்கக் காண்டலும் மங்கை ஊட
தென்கையான் தேர் கடாவிச் சென்று எடுத்தான், மலையை

முன்கை மாநரம்பு வெட்டி முன் இருக்கு இசைகள் பாட
அம்கை வாள் அருளினான் ஊர்-அணி மறைக்காடு தானே"

இவ்வாறு நாட்டியத்தில் பயன்படுத்தும்போது பத்து பாடல்களையும் கொல்லிப் பண்ணிலேயே பாடுவது அவ்வளவு பொருத்தமாக இராது. எனவே இராகமாலிகையாக அமைத்து இப்பதிகத்தைப் பாடலாம். அல்லது ஒரு பாடலைச் சுத்தாங்கமாகவும் மற்றதை பண்ணாங்கமாகவும் மாறிமாறி பாடலாம். சுத்தாங்கத்திற்கு அபிநயமும், பண்ணாங்கத்திற்கு கால்தொழில்களும் செய்யப்படும்போது இப்பதிகம் நாட்டிய இசையரங்கில் ஒரு நல்ல வரவேற்பை பெற வாய்ப்பிருக்கும்.

14. "காடுஉடைச் சுடலை நீற்றர்" எனத் தொடங்கும் பதிகம் திருஇடை மருது தலத்திற்குரியது. இப்பதிகத்தின் நான்காம் பாடல் வருமாறு :

"விண்ணினார்; விண்ணின் மிக்கார் வேதங்கள் நான்கும் அங்கம்,
பண்ணினார்; பண்ணின் மிக்க பாடலார்; பாவம் தீர்க்கும்
கண்ணினார்; கண்ணின் மிக்க நுதலினார்; காமற் காய்ந்த
எண்ணினார்; எண்ணின் மிக்கார்-இடைமருது இடம் கொண்டாரே"

இப்பாடலில் இறைவன் வேதங்களை நான்கு அங்கமாகப் பண்ணியமையும், அவற்றைப் பாடுவதில் வல்லமை பெற்ற திறத்தையும் எடுத்து உரைக்கின்றார். ஐந்தாம் பாடலில் வேதங்கள் நான்கையும் விண்ணுலகோர் பரவி ஏத்துவதையும், பூதங்கள் பாடுவதையும் அதற்கேற்ப இறைவன் ஆடும் பெற்றிமையையும் உரைக்கின்றார்.

15. "ஆடினார் ஒருவர் போலும்" எனத் தொடங்கும் பதிகம் திருப்பழனத் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் மூன்றாம் பாடல் வருமாறு :

"கண்டராய் முண்டர் ஆகி கையில் ஓர் கபாலம் ஏந்தி,
தொண்டர்கள் பாடி ஆடித் தொழுகழல் பரமனார் தாம்;
விண்டவர் புரங்கள் எய்த வேதியர்; வேத நாவர்;
பண்டை என் வினைகள் தீர்ப்பார்-பழனத்து எம் பரமனாரே"

இப்பாடலில் தொண்டர்கள் பாடி ஆடித் தொழும் கழல் உடைய இறைவன், தம்முடைய பண்டைய வினைகள் தீர்க்க வல்லவர் என்று திருநாவுக்கரசர் பாடுகிறார். ஒன்பதாம் பாடலில் இறுதி வரியில், "பண் உலாம் பாடல் கேட்டார்" என்றவாறு பண் பற்றிய குறிப்பு காணப் படுகிறது.

16. "காலனை வீழச்செற்ற" எனத் தொடங்கும் பதிகம் திருநெய்த்தானம் என்ற தலத்திற்குரியது. பத்து பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் ஐந்தாம் பாடலில் இசை குறிப்பு காணப்படுகிறது. அப்பாடல் வருமாறு :

**"காடு இடம் ஆக நின்று கனல் எரிகையில் ஏந்திப்**
**பாடிய பூதம் சூழ, பண் உடன் பலவும் சொல்லி,**
**ஆடிய கழலர், சீர் ஆர் அம்தன் நெய்த்தானம் என்றும்**
**சூடிய குழகனாரைக் கூடும் ஆறு அறிகிலேனே!"**

இப்பாடலின் பொருள் நாயக-நாயகி பாவ அமைப்பில் காணப்படுவது குறிப்பிடத்தகுந்தது. ஏழாம் பாடலில், கால் அதிர் குழல்க்ள் ஆர்ப்ப, கனல் எரிகையில் வீசி, ஞாலமும் குழியநின்று நட்டம் ஆடுகின்ற இறைவனின் திருக்கோலம் வருணிக்கப்படுகிறது.

17. "கங்கையைச் சடையுள் வைத்தார்" எனத் தொடங்கும் பாடல் திருஐயாறு தலத்திற்குரியது. இப்பதிகத்தின் ஒன்பதாம் பாடல் வருமாறு :

**"பூதங்கள் பலவும் வைத்தார்; பொங்கு வெண்நீறும் வைத்தார்**
**கீதங்கள் பாட வைத்தார்; கின்னரம் தன்னை வைத்தார்**
**பாதங்கள் பரவ வைத்தார்; பத்தர்கள் பணிய வைத்தார்**
**ஆதியும் அந்தம் வைத்தார் - ஐயன் ஐயாறனாரே"**

இப்பாடலில் திருநாவுக்கரசர், இறைவன் தமக்கு கீதங்கள் (இசைப் பாடல்கள்) பாட வைத்த திறத்தினையும், கின்னரம் இசைக்க வைத்த திறத்தினையும், எடுத்துரைக்கின்றார்.

18. "குண்டனாய்ச் சமணரோட கூடி" எனத் தொடங்கும் பதிகம் திருஐயாறு தலத்திற்குரியது. பத்து பாடல்கள் கொண்ட இப்பதிகம் முழுவதும் திருநாவுக்கரசர்

தாம் சைவநெறியைச் சாராது சமண மதத்தை தழுவியிருந்தமையை எண்ணி வருந்துவதாக அமைந்துள்ளன.

19. "தான் அலாது உலகம் இல்லை" எனத் தொடங்கும் பதிகம் திருஐயாறு தலத்திற்குரியது. பத்து பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின், ஒவ்வொரு பாடலும் "ஐயன் ஐயாறனார்க்கே" என்னும் தொடருடன் நிறைவு பெறுகிறது. பத்தாம் பாடலில் இராவணனைப் பற்றிய குறிப்பு காணப்படுகின்றது. இ பதிகத்தின் முதற்பாடலில் ஒவ்வொரு வரியின் இரண்டாவது சொல் 'அலாது' என்று பின்வருமாறு வருகிறது.

"தான் அலாது உலகம் இல்லை; சகம் அலாது அடிமை இல்லை;
கான் அலாது ஆடல் இல்லை; கருதுவார் தங்களுக்கு
வான் அலாது அருளும் இல்லை; வார்குழல் மங்கையோடும்
ஆன் அலாது ஊர்வது' இல்லை - ஐயன் ஐயாறனார்க்கே"

இப்பதிகத்தில் உள்ள சந்தநயம் குறிப்பிடத்தகுந்தது. இது பண்ணாங்கமாகவும், சுத்தாங்கமாகவும் பாடுதற்கேற்ற வகையில் அமைந்துள்ளது. தானதான தனன தான – தனன தான தனன தான என்றவாறு திச்ர சந்தத்தில் அமைந்துள்ளது. இதற்கேற்றவாறு திச்ர நடை ஆதிதாளம் இப்பாடலுக்கு பொருத்தமாக உள்ளது.

20. "பொய் விராம் மேனிதன்னை" எனத் தொடங்கும் பதிகம் திருச்சோற்றுத்துறை தலத்திற்குரியது. இப்பதிகம் 10 பாடல்கள் கொண்டது. திருநாவுக்கரசர் தாம் சைவசமயம் சாராது சமண மதத்தில் இருந்து வீணில் காலம் கழித்ததை நினைந்து வருந்தும் வகையில் இப்பாடல்கள் அமைந்துள்ளன. சான்றாக இப்பதிகத்தின் முதற்பாடல் வருமாறு :

"பொய் விராம் மேனிதன்னைப் பொருள் எனக்காலம் போக்கி
மெய் விராம் மனத்தன் அல்லேன்; வேதியா! வேதநாவா!
ஐவரால் அலைக்கப்பட்ட ஆக்கை கொண்டு அயர்த்துப் போனேன்
செய்வரால்உகளும் செம்மைத் திருச்சோற்றுத்துறையனாரே"

21. "பொருந்திய குரம்பை தன்னை" எனத் தொடங்கும் பதிகம் திருத்துருத்தி தலத்திற்குரியது. இப்பதிகத்தில் 10 பாடல்கள் அமைந்துள்ளன. சமண நெறியைச் சாராது சைவநெறியைச் சார்க என்று உலகத்தோர்க்கு உணர்த்தும் வகையில் இப்பாடல்கள் அமைந்துள்ளன. சான்றாக இப்பதிகத்தின் ஒன்பதாம் பாடல் வருமாறு :

**"குண்டரே, சமணர் புத்தர்; குறி அறியாது நின்று**
**கண்டரே கருதுவார்கள் கருத்து எண்ணாது ஒழிமின், நீர்கள்!**
**விண்டவர் புரங்கள் எய்து விண்ணவர்க்கு அருள்கள் செய்த**
**தொண்டர்கள் துணையினானெனத் துருத்தி நான் கண்ட ஆறே!"**

மற்ற பாடல்கள் அனைத்தும் "தொண்டனேன் கண்ட ஆறே" என்னும் தொடருடன் நிறைவடைகின்றன.

22. "மறை அது பாடிப் பிச்சைக்கு" எனத் தொடங்கும் பதிகம் திருக்கச்சிமேற்றளி தலத்திற்குரியது. பத்து பாடல்கள் கொண்ட இப்பதிகம் காஞ்சி மாநகர் இறைவனைப் புகழ்ந்து பாடும் பாடல்களாகும். முதல் எட்டு பாடலின் மூன்றாம் வரி "காஞ்சி மா நகர் தன்னுள்ளால்" என்று நிறைவடைகிறது. இப்பதிகத்தின் மூன்றாம் பாடல் வருமாறு :

**"விண் இடை விண்ணவர்கள் விரும்பி வந்து இறைஞ்சி வாழ்த்த,**
**பண் இடைச் சுவையின் மிக்க கின்னரம் பாடல் கேட்பார்;**
**கண் இடை மணியின் ஒப்பார்; காஞ்சி மாநகர் தன்னுள்ளால்**
**எண் இடை எழுத்தும் ஆனார் - இலங்கு மேற்றளியனாரே"**

ஏழாம் பாடலின் இரண்டாம் வரியில், "பண்ணினைப் பாடி ஆடும் பத்தர்கள் சித்தம் கொண்டார்" என்று பண் குறிப்பு காணப்படுகிறது. பத்தாம் பாடலில் இராவணனைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. காஞ்சி இறைவன் இராவணன் வாயால் கீதம் பாட கேட்டவர் என்ற வகையில்

**"தென்னவன் மலை எடுக்கச் சேயிழை நடுங்கக் கண்டு**
**மன்னவன் விரலால் ஊன்ற, மணிமுடிநெரிய, வாயால்**
**கன்னலின் கீதம் பாடக் கேட்டவர்; காஞ்சி தன்னுள்**
**இன்னவற்கு அருளிச் செய்தார்-இலங்கு மேற்றளியனாரே"**

என்று பாடப்பட்டுள்ளது.

23. "நம்பனை, நகரம் மூன்றும்" எனத் தொடங்கும் பதிகம், திருக்கச்சி ஏகம்பம் தலத்திற்குரியது. பத்து பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனைப் புகழ்ந்து பாடும் வகையில் அமைந்தது. சான்றாக இப்பதிகத்தின் முதற்பாடல் வருமாறு :

**"நம்பனை, நகரம் மூன்றும் எரியுண வெருவநோக்கும்**
**அம்பனை அமுதை ஆற்றை அணி பொழில் கச்சியுள் ஏ-**
**கம்பனை, கதிர்வெண் திங்கள் செஞ்சடைக் கடவுள் தன்னை,**
**செம்பொனை, பவளத்தூணை, சிந்தியா எழுகின்றேனே"**

24. "வெள்ளத்தைச் சடையில் வைத்த" எனத் தொடங்கும் பதிகம் திருஒற்றியூர் தலத்திற்குரியது. இப்பதிகம் 10 பாடல்கள் கொண்டது. இவை மாயை நிறைந்த உலகியலை பற்றியதாக உள்ளன. மாயையை விட்டு இறைவனைப் பற்ற வேண்டும் என்ற கருத்துடன் இப்பாடல்கள் அமைந்துள்ளன. சான்றாக இப்பதிகத்தின் இரண்டாம் பாடல் வருமாறு :

**"வசிப்பு எனும் வாழ்க்கை வேண்டா; வானவர் இறைவன் நின்று,**
**புசிப்பது ஓர் பொள்ளல் ஆக்கை அதனொடும் புணர்வு வேண்டில்,**
**அசிர்ப்பு எனும் அருந்தவத்தால் ஆன்மாவின் இடம்அது ஆகி**
**உசிர்ப்பு எனும் உணர்வின் உள்ளார், ஒற்றியூர் உடைய கோவே"**

25. "ஓம்பினேன் கூட்டை" எனத் தொடங்கும் பதிகம் திருஒற்றியூர் தலத்திற்குரியது. இதில் இரண்டே பாடல்கள் தாம் உள்ளன. சுத்தாங்கமாக பாடப்படும் "மனம் எனும் தோணி பற்றி" என்னும் பாடல் "மூவர் திருமுறைப்

பாடல்கள்" என்ற நூலில் சுரதாள குறிப்புடன் கொடுக்கப்பட்டுள்ளது. இதனைப் பிற்சேர்க்கையில் காணலாம். இப்பாடல் வருமாறு :

"மனம் எனும் தோணி பற்றி, மதி எனும் கோலை ஊன்றி
சினம் எனும் சரக்கை ஏற்றி, செறிகடல் ஓடும்போது
மதன் எனும் பாறை தாக்கி மறியும் போது, அறிய
ஒண்ணாது
உனை உனும் உணர்வை நல்காய், ஒற்றியூர் உடைய
கோவே"

26. "கனகம் மாவயிரம் உந்தும்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கயிலாயம் தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகம் இராவணன் கயிலை மலையை எடுத்த நிகழ்ச்சியும், இறைவன் அவனைக் காலால் ஊன்றிக் கொண்ட நிகழ்ச்சியையும் விளக்கும் வண்ணம் அமைந்துள்ளது. இவ்விரண்டு நிகழ்ச்சிகளுமே ஒவ்வொரு பாடற் பொருளாகக் காணப்படுகிறது. சான்றாக, இப்பதிகத்தின் 10 ஆம் பாடல் வருமாறு :

"கற்றனன் கயிலை தன்னைக் காண்டலும் அரக்கன்ஓடிச்
செற்றவன் எடுத்தஆறே, சேயிழை அஞ்ச, ஈசன்
உற்று இறை ஊன்றாமுன்னம் உணர்வு அழிவகையால்
வீழ்ந்தான்
மற்று இறை ஊன்றினானேல் மறித்தும் நோக்கு இல்லை
அன்றே!"

இப்பதிகத்தை நாட்டிய அரங்கில் இடம்பெறுவதற்குரிய பதிகமாகச் செய்யலாம். அதற்கேற்றவாறு இப்பதிகத்தைக் கொல்லிப் பண்ணினின்றும் வேறு இராகத்திற்குச் சிறிது மாற்றியமைக்கலாம். இராக மாலிகையாகவோ(அ) ஒரு பாடல் சுத்தாங்கமாகவும் பிறிதொரு பாடல் பண்ணாங்கமாகவும் அமையுமாறு செய்யலாம்.

27. "கடல் அகம் ஏழினோடும்" எனத் தொடங்கும் பதிகம் திருஆப்பாடி தலத்திற்குரியது. இப்பதிகம் 10 பாடல்கள் கொண்டது. இதன் மூன்றாம் பாடலில் பண்ணோடு பாடலை பாடி பரவுவார்க்கு இறைவன் தோழனாராவார் என்று குறிப்பாகப் பாடுகிறார். இப்பாடல் வருமாறு :

"எண் உடை இருக்கும் ஆகி, இருக்கின் உள் பொருளும் ஆகி
பண்ணொடு பாடல் தன்னைப் பரவுவார் பாங்கர்ஆகி,
கண் ஒரு நெற்றி ஆகி, கருதுவார் கருதல் ஆகாப்
பெண் ஒரு பாகம் ஆகி, பேணும்-ஆப்பாடியாரே"

28. "ஆதியில் பிரமனார்தாம் அர்ச்சித்தார்" எனத் தொடங்கும் பதிகம் திருக்குறுக்கை வீரட்டம் தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் ஆறாம் பாடலின் இறுதியில் கொல்லிப்பண் பற்றிய குறிப்பு வருகிறது. இப்பாடல் வருமாறு :

"கல்லினால் எறிந்து கஞ்சி தாம் உணும் சாக்கிய(ன்)னார்
நெல்லின் ஆர் சோறுஉணாமே நீள் விசும்பு ஆள வைத்தார்
எல்லி ஆங்கு எரிகை ஏந்தி எழில்திகழ் நட்டம் ஆடிக்
கொல்லி ஆம் பண் உகந்தார்-குறுக்கை வீரட்டனாரே"

இதிலிருந்து இறைவன் கொல்லிப் பண்ணில் விருப்பமுடையவன் என்பது விளங்குகிறது.

29. "நெடியமால் பிரமனோடு" எனத் தொடங்கும் பதிகம் இரண்டு பாடல்களை மட்டுமே கொண்டு திகழ்கின்றது. முதற் பாடல் வருமாறு :

"நெடிய மால் பிரமனோடு நீர் எனும் பிலயம் கொள்ள
அடியொடு முடியும் காணார் அருச்சுனற்குஅம்பும்
வில்லும்
துடியுடை வேடர் ஆகித் தூய மந்திரங்கள் சொல்லிக்
கொடி நெடுத் தேர் கொடுத்தார் - குறுக்கை
வீரட்டனாரே"

30. "நெற்றி மேல் கண்ணினானே" எனத் தொடங்கும் பதிகம் திருக்கோடிகா தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் ஏழாம் பாடலில் வண்டினங்கள் குழலிலிருந்து வெளிப்படுத்தும் இசைப் பாடலை (கீதம்) பற்றிய குறிப்புப் பின்வருமாறு காணப்படுகிறது.

"அழல் உமிழ் அங்கையானே! அரிவை ஓர் பாகத்தானே!
தழல் உமிழ் அரவம் ஆர்த்துத் தலைதனில்
பலிகொள்வானே

நிழல் உமிழ் சோலை சூழ நீள் வரிவண்டு இனங்கள்
குழல் உமிழ் கீதம் பாடும் கோடிகா உடைய கோவே"

31. "பழகுழிப் பவ்வத்து அன்ன" எனத் தொடங்கும் பதிகம் திருஆரூர் தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகம் திருநாவுக்கரசர் தாம் சமண மதத்தில் சேர்ந்திருந்தை நினைந்து வருந்திப் பாடும் வகையில் அமைந்துள்ளது. சான்றாக ஒன்பதாம் பாடல் வருமாறு :

"பத்தனாய் வாழ மாட்டேன் பாவியேன் பரவிவந்து
சித்தத்துள் ஐவர் தீய செய்வினை பலவும் செய்ய
மத்துஉறு தயிரே போல மறுகும், என் உள்ளம்தானும்
அத்தனே! அமரர் கோவே! ஆரூர் மூலட்டனீரே!"

32. "குழல் வலம் கொண்ட சொல்லாள்" எனத் தொடங்கும் பதிகம் திருஆரூர் தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் ஏழாம் பாடலில் எதுகை, மோனைச் சிறப்பு அடங்கியுள்ளது.

"அஞ்சு அணை கணையினானை அழல்உற அன்று நோக்கி
அஞ்சு அணை குழலினாளை அமுதமா அணைந்து நக்கு(வ)
அஞ்சு அணை அஞ்சும் ஆடி, ஆடுஅரவு ஆட்டுவார் தாம்,
அஞ்சு அணை வேலி ஆரூர் ஆதரித்து இடம் கொண்டாரே"

33. "பகைத் திட்டார் புரங்கள் மூன்றும்" எனத் தொடங்கும் பதிகம் திருப்புகலூர் தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் இரண்டாம் பாடல், மாதர் வலையில் பட்டு, கடவுளை நினையாமல் இருந்ததை எண்ணி வருந்திப் பாடும் வகையில் அமைந்துள்ளது.

34. "தெண்திரை தேங்கி ஓதம்" எனத் தொடங்கும் பதிகம் திருவலம்புரம் தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகம் இயற்கை வருணனையாக அமைந்தது. இப்பதிகத்தின் முதற் பாடல் வருமாறு :

"தெண்திரை தேங்கி ஓதம் சென்று அடி வீழுங்காலை
தொண்டு இரைத்து அண்டர்கோனைத் தொழுது, அடி
வணங்கி, எங்கும்
வண்டுகள் மதுக்கள் மாந்தும் வலம்புரத்து அடிகள்
தம்மைக்
கொண்டு, நல் கீதம் பாடக் குழகர் தாம் இருந்த ஆறே!"

35. "மா இரு ஞாலம் எல்லாம்" எனத் தொடங்கும் பதிகம் திருஆவடுதுறை தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் நான்காம் பாடல் வருமாறு :

"மழு அமர் கையர் போலும்; மாது அவள் பாகர் போலும்
எழு நுனை வேலர் போலும்; என்பு கொண்டு அணிவர் போலும்
தொழுது எழுந்து ஆடிப்பாடித் தோத்திரம் பலவும் சொல்லி
அழுமவர்க்கு அன்பர் போலும்-ஆவடுதுறைய னாரே"

இப்பதிகம் முழுவதிலும் "போலும்" என்ற சொல் ஆங்காங்கு இடம்பெறுகிறது.

36. "மஞ்சனே! மணியும் ஆனாய்" எனத் தொடங்கும் பதிகம் திருஆவடுதுறை தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில், தாம் இறைவனை நினையாது இருந்த நிலையை எண்ணி வருந்திப் பாடுகிறார். சான்றாக ஏழாம் பாடல் வருமாறு :

"செறிவு இலேன்; சிந்தையுள்ளே சிவன் அடி தெரிய மாட்டேன்;
குறி இலேன்; குணம் ஒன்று இல்லேன்; கூறுமா கூறமாட்டேன்
நெறி படு மதி ஒன்று இல்லேன்; நினையுமா நினையமாட்டேன்
அறிவு இலேன்; அயர்த்துப் போனேன்-ஆவடுதுறை உளானே"

37. "கன்றினார் புரங்கள் மூன்றும்" எனத் தொடங்கும் பதிகம் திருப்பருப்பதம் தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலின் இறுதி இரண்டு சீர்களும், "பருப்பதம் நோக்கினாரே" என்று நிறைவு பெறுகிறது. ஒவ்வொரு பாடலின் பொருளும் திருப்பருப்பதம் நோக்கி நின்ற இறைவனின் உருவை சித்திரிக்கும் வகையில் உள்ளது. சான்றாக இப்பதிகத்தின் எட்டாம் பாடல் வருமாறு :

"பேர் இடர்ப் பிணிகள் தீர்க்கும் பிஞ்ஞகன்; எந்தை பெம்மான்;
கார் உடைக் கண்டர் ஆகி, கபாலம் ஓர் கையில் ஏந்தி,

சீர் உடைச் செங்கண் வெள்ஏறு ஏறிய செல்வர்-நல்ல
பாரிடம் பாணி செய்யப் பருப்பதம் நோக்கினாரே"

இப்பாடல்கள் ஒவ்வொன்றும் இறைவனின் ஒவ்வொரு உறுப்பையும் வருணிக்கும் வகையில் இயற்றப்பட்டுள்ளது. இவற்றை அபிநயத்திற்கு ஏற்ற பரத நாட்டிய உருப்படியாக அமைக்கலாம்.

38. "தோற்றினான் எயிறு கவ்வித் தொழில் உடை அரக்கன் தன்னை" எனத் தொடங்கும் பதிகம் திரு அவள் இவள் நல்லூர் தலத்திற்குரியது. பத்து பாடல்கள் கொண்ட இப்பதிகம், இராவணனின் வன்செயல்களை இறைவன் எவ்வாறு தகர்த்தெறிந்தான் என்பதை விளக்கும் வகையில் அமைந்துள்ளது. சான்றாக முதற்பாடல் வருமாறு :

"தோற்றினான் எயிறுகவ்வித் தொழில் உடை அரக்கன்
தன்னைத்
தேற்றுவான் சென்று சொல்ல, "சிக் கெனத் தவிரும்!" என்று
வீற்றினை உடையன் ஆகி வெடுவெடுத்து எடுத்தவன்தன்
ஆற்றலை அழிக்க் வல்லார்-அவளிவணல்லூராரே"

39. "மறை அணி நாவினானை" எனத் தொடங்கும் பதிகம் திருப்பெருவேளூர் என்னும் தலத்திற்குரியது. பத்து பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலும் இறைவனை வாழ்த்தி வணங்கும் வகையில் அமைந்துள்ளன. சான்றாக முதற் பாடல் வருமாறு :

"மறை அணி நாவினானை, மறப்பு இலார் மனத்து உளானை,
கறை அணி கண்டன்தன்னை கனல்-எரி ஆடினானை
பிறை அணி சடையினானை பெருவேளூர் பேணினானை
நறை அணி மலர்கள் தூவி நான் தொறும் வணங்குவேனே"

40. "பாசமும் கழிக்ககில்லா அரக்கரை" எனத் தொடங்கும் பதிகம் திரு இராமேச்சுரம் தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம் இராமேச்சுரத தலத்தையும் அத்தலத்து இறைவனைப் போற்றி வணங்கு முறையில் அமைந்துள்ளது. சான்றாக ஆறாம் பாடல் வருமாறு :

"ஆர், வலம் நம்மின் மிக்கார்?" என்ற அவ் அரக்கர் கூடிப்
போர் வலம் செய்து மிக்குப் பொருதவர் தம்மை வீட்டித்

தேர் வலம் செற்ற மால் செய் திரு இராமேச்சுரத்தைச்
சேர்,-மடநெஞ்சே! நீ செஞ்சடை எந்தை பாலே!"

41. "வேதியா வேத கீதா" எனத் தொடங்கும் பதிகம் திருஆலவாய் தலத்திற்குரியது. பத்து பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனை போற்றி வணங்கு முறையில் அமைந்துள்ளது. இப்பதிகத்தின் முதற் பாடல் மிகவும் பிரபலமாக பாடப்பட்டு வருகின்றது. இப்பாடலைச் சுரதாளக் குறிப்புடன் பின்இணைப்பில் காணலாம். இப்பதிகத்தின் பத்தாம் பாடலில் இராவணனைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. இப்பாடல் வருமாறு :

"பொடிக்கொடு பூசி, பொல்லாக் குரம்பையில் புந்தி ஒன்றி,
பிடித்துநின் தாள்கள் என்றும் பிதற்றி நான் இருக்க மாட்டேன்
"எடுப்பன்" என்று இலங்கைக் கோன் வந்து எடுத்தலும் இருபது தோள்
அடர்த்தனே! ஆலவாயில் அப்பனே!-அருள் செய்யாயே!"

42. "ஓதிமா மலர்கள் தூவி" எனத் தொடங்கும் பதிகம் திருஅண்ணாமலை தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனை ஏத்தி வணங்கும் முறையில் அமைந்துள்ளது. சான்றாக இப்பதிகத்தின் இறுதிப் பாடல் வருமாறு :

"இரக்கம் ஒன்று யாதும் இல்லாக் காலனைக் கடிந்த எம்மான்
உரத்தினால் வரையை ஊக்க, ஒருவிரல் நுதியினாலே
அரக்கனை நெரித்த அண்ணாமலை உளாய்! அமரர்ஏறே!
சிரத்தினால் வணங்கி ஏத்தித் திருவடி மறப்பு இலேனே"

43. "பூதத்தின் படையர்" எனத் தொடங்கும் பதிகம் திருவீழிமிழலை என்னும் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலின் இறுதித் தொடரும், "வீழிமிழலையுள் விகிர்தனாரே" என்று நிறைவு பெறுகிறது. ஒவ்வொரு பாடலும், வீழிமிழலையுள் உறையும் இறைவனை வருணிக்கும் வகையில் அமைந்துள்ளது. சான்றாக இப்பதிகத்தின் முதற் பாடல் வருமாறு :

"பூதத்தின் படையர்; பாம்பின் பூணினர்; பூணநூலர்;
சீதத்தின் பொலிந்த திங்கள் கொழுந்தர்; நஞ்சு
அழுந்துகண்டர்;
கீதத்தின் பொலிந்த ஓசைக் கேள்வியர்; வேள்வியாளர்;
வேதத்தின் பொருளர்-வீழிமிழலையுள் விகிர்தனாரே"

44. "தோடு உலாம் மலர்கள் தூவி" எனத் தொடங்கும் பதிகம் திருச்சாய்க்காடு என்னும் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலின் இறுதித் தொடரும், "சாய்க்காடு மேவினாரே" என்று நிறைவடைகிறது. ஒவ்வொரு பாடலும் சிவபெருமானின் திருவிளையாடல் களைச் சித்திரிக்கும் வண்ணம் திகழ்கின்றது. சான்றாக முதற்பாடல் காலன், மார்க்கண்டேயனைக் கொண்டு செல்ல வரும்போது, காலன் மாள மார்க்கண்டேயனுக்கு அருள் செய்த சிவபெருமானின் திறத்தை உரைக்கின்றது.

"தோடு உலாம் மலர்கள் தூவித் தொழுது எழு
மார்க்கண்டேயன்
"வீடும் நாள் அணுகிற்று" என்று மெய் கொள்வான் வந்த
காலன்
பாடு தான் செல்லும், அஞ்சி, "பாதமே சரணம்" என்ன,
சாடினார் காலன் மாள; -சாய்க்காடு மேவினாரே"

இவ்வாறே ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு வரலாற்றை உரைக்கும் வகையில் அமைந்துள்ளது. எனவே இப்பதிகம் நாட்டிய அரங்கில் இராகமாலிகையாக இடம்பெற வாய்ப்பாக அமைந்துள்ளது.

45. "கச்சைசேர் அரவர் போலும்" எனத் தொடங்கும் பதிகம் திருநாகேச்சுரம் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின், ஒவ்வொரு பாடலும் இறுதியில், "நாக ஈச்சுரவனாரே" என்று நிறைவடைகின்றது. பதிகம் முழுவதிலும் "போலும்" என்ற சொல் வந்து அழகு செய்கின்றது.

இவ்வித அணி வடமொழியில், "அனுப்ராசம்" எனப் பெயர்படும். ஒன்பதாம் பாடலில் இசைக்கருவிகள் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. இப்பாடல் வருமாறு :

"கொக்கரை, தாளம், வீணை, பாணிசெய் குழகர் போலும்;
அக்கு அரை அணிவர் போலும்; ஐந்தலை அரவர் போலும்;
வக்கரை அமர்வர் போலும்; மாதரை மையல் செய்யும்
நக்கரை உருவர் போலும்-நாக ஈச்சரவனாரே"

இப்பாடலை திருநாகேச்சுரத்தில் காணப்படும் சிறப்பத்தோடு ஒப்பிட்டுக் காணலாம்.

46. "வரைகிலேன், புலன்கள் ஐந்தும்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கொண்டீச்சுரம் தலத்திற்குரியது. ஒவ்வொரு பாடலும் திருநாவுக்கரசர் இளமை காலத்தில் சமண சமயம் சார்ந்து இருந்தமையை எண்ணி வருந்துவதாகவும், இறைவன் ஆட்கொண்டமையையும் பற்றியதாக உள்ளது. பத்தாம் பாடலில் இராவணன் பற்றிய குறிப்புப் பின்வருமாறு காணப்படுகிறது.

"விரைதரு கருமென் கூந்தல் விளங்கு இழை வேல்ஒண் கண்ணாள்
வெருவர, இலங்கைக் கோமான் விலங்கலை எடுத்த ஞான்று
பருவரை அனைய தோளும் முடிகளும் பாறி வீழத்
திருவிரல் ஊன்றினானே-திருக் கொண்டீச்சுரத்து உளானே!"

47. "வெள்ளநீர்ச் சடையர் போலும்" எனத் தொடங்கும் பதிகம் திருஆலங்காடு தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில், இறைவனின் திருமேனி விளக்கமுறை வருணிக்கப்பட்டுள்ளது. மூன்று மற்றும் ஆறாம் பாடல்களின் மூன்றாவது வரி முறையே,

"பண்ணின் ஆர் முழவம் ஓவாப் பைம் பொழில் பழனை மேய"

என்றும்,

"பாட்டின் ஆர் முழவம் ஓவாப் பைம் பொழில் பழனை மேயார்"

என்றும் வருகின்றது. இப்பதிகத்தின் எட்டாம் பாடலில்,

"கூடினார், உமை தன்னோடே குறிப்பு உடைவேடம் கொண்டு
கூடினார் கங்கை யாளைச் சுவறிடு சடையர் போலும்;
பாடினார், சாம வேதம்; பைம்பொழில் பழனைமேயார்
ஆடினார், காளி காண;-ஆலங்காட்டு அடிகளாரே"

என்றவாறு இறைவன் சாமவேதம் பாடிய திறம் கூறப்பட்டுள்ளது.

48. "செத்தையேன் சிதம்ப நாயேன்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கோவலூர் வீரட்டம் தலத்திற்குரியது. இதில் கண்ட பத்துப் பாடல்களும், திருநாவுக்கரசர் தம் முந்தைய வாழ்க்கையை நினைந்து, வருந்திப் பாடும் வகையில் அமைந்துள்ளன. பத்தாம் பாடலில், இறைவன் இராவணனுக்கு அருள் செய்த நிகழ்ச்சி கூறப்பட்டுள்ளது. இப்பாடல் வருமாறு :

"விரிகடல் இலங்கைக்கோனை வியன் கயிலாயத்தின் கீழ்
இருபது தோளும் பத்துச் சிரங்களும் நெரிய ஊன்றி,
பரவிய பாடல் கேட்டு, பண்ட கொடுத்து அருளிச்செய்தார்
குரவொடு கோங்குசூழ்ந்த கோவல் வீரட்டனாரே"

49. "முன்துணை ஆயினானை" எனத் தொடங்கும் பதிகம் திருநனிபள்ளி தலத்திற்குரியது. ஒன்பது பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலும், இறைவன் அடியார்க்கு அருளும் அருளாளன் என்னும் கருத்தில் பாடப்பட்டுள்ளன. இதன் நான்காம் பாடல் வருமாறு :

"பண்ணின் ஆர் பாடல் ஆகி, பழத்தினில் இரதம் ஆகி
கண்ணின் ஆர் பார்வை ஆகி, கருத்தொடு கற்பம்ஆகி
எண்ணினார் எண்ணம் ஆகி, ஏழ் உலகு அனைத்தும்ஆகி
நண்ணினார் வினைகள் தீர்ப்பார்-நனிபள்ளி அடிகளாரே"

இப்பதிகத்தின் ஒன்பதாம் பாடலில், "பத்து வாய் கீதம் பாட, பரிந்து அவற்கு அருள் கொடுத்தார்" என்றவாறு, இராவணனின் பத்து வாய்கள் கீதம் பாடிய குறிப்பு காணப்படுகிறது.

50. "மனைவி தாய் தந்தை மக்கள்" எனத் தொடங்கும் பதிகம் திருநாகைக் காரோணம் தலத்திற்குரியது. ஒன்பது பாடல்கள் கொண்ட

இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலும் இறைவனை நினைந்தால், நம் பிறவிப்பிணி அகலும் என்னும் பொருள்பட பாடப்பட்டுள்ளது. இப்பதிகத்தின் இறுதிப் பாடலில் பின்வருமாறு இராவணனைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

"கருமலி கடல்சூழ் நாகைக் காரோணர் கமல பாதத்து
ஒருவிரல் நுதிக்கு நில்லாது ஒண்திறல் அரக்கன் உக்கான்
இருதிற மங்கை மாரோடு எம்பிரான் செம் பொன் ஆகம்
திருவடி தரித்து நிற்க, திண்ணம், நாம் உய்ந்த ஆறே!"

51. "விண்ணவர் மகுடகோடி" எனத் தொடங்கும் பதிகம் திரு இன்னம்பர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனை வருணிக்கும் பாங்கில் அமைந்துள்ளது. சான்றாக முதற்பாடல் வருமாறு :

"விண்ணவர் மகுடகோடி மிடைந்த சேவடியர் போலும்;
பெண் ஒரு பாகர் போலும் பேடுஅலி ஆணர் போலும்;
வண்ணமால் அயனும் காணா மால் வரை எரியர் போலும்;
எண் உரு அநேகர் போலும்; இன்னம்பர் ஈசனாரே"

52. "பெருந்திரு இமவான் பெற்ற" எனத் தொடங்கும் பதிகம் திருச்சேறை தலத்திற்குரியது. ஒன்பது பாடல்கள் கொண்டது. இறைவன் அடியார்க்கு அருள் செய்தமையை விவரிக்கும் பாங்கில் இவை அமைந்துள்ளன. சான்றாக, ஆறாம் பாடல் வருமாறு :

"விரித்த பல்கதிர் கொள் சூலம், வெடிபடு தமருகம், கை
தரித்தது ஓர் கோல கால பயிரவன் ஆகி, வேழம்
உரித்து, உமை அஞ்சக் கண்டு, ஒண் திருமணிவாய் விள்ளச்
சிரித்து, அருள் செய்தார்-சேறைச் செந்நெறிச் செல்வனாரே"

தமருகம் என்ற தோற் கருவியின் குறிப்பு இப்பாடலில் காணப்படுகிறது.

53. "முத்தினை மணியை; பொன்னை" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். இதில் 10 பாடல்கள் அடங்கியுள்ளது. ஒவ்வொரு பாடலும் இறுதியில் "நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்த ஆறே" என்னும் வரியால் நிறைவடைகின்றது. இதன் காரணமாக இப்பதிகம், "நினைந்த திருநேரிசை" என்று சிறப்பாக

அழைக்கப்படுகிறது. எண்ணிய எண்ணியவாறே கைகூடும் திறன் இறைவனை நினைந்த உள்ளங்களுக்குக் கிட்டும் என்பது இப்பதிகத்தில் அடங்கியுள்ள பொருளாகும். சான்றாக முதற்பாடல் வருமாறு :

"முத்தினை, மணியை, பொன்னை, முழுமுதல் பவளம் ஏய்க்கும்
கொத்தினை, வயிரமாலைக் கொழுந்தினை, அமரர் சூடும்
வித்தினை, வேத வேள்விக் கேள்வியை விளங்க நின்ற
அத்தனை, நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்த ஆறே!"

54. "தொண்டனேன் பட்டது என்னே" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், "தனித்திரு நேரிசை" என்று சிறப்பாக அழைக்கப்படுகிறது. இப்பதிகம் திருநாவுக்கரசர் தாம் முன்னர் சமண சமயத்தைச் சார்ந்திருந்து உள்ளம் தெளிந்து இறைவனை அடைந்தபோது இறைவன் அருள் தந்த திறத்தைப் போற்று முறையில் அமைந்துள்ளது. இப்பதிகத்தின் நான்காம் பாடல் வருமாறு :

"உடம்பு எனும் மனை அகத்து (ள்), உள்ளமே தகளி ஆக
மடம் படும் உணர்நெய் அட்டி, உயிர் எனும் திரி மயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பு அமர் காளை தாதை கழல் அடி காணல் ஆமே"

55. "மருள் அவா மனத்தன் ஆகி" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் தனித்திருநேரிசை என்ற சிறப்புப் பெயருடன் அழைக்கப்படுகிறது. இப்பதிகத்தின் இரண்டாம் பாடலில் திருநாவுக்கரசர் சிவகதியை அடைவதற்குச் செய்ய வேண்டிய செயல்கள் யாவை என்று பின்வருமாறு கூறுகிறார்.

"மெய்ம்மை ஆம் உழவைச் செய்து, விருப்பு எனும் வித்தை வித்தி
பொய்ம்மை ஆம் களையை வாங்கி, பொறை எனும் நீரைப் பாய்ச்சி
தம்மையும் நோக்கிக் கண்டு, தகவு எனும் வேலி இட்டு
செம்மையுள் நிற்பர் ஆகில், சிவகதி விளையும் அன்றே!"

இறைவனுக்குப் பூசை எவ்வாறு செய்வது என்பதைப் பற்றி இப்பதிகத்தின் நான்காம் பாடலில் பின்வருமாறு கூறுகின்றார்.

"காயமே கோயில் ஆக, கடிமனம் அடிமை ஆக,
வாய்மையே தூய்மை ஆக, மனமணி இலிங்கம் ஆக,
நேயமே நெய்யும் பாலா, நிறையநீர் அமைய ஆட்டி
பூசனை ஈசனார்க்கு போற்று அவிக் காட்டினோமே"

இவ்விரண்டு பாடல்களும் ஓதுவார்களால் பரவலாகப் பாடப்படும் பாடல்களாகும்.

56. "கடும்பகல் நட்டம் ஆடி" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். இப்பதிகம் எட்டு பாடல்கள் கொண்டது. இறைவனை நினைந்தால் சிவகதி அடையலாம் என்னும் கருத்தமைந்த இப்பாடல்களுள் ஆறாம் பாடல் வருமாறு :

"தொண்டனேன் பிறந்து, வாளா தொல்வினைக் குழியில் வீழ்ந்து
பிண்டமே சுமந்து நாளும் பெரியதோர் அவாவில் பட்டேன்
அண்டனே! அமரர் கோவே! அறிவனே! "அஞ்சல்" என்னாய்-
தெண்திரைக் கங்கை சூடும் திருத்தகு சடையினானே!"

57. "வென்றிலேன், புலன்கள் ஐந்தும்" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். இது குறைந்த திருநேரிசை என்னும் சிறப்புப் பெயருடன் வழங்கப்படுகிறது. இப்பதிகம் பத்துப் பாடல்கள் கொண்டு அமைந்துள்ளது. தம்மை இழிநிலைபடுத்திக் கொண்டு பாடும் வகையில் அமைந்து பெரிய வேதாந்த கருத்துக்களை உள்ளடக்கியுள்ளது. சான்றாக இரண்டாம் பாடல் வருமாறு :

"கற்றிலேன், கலைகள் ஞானம்; கற்றவர் தங்களோடும்
உற்றிலேன்; ஆதலாலே உணர்விக்கும் சேயன் ஆனேன்;
பெற்றிலேன்; பெருந் தடங்கண் பேதையார் தமக்கும் பொல்லேன்;
எற்றுஉளேன்? இறைவனே! -நான் என் செய்வான் தோன்றினேனே!"

இப்பதிகம் சுத்தாங்கமாகப் பாடுவதற்கு மிகவும் வாய்ப்பளிக்கும் வகையில் அமைந்துள்ளது.

58. "தம் மானம் காப்பது ஆகி" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். இது குறைந்த திருநேரிசை என்னும் சிறப்புப் பெயருடன் விளங்குகின்றது. இதுவும் மேற்கண்ட பதிகம் போன்றே தம்மை இழிநிலைபடுத்தி வருந்தும் வகையில் அமைந்துள்ளது. இப்பதிகத்தில் 6 பாடல்கள் மட்டுமே காணப்படுகின்றன. சான்றாக மூன்றாம் பாடல் இங்கு தரப்படுகிறது.

**"கூழையேன் ஆகமாட்டேன், கொடுவினைக் குழியில் வீழ்ந்து**
**ஏழின் இன் இசையினாலும் இறைவனை ஏத்த மாட்டேன்**
**மாழை ஒண்கண்ணின் நல்ல மடந்தை மார் தமக்கும் பொல்லேன்**
**ஏழையேன் ஆகி, நாளும் என் செய்வான் தோன்றினேனே!"**

**முடிவுரை**

திருநேரிசைப் பதிகங்களுக்கு உரிய பண்ணாக கொல்லிப் பண் மரபு வழியாக பாடப்பட்டிருந்தாலும், இவை அனைத்துமே கொல்லிப் பண்ணில் இயற்றப் பட்டிருக்குமா என்ற வினா எழும்புகின்றது.

"கொல்லிப் பண் உகந்தார்" என்ற குறிப்பிலிருந்து இறைவன் கொல்லிப் பண்ணில் விருப்புடையவன் என்பது தெரிகிறது. எனவே திருநாவுக்கரசர் பல பதிகங்களை கொல்லிப் பண்ணில் அமைத்து பாடியிருக்க வாய்ப்புள்ளது. நடைமுறையிலும் ஓதுவார்கள் கொல்லிப் பண்ணில் சுத்தாங்கமாக அமைத்து மனமுருகிப் பாடுவதைக் கேட்க முடிகிறது. ஆனால் திருநேரிசைப் பதிகங்கள் முழுமையும் கொல்லிப் பண்ணில் மட்டுமே பாடப்பட்டிருக்கும் என்று கூறமுடியாது. பஞ்சமப் பண் பற்றிய குறிப்பு காணப்படுவதால் பஞ்சமப் பண்ணிலும் திருநாவுக்கரசர் பாடியிருக்கலாம் என்பதற்கேற்ப அப்பாடல் சுரதாளக் குறிப்புடன் இவ்வியலில் கொடுக்கப்பட்டுள்ளது.

இப்பாடல்களின் பொருளமைப்பை

நோக்குகையில், இவை அபிநயத்திற்கேற்ற பாடல்களாகத் திகழ்ந்துள்ள பெற்றிமை அறிய முடிகிறது. எனவே இப்பாடல்கள் பக்தி இசை உருப்படியாக மட்டுமன்றி பரதநாட்டிய அரங்கிலும் இடம்பெற ஏதுவாக உள்ளன என்றறியலாம். அவ்வாறு பரதநாட்டிய இசை உருப்படியாக மாற்றும்போது, இவற்றை இராக மாலிகையாகவோ (அ) பண்ணாங்கமும் சுத்தாங்கமும் மாறி மாறி பாடும் வகையிலோ அமைக்கலாம். குறிப்பாக இராவணன் கயிலை மலையில் ஒறுக்கப்பட்ட நிகழ்ச்சி அமைந்த பாடல்களும் இறைவனை வருணிக்கும்பாடல்களும் பதவர்ணமாகவும் அமைத்துப் பாடலாம்.

# 4

# திருநாவுக்கரசரின் திருவிருத்தப் பாடல்களின் இசைச் சிறப்பு

நான்காம் திருமுறை 80 முதல் 113 வரையிலுள்ள 53 பதிகங்கள். திருவிருத்தம் என்னும் அமைப்பாலானவை.

திருநாவுக்கரசரின் திருவிருத்தப் பாடல்கள் பெரும்பாலும் சுத்தாங்கமாகவும், அபூர்வமாக இலயாங்கமாகவும் பாடப்பட்டு வருகின்றன. சென்னை தமிழிசைச் சங்கத்தின் தேவாரப் பண்ணாராய்ச்சி மாநாட்டு முடிவுகளின்படி திருவிருத்தம் இலாயங்கமாகப் பாடுகிற பொழுது கொல்லிப்பண்ணில் (நவரோசு இராகத்தில்) பாடப்படுகிறது. பெரும்பாலும் சுத்தாங்கமாகப் பாடப்பட்டு வருகிறது. சுத்தாங்கமாகப் பாடும்போது மரபுப்படி கௌசிகப் பண்ணிலும் (பைரவி) பழம் பஞ்சுரப் பண்ணிலும் (சங்கரா பரணத்திலும்) பாடுகின்றனர். தற்போது (பந்துவராளி இராகத்திலும்) பாடுகின்றனர்.[1] நட்டராகப்பண் (அ) சாதாரிப்பண்ணிலும், காந்தார பஞ்சம பண்ணிலும் இப்பதிகங்கள் பாடப்பட்டுவருகின்றன.

திருநாவுக்கரசரின் திருவிருத்தத்தை முன் மாதிரியாகக் கொண்டு நம்மாழ்வார் திருவிருத்தப் பாடல்கள் பாடியுள்ளார்.

இனி திருவிருத்தப் பதிகங்களின் சிறப்பை தனித்தனியாக ஈண்டுக் காணலாம். சுத்தாங்கமாக பாடுவதற்கேற்ற இப்பதிகங்களில் ஒவ்வொரு பாடல்

1 பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும், பக். 97

சான்றாக இங்கு தரப்படுகிறது.

1. "பாளை உடைக்கமுகு ஓங்கி" எனத் தொடங்கும் பதிகம் கோயில் என்னும் சிதம்பர தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகம், எதுகைச் சிறப்புடையது. இப்பாடல்கள் அனைத்தும் தில்லைச் சிற்றம்பல பெருமானை வருணித்துப் பாடி, இறைவனைக் கண்டபிறகு வேறு என்ன காண்பதற்கு உள்ளது என்னும் பொருள்பட பாடப்பட்டுள்ளன.

ஓதுவார் தருமபுரம் சுவாமிநாதன் அவர்கள், இப்பதிகத்தின் இரண்டு பாடல்களை ஒலிப்பதிவு நாடாவில் பாடியுள்ளார்.[2] "தொடுத்த மலரொடு" எனத் தொடங்கும் மூன்றாம் பாடலை சுத்தாங்கமாகவும், "ஊனத்தை நீக்கி" எனத் தொடங்கும் ஆறாவது பாடலை பண்ணாங்கமாகவும் பாடியுள்ளார். பந்துவராளி இராகத்தில் அமைய இவற்றைப் பாடியுள்ளார். இப்பதிகத்தின் ஆறாம் பாடல் சுரதாள குறிப்புடன் இங்கு கொடுக்கப்படுகிறது. இது நூல்களில் சுரதாள குறிப்புடன் இதுவரை வெளிவராதப் பாடலாகும்.

பண் : நட்டராகம் தாளம் : திச்ரநடை ஆதிதாளம்
இராகம் : பந்துவராளி

| /4 | 0 | 0 |
|---|---|---|

காமாபா பாபாதா நிச்ாநிதாபாபாதப மாகா;காமாபாதா ; ;
ஊனத்தை நீக்கி. உலகறி
தாபாமா
யஎன்னை ஆட்கொண்டவன். ஆட்கொண்டவன்.
ச்ாச்நிதா தநிச்ரி
ரிச்ச்ா; –;ச்ாச்ா ச்ாச்ாசநி தாபமதப பமகமகா; ; ;
தேன்ஒத்து
எனக்கினியான்
தில்லை சிற்றம்பலவன் எம் கோன் .......
ச்ாநிதா. பமதபதா
ச்ாச்ாரிச் தாதாநி ச்ாரி; ரிச்சா ; ; ; ;
வானத்த வர்உய்ய வன்நெஞ்சை

2. தருமபுரம் சுவாமிநாதன் ஒலிநாடா, 4SE1, 108 வாணி வெளியீடு, சென்னை.

சநிதபதா உண்ட.கண்டத்து இலங் கும் . . . . .
ரீரீரீ ரிக்ாரிரீ ச்ா;; - ; ச்ாச்ா ச்ாரிச் நித-பா, பமா
காமாகா; ; ;
ஏனத்து எயிறு கண்டால். பின்னை கண்கொண்டு
காண்பதென் னே . . . .

---

இவ்வாறு தருமபுரம் சுவாமிநாதன் திருவிருத்தப் பாடல்களை இலயாங்கமாக, பண்ணாங்கமாகப் பாடியிருப்பது அவரது தனிப்பட்ட விருப்பமேயன்றி அது முறைமையல்ல என்பது ஒருசில ஓதுவார்களின் கருத்தாகும்.

2. "கருநட்ட கண்டனை" எனத் தொடங்கும் பதிகம் கோயில் என்னும் சிதம்பரம் தலத்தில் பாடப்பட்டது. 10 பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலும் தில்லை சிற்றம்பலத்து இறைவனை வருணித்து, அவனை வணங்கித் தொழுதால் பிறவிப்பிணி இல்லை என்னும் குறிப்புடன் பாடப்பட்டுள்ளன.

சுத்தாங்கமாக பாடப்படும் பாடல்களுள், இப்பதிகத்தின் நான்காம் பாடலான, "குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும்" என்ற பாடல் மிகவும் பிரபலமாகப் பாடப்படும் பாடலாகும். பைரவி இராகத்தில் இப்பாடல் பாடப்பட்டு வருகின்றது. இப்பாடற் பொருள் தற்பொழுது கோவில்களில் வணங்கப்பட்டு வரும் சிற்றம்பல பெருமானின் சிலை உருவத்தோடு ஒப்பிடத்தக்க உள்ளமை வியந்து போற்றத்தக்கது. இப்பாடலே இச்சிலை உருவத்திற்குரிய இலக்கிய பாடலாக இருந்துள்ளது என்று கருதலாம்.[3] இப்பாடல் வருமாறு :

"குனித்த புருவமும், கொவ்வைச் செவ்வாயில் குமிண்
சிரிப்பும்
பனித்த சடையும், பவளம் போல் மேனியில் பால்
வெண்நீறும்,
இனித்தம் உடைய எடுத்த பொற் பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே, இந்தமா நிலத்தே"

இப்பதிகத்தின் 6 ஆம் பாடலில்,

---

3 ஒப்பிலக்கிய . அறிமுகம், பக். 141.

"தேத்தென என்று இசை வண்டுகள் பாடு சிற்றம்பலம்"

என்று சிற்றம்பல தலத்தினது இசை பெருமை கூறப்பட்டுள்ளது.

"பார் கொண்டு மூடி" எனத் தொடங்கும் பதிகம் திருக்கழுமலம் தலத்தைச் சேர்ந்தது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகம் கழுமல இறைவனின் திருவடிகள் நம்மை ஆள்பவை. இவற்றை என்றும் ஏத்தி வணங்க வேண்டும் என்றும் பொருளில் பாடப்பட்டவை. இப்பதிகத்தின் நான்காம் பாடலின் மூன்றாம் வரியில்,

"இரிக்கும் பறை யொடு பூதங்கள் பாட" என்னும் குறிப்பில் பூதங்கள் பறையோடு பாடும் திறம் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பதிகத்தின் பத்தாம் பாடலில், இராவணன் பற்றிய குறிப்பு பின்வருமாறு காணப்படுகிறது.

"கலைஆர் கடல்சூழ் இலங்கையர் கோன்தன் முடிசிதறத்
தொலையா மலர்அடி ஊன்றலும், உள்ளம் விதிர்
விதிர்த்துத்
தலை ஆய்க்கிடந்து உயர்ந்தான் தன் கழுமலம்
காண்பதற்கே
அலையாப் பரிசு இவை நாள்தொறும் நம்தமை
ஆள்வனவே"

4. "படைஆர் மழுஒன்று" எனத் தொடங்கும் பதிகம், திருக்கழுமல தலத்திற்குரியது. இது ஒரே ஒரு பாடலுடன் அமைந்துள்ளது. அப்பாடல் வருமாறு :

"படைஆர் மழுஒன்று பற்றிய கையன் பதிவினவில்
கடைஆர் கொடிநெடு மாடங்கள் ஓங்கும் கழுமலம்ஆம்
மடைவாய்க் குருகுஇனம், பாளை விரிதொறும் வண்டு
இனங்கள்
பெடைவாய் மது உண்டு, பேராது இருக்கும்
பெரும்பதியே"

என்றவாறு திருக்கழுமலப் பதியின் சிறப்பு கூறப்பட்டுள்ளது.

5. "எட்டுஆம் திசைக்கும்" எனத் தொடங்கும் பதிகம்

பொதுப் பதிகமாகும். 11 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலின் ஈற்றுத் தொடரும், "என்தன் ஆர் உயிரே" என்று நிறைவு பெறுகிறது. இதன் காரணமாக இப்பதிகம், "ஆரூயிர்த் திருவிருத்தம்" என்ற சிறப்புப் பெயரைக் கொண்டு விளங்குகிறது. இறைவனின் ஒவ்வொரு நிகழ்ச்சிச் சிறப்பையும் ஒவ்வொரு பாடலிலும் அமைத்து அவன்தன் அடிநிழல் கீழது அன்றோ? என்தன் ஆரூயிரே! என்று உருகிப் பாடும் வகையில் இப்பதிகம் அமைந்துள்ளது. இதன் பதினோராம் பாடலில், திருநாவுக்கரசர்,

"பழக ஓர் ஊர்தி அரன் பை   ர பாரிடம் பாணி செய்யக்
குழலும் முழவொடு மா   டி, உயர் இலங்கைக்
கிழவன் இருபதுதோளுய ஒரு விரலால் இறுத்த
அழகன் அடிநிழல் கீழது அன்றோ, என்தன் ஆர் உயிரே"

என்றவாறு, தாளம், குழல், முழவம் ஆகிய இசைக் கருவிகளோடு நடம் ஆடி இராவணனை பணிய வைத்த அடிநிழலில் தம் ஆருயிர் இருப்பதாகப் பாடுகின்றார்.

6. "காலை எழுந்து கடிமலர்" எனத் தொடங்கும் பதிகம், திருச்சோற்றுத்துறை தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகம், சோற்றுத்துறை , தல வருணனையாகவும், இறைவனின் சடைமேல் விளங்கும் பிறைமதி அழகினையும் வருணிக்கும் வகையில் அமைந்துள்ளது. பத்தாம் பாடல், இராவணனை தம் கால் விரலினால் ஊன்றி அழித்த நிகழ்ச்சி கூறப்பட்டுள்ளது. இப்பதிகத்தின் முதற்பாடல் வருமாறு :

"காலை எழுந்து கடிமலர் தூயன தாம் கொணர்ந்து
மேலை அமரர் விரும்பும்இடம்-விரையான் மலிந்த
சோலை மணம்கமழ்-சோற்றுத்துறை உறைவார் சடைமேல்
மாலை மதியம் அன்றோ, எம்பிரானுக்கு அழகியதே?"

7. "செற்றுக் களிற்றுஉரி" எனத் தொடங்கும் பதிகம் திருஒற்றியூர் தலத்திற்குரியது. இப்பதிகம் 11 பாடல்கள் கொண்டது. இப்பதிகத்தின் எட்டாம் பாடலில், ஒற்றியூரின் இயற்கை எழிலை பின்வருமாறு கூறுகின்றார்.

"சுற்றி வண்டு யாழ் செயும் சோலையும் காவும் துதைந்து

இலங்கு
பெற்றி கண்டால் மற்று யாவரும் கொள்வர்; பிறர் இடைநீ
ஒற்றி கொண்டாய்; ஒற்றியூரையும் கைவிட்டு, உறும் என்று
எண்ணி
விற்றி கண்டாய்; மற்றுஇது ஒப்பல் இல் இடம்-வேதியனே"

8. "மேவித்து நின்று விளைந்தன" எனத் தொடங்கும் பாடல் திருப்பழனம் தலத்திற்குரியது. இப்பதிகம் 10 பாடல்கள் கொண்டது. இப்பதிகத்தில் இடம்பெறும் பெரும்பாலான பாடல்கள் இறைவனை முன்னிலை படுத்தி பாடும் வகையில் அமைந்துள்ளன. சான்றாக ஒன்பதாம் பாடல் வருமாறு :

"போகம் வைத்தாய், புரிபுன்சடை மேல் ஓர் புனல் அதனை
ஆகம் வைத்தாய் மலையான் மடமங்கை மகிழ்ந்து உடனே
பாகம் வைத்தாய்; பழனத்து அரசே! உன்பணி அருளால்
ஆகம் வைத்தாய்; அடியேனைக்குறிக் கொண்டு
அருளுவதே"

இப்பாடல்களின் இறுதித் தொடர், "அடியேனைக்குறிக் கொண்டு அருளுவதே" என்றவாறு நிறைவடைகின்றது.

9. "மாலினை மால் உற நின்றான்" எனத் தொடங்கும் பதிகம், திருப்பூந்துருத்தி தலத்திற்குரியது. இப்பதிகம் 10 பாடல்கள் கொண்டது. இப்பாடல்களில் இறைவனின் திருவடிகளைப் பலவாறு போற்றி, அவ்வடிகள் தாம் போற்றி வணங்கும் அடிகளாம் என்று திருநாவுக்கரசர் கூறுகிறார். சுத்தாங்கமாக பாடுவதற்கேற்ற இப்பதிகத்தின் இரண்டாம் பாடல் சான்றாக இங்கு கொடுக்கப்படுகிறது.

"மறி உடையான், மழுவாளினன், மாமலை மங்கை ஓர்பால்
குறி உடையான் குணம் ஒன்று அறிந்தார் இல்லை; கூறில்
அவன்
பொறி உடைவாள் அரவத்தவன்; பூந்துருத்தி(ய்) உறையும்
அறிவுஉடை ஆதிபுராணனை-நான் அடிபோற்றுவதே"

10. "பார் இடம் சாடிய பல் உயிர்" எனத் தொடங்கும் பதிகம் திருநெய்த்தானம் தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகம், நெய்த்தானத்து இறைவனின் உருவை வருணிக்கும் வகையில் அமைந்துள்ளது. இதன்

நான்காம் பாடலில் கொட்டு முழவம் போன்ற கருவிகளுக்கேற்ப நடனமாடும் இறைவனின் கோலம் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

"கொட்டு முழவு அரவத்தொடு கோலம் பல அணிந்து
நட்டம் பல பயின்று ஆடுவர்; நாகம் அரைக்கு அசைத்துச்
சிட்டர் திரிபுரம் தீஎழச் செற்ற சிலை உடையான்
இட்டம் உமையொடு நின்ற நெய்த்தானத்து இருந்தவனே"

11. "கையது கால் எரி நாகம்" எனத் தொடங்கும் பதிகம் திருவேதிகுடி தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின்ஒவ்வொரு பாடலிலும் இறைவனின் உருவத் தன்மைக் கூறி, அவனை நாம் அடைவோம் என்னும் கருத்து வெளிப்படும் வகையில் பாடப்பட்டுள்ளது. இதன் ஆறாம் பாடலில் பண் குறிப்பு காணப்படுகிறது.

"எண்ணும் எழுத்தும் குறியும் அறிபவர் தாம் மொழிய,
பண்ணின் இசைமொழி பாடிய வானவர் தாம் பணிவார்
திண்ணென் வினைகளைத் தீர்க்கும் பிரான்; திருவேதிகுடி
நண்ண அரிய அமுதினை நாம் அடைந்து ஆடுதுமே"

12. "குறுவித்தவா, குற்றம் நோய்" எனத் தொடங்கும் பதிகம் திருஐயாறு தலத்திற்குரியது. இதில் 10 பாடல்கள் அடங்கியுள்ளன. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் "தொண்டனேனைத் தன் பொன்அடிக்கீழ் எனையே" என்ற தொடர் வந்துள்ளது. ஒவ்வொரு பாடலும் இறைவனை விளித்துக் கூறும் வகையில் அமைந்துள்ளது. சுத்தாங்கமாக பாடுவதற்கேற்ற இப்பதிகத்தின் முதற்பாடல் சான்றாக இங்கு தரப்படுகிறது.

"குறுவித்தவா, குற்றம் நோய்வினை காட்டி! குறுவித்தநோய்
உறுவித்தவா! உற்றநோய்வினை தீர்ப்பான் உகந்து அருளி
அறிவித்த ஆறு, அடியேனை ஐயாறன் அடிமை(க்) களே!
செறிவித்தவா-தொண்டனேனைத் தன் பொன் அடிக்கீழ்
எனையே"

13. "சிந்திப்பு அரியன: சிந்திப்பவர்க்கு" எனத் தொடங்கும் பதிகம் திருஐயாறு தலத்திற்குரியது. இப்பதிகம் இருபது பாடல்களைக் கொண்டு விளங்குகின்றது.

ஐயாறப்பனின் அடித்தலங்களின் பெருமையை உரைக்கும் வகையில் இப்பாடல்கள் திகழ்கின்றன. இப்பாடல்களில் முதற்பாடல் சுத்தாங்கமாகவும், 17 ஆம் பாடல் பண்ணாங்கமாகவும், ஓதுவார் தருமபுரம் சுவாமிநாதன் அவர்களால் பாடப்பெற்று ஒலிப்பதிவு நாடாவில் வெளிவந்துள்ளன. மரபுக்கேற்ப கௌசிகப் பண்ணில் இப்பாடல் அமைந்துள்ளது. இவற்றுள், "ஓதிய ஞானமும்" எனத் தொடங்கும் பாடல் இதுவரையில் சுரதாள குறிப்புகளுடன் நூல்களில் வெளிவராததால் இங்கு சுரதாள குறிப்புடன் இப்பாடல் கொடுக்கப்படுகிறது.

பண் : கௌசிகம் தாளம்: ஆதி
இராகம் : பைரவி

(20 ஆவது மேளகர்த்தாவான நடபைரவியில் பிறந்தது)

**சுத்தாங்கம்**

"சிந்திப்பு அரியன; சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன்
முந்திப் பொழிவன; முத்தி கொடுப்பன; மொய்த்து இருண்டு
பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன-பாம்பு சுற்றி
அந்திப் பிறை அணிந்து ஆடும் ஐயாறன் அடித்தலமே"

**பண்ணாங்கம்**

| /4 | 0 | 0 |
|---|---|---|
| ;,ச்சாச்நீ ரிச்நித தாபா | ;,பாதாப | பாதநி தபமா |
| ..ஓ திய ஞா...னமும் | ..ஞானபொ | ரு.ளும். |
| ;பபா ததா நீ;ச்சா; | ;ரிரீ நிதா | நீ;ச்சா; |
| .ஒலி சிறந் த... | .ஒலிசிறந் | த . . . |
| ;,ரீரிநீ ச்சாச்சா ரீரீ | ;,ரீரிக்ரி | க்ரிரிச் ச்சாச்சா |
| ..வேதியர் வே.தமும் | ..வேள்வியும் | ஆ...வன |
| ;.பா;பா; ; ; தா | நீச்சா ; ; | ; ; ; ; |
| . விண் ணும் மண் | .ணும். . | . . . . |
| ;,தாததா தாதா தாதா | ;,தநிச்சா | ச்நிரிச் நிதபா |
| ..சோதியம் செஞ்.சுடர். | ..ஞாயிறும் | ஒப்ப...ன |
| ;பாதபா மபதா தபபம | மா ; ; ; | மபதாபா; |
| ..தீ மதி யோ..டு... | . . . . | . . . . |
| ;,ரீரிநீ ச்சாச்சாரீரீ | ரிக் ரிக்ச்ரீ, | ; ; ; ; |

| | | |
|---|---|---|
| ..ஆதியும் அந்.தமும் | ஆ.ன.. | |
| ரீரீக்ரி ச்ா ச்ச்ாச்ரீ | நீ;தா; | நீ;ச்ா; |
| ஐயா.றன் அடித்தல | மே . . | . . . |
| ச்ா ச்பா, ; ததா க்ாரி | நீ;தா; | நீ;ச்ா; |
| ஐ யாறன் அடித் தல | மே . . . | . . . . . |

இப்பாடலில் ஐந்து சீர்கள் கொண்ட ஒருவரி இரண்டு ஆவர்த்தனங்களில் அமைக்கப்பட்டுள்ளது. இரண்டாம் ஆவர்த்தம் நிறைவு பெறுவதற்காக இறுதிச்சீர் இரண்டு முறை பாடப்படுகிறது. "ஒலிசிறந்த" என்னும் சொல் இரண்டு திருதங்கள் நிறைவு பெறவேண்டும் என்பதற்காக மற்றொரு முறை பாடப்பெறுகிறது. மற்ற வரிகளில் நீண்ட கார்வைகள் கொடுத்துப் பாடுவதன் மூலம் இரண்டு ஆவர்த்தனங்களில் நிறைவடையும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது.

14. "வானவர் தானவர் வைகல்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கண்டியூர் தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகம், கண்டியூர் இறைவனை போற்றி கூறும் வகையில் அமைந்துள்ளது. சான்றாக முதற்பாடல் வருமாறு:

"வானவர் தானவர் வைகல் மலர் கொணர்ந்து இட்டு
இறைஞ்சித்
தானவர் மால் பிரமன்(ன்) அறியாத தகைமையினான்
ஆனவன், ஆதிபுராணன், அன்று ஓடிய பன்றி எய்த
கானவனை, கண்டியூர் அண்டவாணர் தொழுகின்றதே"

15. "ஈன்றாளுமாய், எனக்கு எந்தையுமாய்" எனத் தொடங்கும் பதிகம், திருப்பாதிரிப்புலியூர் தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்டது. இதன் எட்டாம் பாடல் மிகவும் பிரபலமாக ஓதுவார்களால் தற்போது பாடப்பட்டு வருகிறது. சுத்தாங்கமாக பாடப்படும் இப்பாடல் வருமாறு :

"புழு ஆய்ப் பிறக்கினும் புண்ணியா! உன் அடி என்மனத்தே
வழுவாது இருக்க வரம் தரவேண்டும்-இவ் வையகத்தே
தொழுவார்க்கு இரங்கி இருந்து அருள் செய் பாதிரிப்
புலியூர்ச்
செழுநீர்ப் புனல் கங்கை செஞ்சடை மேல் வைத்த
தீவண்ணனே!"

16. "வான் சொட்டச் சொட்ட நின்று" எனத் தொடங்கும் பதிகம், திருவீழிமிழிலை தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்டது. இப்பாடல்களில் திருநாவுக்கரசர் இறைவனை நோக்கி, "நான் உம்மை மறக்கினும், என்னை குறிக்கொண்டு ஆட் கொள்க" என்று வேண்டுகிறார். சான்றாக முதல் பாடல் வருமாறு :

"வான் சொட்டச் சொட்ட நின்று அட்டும் வளர்மதியோடு
அயலே
தேன் சொட்டச் சொட்ட நின்று அட்டும் திருக்கொன்றை
சென்னி வைத்தீர்
மான் பெட்டை நோக்கி மணாளீர் மணிநீர் மிழலை
உள்ளீர்
நான் சட்ட உம்மை மறக்கினும், என்னைக்
குறிக்கொண்மினே!"

17. "கோவாய் முடுகி அடுதிறல்" எனத் தொடங்கும் பதிகம் திருச்சத்தி முற்றம் தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலும் இறைவனின் அருளை வேண்டிப் பாடும் வகையில் உள்ளது. ஒவ்வொரு பாடலும் "சத்திமுற்றத்து உறையும் சிவக்கொழுந்தே" என்று முடிவுறுகிறது. இப்பதிகத்தின் ஐந்தாம் பாடல் சுத்தாங்கமாக ஓதுவார்களால் பிரபலமாக பாடப்படும் பாடலாகும். இப்பாடல் வருமாறு :

"கருஉற்று இருந்து உன் கழலே நினைந்தேன்; கருப்புவியில்
தெருவில் புகுந்தேன்; திகைத்தடியேனைத் திகைப்பு ஒழிவி!
உருவில் திகழும் உமையாள் கணவா! விடின் கெடுவேன்
திருவின் பொலி சத்திமுற்றத்து உறையும் சிவக்
கொழுந்தே!"

18. "அட்டுமின் இல்பலி" எனத் தொடங்கும் பதிகம் திருநல்லூர் தலத்திற்குரியது. 11 பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலிலும் தலசிறப்பு வருணிக்கப்பட்டுள்ளது. நல்லூர் இறைவனை, "கொட்டிய பாணி எடுத்திட்ட பாதமும் கோள் அரவும் நட்டம் நின்று ஆடியநாதர்" என்று வருணிக்கிறார். நல்லூர் இறைவன் மேலும், "பண் இட்ட பாடலர் ஆடவரைப் பற்றியுள்ளார்" என்று கூறுகிறார். இப்பதிகத்தின் பத்தாம் பாடலில் பூக்கள் பூத்து குலுங்கும்

நல்லூர் நகரைப் பின்வருமாறு வருணிக்கிறார்.

“திருஅமர் தாமரை, சீர்வளர் செங்கழுநீர், கொள் நெய்தல்
குருஅமர் கோங்கம், குரா, மகிழ், சண்பகம், கொன்றை,
வன்னி,
மருஅமர் நீள் கொடிமாடம் மலி மறையோர்கள் நல்லூர்
உருஅமர் பாகத்து உமையவள் பாகனை உள்குதுமே”

19. “அந்திவட்டத் திங்கள் கண்ணியன்” எனத் தொடங்கும் பதிகம் திருஐயாறு தலத்திற்குரியது. இப்பதிகம் இரண்டே பாடல்களைக் கொண்டுள்ளது. இரண்டாம் பாடல் திருஐயாற்று இறைவனின் கால்களை வருணிக்கும் வகையில் அமைந்துள்ளது :

“பாடகக்கால்; கழல்கால்; பரிதிக்கதிர் உக்கஅந்தி
நாடகக்கால்; நங்கைமுன் செங்கண் ஏனத்தின் பின்நடந்த
காடுஅகக்கால்; கணம் கைதொழும் கால்; எம் கணாய்
நின்றகால்;
ஆடகக்கால்-அரிமால் தேர அல்லன் ஐயாற்றனவே”

20. “ஓதுவித்தாய் முன் அறஉரை” எனத் தொடங்கும் பதிகம் திருக்கச்சி ஏகம்பம் தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனை ஏத்தி வணங்கும் வகையில் அமைந்துள்ளது. இதன் ஆறாம் பாடல் சுத்தாங்கமாக ஓதுவார்களால் பிரபலமாக பாடப்பட்டு வருகின்றது. இப்பாடல் வருமாறு :

“கருஉற்ற நாள் முதல்ஆக உன் பாதமே காண்பதற்கு(வ்)
உருகிற்று என் உள்ளமும் நானும் கிடந்து அலந்து எய்த
தொழிந்தேன்
திருஒற்றியூரா! திரு ஆலவாயா! திருஆரூரா!
ஒருபற்று இலாமையும் கண்டு இரங்காய்-கச்சிஏகம்பனே!”

21. “மன்னும் மலைமகள் கையால் வருடின” எனத் தொடங்கும் பதிகம் திருஇன்னம்பர் தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்டது. திருஇன்னம்பர் இறைவனின் இணைஅடிகளின் சிறப்பினை எடுத்துரைக்கும் வகையில் இப்பாடல்கள் அமைந்துள்ளன. இப்பாடல்கள் சுத்தாங்கமாக பாடுவதற்கு ஏற்றவை. ஏழாம் பாடல் வருமாறு:

"போற்றும் தகையன; பொல்லா முயலகன் கோபப்புன்மை
ஆற்றும் தகையன; ஆறு சமயத்தவர் அவரைத்
தேற்றும் தகையன; தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே
ஏற்றும் தகையன-இன்னம்பரான்தன் இணைஅடியே"

22. "குலம்பலம் பாவரு குண்டர் முன்னே" எனத் தொடங்கும் பதிகம் திருஆரூர் தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்டது. சமண சமணத்தைச் சார்ந்திருந்த எனக்கும் புண்ணியம் உண்டோ? என்று வினவும் வகையில் இப்பாடல்கள் அமைந்துள்ளன. முதல் பாடல் வருமாறு :

"குலம்பலம் பாவரு குண்டர் முன்னே நமக்கு உண்டு
கொலோ
அலம்பு அலம்பாவரு தன்புனல் ஆரூர் அவிர்சடையான்
சிலம்பு அலம்பா வருசேவடியான், திருமூலட்டானம்
புலம்பு அலம்பா வருதொண்டர்க்குத் தொண்டர்ஆம்
புண்ணியமே?"

23. "வேம்பினைப் பேசி, விடக்கினை ஓம்பி" எனத் தொடங்கும் பதிகம் திருஆரூர் தலத்திற்குரியது. இப்பதிகம் ஏழு பாடல்கள் கொண்டது. இறைவனைப் பலவாறாக தொழுது உய்ய வேண்டும் என்று உலகத்தவர்க்கு அறிவுறுத்தும் வகையில் இப்பாடல்கள் உள்ளன. இறுதிப் பாடலில் இராவணன் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. இப்பாடல் வருமாறு :

"சங்கு ஒலிப் பித்திடுமின், சிறுகாலைத் தடவு அழலில்
குங்குலிப்புகைக் கூட்டு என்றும் காட்டி! இருபதுதோள்
அங்கு உலம் வைத்தவன் செங்குருதிப்புனல் ஓட
அஞ்ஞான்று
அங்குலி வைத்தான் அடித்தாமரை என்னை ஆண்டனவே"

24. "வடிவுடை மாமலை மங்கை பங்கா" எனத் தொடங்கும் பதிகம் திருநாகைக் காரோணம் தலத்திற்குரியது. ஒன்பது பாடல்கள் இப்பதிகத்திலடங்கும். இறைவனின் உருவை வருணித்துப் பாடும் வகையில் இப்பாடல்கள் அமைந்துள்ளன. [illegible]டுவதற்கு ஏற்ற பதிகம். சான்றாக ஐந்தாம் பாடல் இங்கு தரப்படுகிறது.

"செந்துவர் வாய்க் கருங்கண் இணை வெண்நகைத்
தேமொழியார்
வந்து வலம் செய்து, மாநடம் ஆட, மலிந்த செல்வக்
கந்தம் மலி பொழில் சூழ்கடல் நாகைக் காரோணம் என்றும்
சிந்தை செய்வாரைப் பிரியாது இருக்கும், திருமங்கையே"

25. "மாசுஇல் ஒள்வாள் போல்" எனத் தொடங்கும் பதிகம் திருஅதிகை வீரட்டானம் தலத்திற்குரியது. ஏழு பாடல்கள் கொண்டது. இப்பாடல்கள் வீரட்டநகரின் இயற்கையெழிலை வருணித்துப் பாடப்பட்டுள்ளது. முதற்பாடலில் "பாசடை நீலம் பருகிய வண்டு பண் பாடல் கண்டு, வீசும் கெடில வடகரைத்தே எந்தை வீரட்டமே" என்று வண்டுகள் பண்பாடல் பாடும் சிறப்பு குறிப்பிடப் பட்டுள்ளது. ஏழாம் பாடலில் தாளங்கள், குழல், யாழ் போன்ற இசைக்கருவிகள் பின்வருமாறு குறிப்பிடப் பட்டுள்ளன.

"காளம் கடந்தது ஓர் கண்டத்தர் ஆகிக் கண்ஆர் கெடில
நாள் அங்கடிக்கு ஓர் நகரமும், மாதிற்கு நன்கு இசைந்த
தாளங்கள் கொண்டும், குழல் கொண்டும், யாழ் கொண்டும்,
தாம் அங்ஙனே
வேடங்கள் கொண்டும், விசும்பு செல்வார் அவர்-
வீரட்டரே"

26. "தன்னைச் சரண் என்று தாள் அடைந்தேன்" எனத் தொடங்கும் பதிகம் திருப்புகலூர் தலத்திற்குரியது. நான்கு பாடல்கள் கொண்ட இப்பதிகம், பிறப்பு அறுத்து சிவலோக பதவியை வேண்டும் வகையில் அமைந்தது. சுத்தாங்கமாக பாடுவதற்கேற்ற இப்பதிகத்தின் முதற்பாடல் வருமாறு :

"தன்னைச் சரண் என்று தாள் அடைந்தேன்; தன் அடி
அடைய
புன்னைப் பொழில் புகலூர் அண்ணல் செய்வன
கேண்மின்களோ!
என்னைப் பிறப்புஅறுத்து, என்வினை கட்டு அறுத்து,
ஏழ்நரகத்து
என்னைக் கிடக்கல் ஒட்டான், சிவலோகத்து இருத்திடுமே"

27. "நெய்தல் குருகுதன் பிள்ளை" எனத் தொடங்கும் பதிகம் திருக்கழிப்பாலை தலத்திற்குரியது. மூன்று பாடல்கள் மட்டுமே கொண்ட இப்பதிகம் இறைவனை ஏத்தி புகழும் வகையில் அமைந்தது. முதற்பாடல் வருமாறு :

"நெய்தல் குருகு தன் பிள்ளை என்று எண்ணி நெருங்கிச் சென்று
கைதைமடல் புல்கு தென்கழிப்பாலை அதின்உறைவாய்!
பைதல் பிறையொடு பாம்புஉடன் வைத்த பரிசுஅறியோம்;
எய்தப்பெறின் இரங்காது கண்டாய்-நம் இறையவனே!"

28. "மருள் துயர் தீர" எனத் தொடங்கும் பதிகம், திருக்கடவூர் தலத்திற்குரியது. 10 பாடல்கள் கொண்டது. இப்பாடல்கள் காலனை உதைத்த இறைவனின் சேவடிகளைப் புகழ்ந்து பாடுவன. பத்தாம் பாடலில் பின்வருமாறு இராவணனை பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

"தேன்திகழ் கொன்றையும், கூவிளமாலை, திருமுடிமேல்
ஆன்திகழ் ஐந்து உகந்து ஆடும்பிரான்; மலைஆர்த்து எடுத்த
கூன்திகழ் வாள் அரக்கன் முடிபத்தும் குலைந்துவிழ
ஊன்றிய சேவடியின்-கடவூர் உறை உத்தமனே"

29. "மாணிக்கு உயிர்பெற" எனத் தொடங்கும் பதிகம் திருமாற்பேறு தலத்திற்குரியது. இரண்டே பாடல்களைக் கொண்டு திகழ்கின்றது. இறைவனின் மலரடி சிறப்பு இப்பாடல்களில் காணப்படுகின்றது. சுத்தாங்கமாக பாடுவதற்கேற்ற இப்பதிகத்தின் முதற்பாடல் வருமாறு :

"மாணிக்கு உயிர்பெறக் கூற்றை உதைத்தன; மாவலிபால்
காணிக்கு இரந்தவன் காண்டற்கு அரியன; கண்ட தொண்டர்
பேணிக் கிடந்து பரவப்படுவன; பேர்த்தும் அஃதே
மாணிக்கம் ஆவன-மாற்பேறு உடையான் மலர் அடியே"

30. "பொன்ஆர் திருவடிக்கு" எனத் தொடங்கும் பதிகம் திருக்கடந்தைத் தூங்கானை மாடம் தலத்திற்குரியது. மூன்று பாடல்களைக் கொண்டது.

முதற்பாடல் சுத்தாங்கமாக ஓதுவார்களால் பிரபலமாக பாடப்பட்டு வருகின்றது. இப்பாடல் வருமாறு :

"பொன்ஆர் திருவடிக்கு ஒன்று உண்டு, விண்ணப்பம்
போற்றி செய்யும்
என் ஆவி காப்பதற்கு இச்சை உண்டேல், இருங்கூற்று
அகல
மின்ஆரும் மூஇலைச்சூலம் என்மேல் பொறி-மேவு
கொண்டால்
துன்ஆர் கடந்தையுள் தூங்கானை மாடச்சுடர் கொழுந்தே"

31. "சாம்பலைப் பூசித் தரையில் புரண்டு" எனத் தொடங்கும் பதிகம் எட்டு பாடல்களைக் கொண்டு அமைந்ததொரு பொதுப் பதிகமாகும். ஒவ்வொரு பாடலிலும் இறைவனைப் பலவாறாக வருணித்து, இறுதியில், "எம்மை ஆளும் பசுபதியே" என்று நிறைவு பெறுகிறது. இவ்வாறு ஒவ்வொரு பாடலின் இறுதித் தொடரும் "பசுபதியே" என்று நிறைவு பெறுவதால் இப்பதிகம் "பசுபதி திருவிருத்தம்" என்ற சிறப்புப் பெயர் பெற்று விளங்குகின்றது. இப்பதிகத்தின் முதற்பாடல் வருமாறு :

"சாம்பலைப் பூசித் தரையில் புரண்டு, நின் தாள் பரவி,
ஏம்பலிப் பார்கட்கு இரங்கு கண்டாய்-இருங்கங்கை
என்னும்
காம்பு அலைக்கும் பணைத்தோளி கதிர்ப் பூண் வனமுலை
மேல்
பாம்பு அலைக்கும் சடையாய்! எம்மை ஆளும் பசுபதியே"

32. "விடையும் விடைப்பெருகும்" எனத் தொடங்கும் பதிகம், "சரக்கறை" திருவிருத்தம் என்று அழைக்கப்படுகிறது. 11 பாடல்கள் கொண்ட இப்பதிகம் பொதுப் பதிகமாகும். ஒவ்வொரு பாடலிலும் இறைவன் குடிகொண்டுள்ள இடம் என் தனி நெஞ்சமே என்று திருநாவுக்கரசர் கூறும் வகையில் அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலும், "சரக்கறையோ என் தனி நெஞ்சமே!" என்று நிறைவு பெறுகிறது. இதனால் இப்பதிகம் "சரக்கறை திருப்பதிகம்" என்னும் சிறப்புப் பெயர் கொண்டு விளங்குகின்றது. இதன் எட்டாம் பாடலில் பலவகையான

இசைக்கருவிகள் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளன.

"விடுபட்டி ஏறு உகந்து ஏறீ! என் விண்ணப்பம்; மேல் இலங்கு
கொடுகொட்டி, கொக்கரை, தக்கை, குழல், தாளம்,
வீணை, மொந்தை,
வடுவிட்ட கொன்றையும், வன்னியும், மத்தமும்,
வாள்அரவும்,
தடுகுட்டம் ஆடும் சரக்கு அறையோ, என்தனி நெஞ்சமே"

33. "வெள்ளிக் குழைத்துணி போலும்" எனத் தொடங்கும் பதிகம், "தனித் திருவிருத்தம்" என்ற பெயருடன் விளங்குகின்றது. 10 பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலும் இறைவனின் பெருமைகளைக் கூறும் வகையில் உள்ளது. இதன் நான்காம் பாடல் சுத்தாங்கமாக திரு. தருமபுரம் சுவாமிநாதன் அவர்கள் பாடி ஒலிப்பதிவு நாடாவில் வெளிவந்துள்ளது.[4] காந்தார பஞ்சமப் பண்ணில் (கேதார கௌள) பாடப்பட்டுள்ள இப்பாடல் வருமாறு :

"நின்னை எப்போதும் நினையல் ஒட்டாய் நீ; நினையப்புகில்
பின்னை அப்போதே மறப்பித்துப் பேர்த்து ஒன்று நாடு
வித்தி
உன்னை எப்போதும் மறந்திட்டு உனக்கு இனிதா இருக்கும்
என்னை ஒப்பார் உளரோ? சொல்லு, வாழி! -
இறையவனே!"

34. "பவளத் தடவரை போலும்" எனத் தொடங்கும் பதிகம் "தனித் திருவிருத்தம்" என்றழைக்கப்படுகிறது. 11 பாடல்கள் கொண்டு விளங்கும் இப்பதிகம் இறைவனின் உருவை பலவாறு வருணித்து புகழ்ந்து பாடுகின்றது. சான்றாக முதற்பாடல் வருமாறு :

"பவளத் தடவரைபோலும், திண்தோள்கள்; அத்தோள்
மிசையே
பவளக் குழை தழைத்தால் ஒக்கும் பல்சடை; அச்சடைமேல்
பவளக் கொழுந்து அன்ன பைம்முகநாகம்;

4. தருமபுரம் சுவாமிநாதன் ஒலிநாடா, வாணி வெளியீடு, சென்னை.

அந்நாகத்தொடும்,
பவளக்கண் வாலமதி, எந்தை சூடும் பனிமலரே"

**முடிவுரை**

திருநாவுக்கரசர் இயற்றியுள்ள 34 திருவிருத்தப் பாடல்கள் பெரும்பாலும் இறைவனின் உருவை வருணித்தும், பிறவிப்பிணி அகற்ற வேண்டியும், தலச்சிறப்பு, இறைவனின் திருவடி சிறப்பு போன்ற சிறப்புக்களைப் பற்றியும், சமண சமயத்தைச் சார்ந்திருந்த நாட்களை எண்ணி வருந்தி உருகிப்பாடும் நிலையிலும் பாடப்பட்டுள்ளன.

இவை பெரும்பாலும் சுத்தாங்கமாக பாடுவதற்கேற்ற நிலையிலுள்ளன. மரபு வழியாக பழம் பஞ்சுரம், கௌசிகம் போன்ற பண்கள் இதற்கேற்ற பண்களாக உள்ளன. இருப்பினும் தற்போது பாடல்களின் சுவை மற்றும் கலைஞர்களின் மனோநிலை கருதியும் இப்பண்கள் மாற்றி பாடப்பட்டு வருகின்றன. நட்டராகம் (பந்துவராளி) காந்தார பஞ்சமம், (கேதாரகௌளை) போன்ற பண்களிலும் திருவிருத்தப் பாடல்கள் முன்னணி ஓதுவார்களால் பாடப்பட்டு வருகின்றன. பண்ணாங்கமாக பாடப்பட்டு வரும், நூல்களில் இதுவரையில் வெளிவராத சில பாடல்கள் சுரதாள குறிப்புடன் இவ்வியலில் கொடுக்கப்பட்டுள்ளன.

கொடுகொட்டி, கொக்கரை, தக்கை, தாளம், யாழ், வீணை, குழல், மொந்தை போன்ற இசைக்கருவிகள் ஒருசில பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

# 5

# திருக்குறுந்தொகை பதிகங்களின் இசைச் சிறப்பு

திருநாவுக்கரசர் இயற்றிய பதிகங்களுள், ஐந்தாம் திருமுறையில் காணப்படும் 1 முதல் 100 பதிகங்கள் 'திருக்குறுந்தொகை' என்று அழைக்கப்படுகின்றன. திருநாவுக்கரசர் பதிகங்களுள், இப்பகுதிப் பாடல்கள் குறுகிய அடிகளைக் கொண்டு விளங்குகின்ற காரணத்தால் இதற்குக் குறுந்தொகை என்ற பெயர் வந்திருக்கலாம். இது செய்யுள் வகையே என்று பெரும்பாலோர் கருதுகின்றனர். இவை யாவும் கலிவிருத்த யாப்பால் அமைந்தவை.

தமிழிசைச் சங்கத்தின் பண்ணாராய்ச்சி மாநாடுகளில் தெரிவித்த கருத்துக்களின்படி திருக்குறுந்தொகை பதிகங்கள் மரபு வழியாக இந்தளப் பண்ணில் பாடப்பட்டு வருவதாகத் தெரிகின்றது.[1] சீகாழி திருஞான சம்பந்த கண்ணுடைய வள்ளலார் ஆதீனத்தில் இருந்த ஏட்டுச்சுவடியில் பண்களுக்குரிய இராகங்கள் காணப்படுகின்றன. இச்சுவடியில் காணப்படும் செய்திகளுக்கு ஆதாரமாக உமாபதி சிவாச்சாரிய சுவாமிகள் ஓர் அகவற்பாவைக் கூறியிருக்கின்றார்கள். இதில், "..... பூந்திருக்குறுந்தொகை பூரி கலியாணியாய்" என்று திருக்குறுந்தொகைக்குரிய இராகம் பூரிகலியாணி என்று காணப்படுகிறது. ஆனால் நடைமுறையில் பெரும்பகுதி இந்தளப் பண்ணில் நாதநாமகிரியையில் பாடப்பட்டு வருகிறது. சிற்சில இடங்களில் மாலை வேளைகளில் பூரிகலியாணியில் பாடப்பட்டு வருகின்றது.

1 பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும், பக். 144

திருக்குறுந்தொகை பாடும் மரபு பற்றி மேலும் சில ஓதுவார்கள் கூறுவதாவது : திருவாரூர் குருசாமி தேசிகர் காலத்தில் திருக்குறுந்தொகையைக் காலை நேரத்தில் தன்யாசி இராகத்தில் பாடும் வழக்கு வந்தது. இவர் காலத்தில் பண்களை இலயாங்கமாக மிகவும் விரிவாகப் பாடும் வழக்கம் வந்தது. ஆக, தன்யாசி, சாவேரி, நாதநாமகிரியை, பூரிகல்யாணி ஆகிய நான்கு இராகங்களில் திருக்குறுந்தொகை பாடப்பட்டு வருகிறது. இப்பதிகங்களை மக்களிடையே பரப்ப வேண்டும் என்பதற்காக ஓதுவார்கள் சிலர் தங்களுக்கு விருப்பமான, பாடலோடு பொருந்தி வருகிற இராகங்களில் இப்பாடல்களை அமைத்து தேவார இசை அரங்குகளில் சுத்தாங்கமாகவும் பண்ணாங்கமாகவும் பாடி வருகின்றனர். இது வரவேற்க தக்கதொரு மாற்றம் என்றே கருத வேண்டும்.

திருக்கோயில்களில் மகேசுவர பூசை நிகழும்போது மரபாக குறுந்தொகை நாதநாமகிரியையில் பாடப்பட்டு வருகிறது. பெரும்பாலான தலங்களில் காலை நேரத்தில் திருப்பள்ளியெழுச்சியாக திருக்குறுந்தொகை பாடப்பட்டு வருகிறது.

இனி மேற்கண்ட கருத்துக்களின் அடிப்படையில் திருக்குறுந்தொகைப் பாடற் சிறப்பினை ஈண்டுக் காணலாம். ஒவ்வொரு பதிகத்திலும் பாடுவதற்கேற்ற ஒரு பாடல் இங்கு தரப்படுகிறது. பாடலின் பொருளுக்கேற்ப இதனை சுத்தாங்கமாகவோ (அ) பண்ணாங்கமாகவோ மேற்கண்ட இராகங்களில் அமைத்துப் பாடலாம்.

திருக்குறுந்தொகையில் காணப்படும் 100 பதிகங்களில் பன்னிரண்டு பொதுப் பதிகங்களாகும். பொதுவாக தலத்தின் பெயர் எல்லா பதிகங்களிலும் இடம்பெற்றுள்ளது. தலப்பெயர் மூன்றாவது அடியில் மிக அதிகமான பாடல்களில் வந்துள்ளது.

இப்பதிகங்களில் இறைபுகழைப் போற்றுவதனால் உண்டாகும் பயனைக் கூறுதல், கூற்றுவன் வரும்பொழுது குறிக்கொள்க என்று வேண்டுதல், நெஞ்சுக்கு அறிவுறுத்தல், உலகுக்கு உபதேசித்தல், இறைவனை மலர் தூவி வழிபடுவதனைக் குறிப்பிடுதல், சிவபெருமானின் அழகைக்

கூறுதல், இறைவனது முழுமுதல் தன்மையைக் கூறுதல், வினை தீரும் முறையை விளம்புதல், முப்புரம் எரித்ததனைக் கூறுதல், மேலும், திருநாவுக்கரசர் தம் வரலாற்றைக் கூறுதல், சமணர் செயல்களைக் கூறுதல் போன்றவை இப்பதிகங்களில் வரும் உள்ளடக்கக் கூறுகள் ஆகும்.

1. "அன்னம் பாலிக்கும்" எனத் தொடங்கும் பதிகம் கோயில் என்னும் சிதம்பரம் தலத்துக்குரியது. 11 பாடல்கள் கொண்ட இப்பதிகம் ஐந்தாம் திருமுறையின் முதற்பதிகமாகும். இப்பதிகத்தின் நான்காம் பாடல் வருமாறு :

"அல்லல் என் செயும்? அருவினை என் செயும்?
தொல்லை வல்வினைத் தொந்தம்தான் என்செயும்?
தில்லைமா நகர்ச் சிற்றம்பலவனார்க்கு
எல்லை இல்லை ஓர் அடிமை பூண்டேனுக்கே"

இப்பாடலில் சிற்றம்பலவனாரிடத்து அடிமைபூண்ட எனக்கு அல்லலும் வினையும் என்ன செய்ய முடியும்? என்று வினவும் வகையில் அமைந்துள்ளது. இக்கருத்துக்கேற்ப விரும்பிய இராகத்தில் சுத்தாங்கமாக பாடப்பெறுதல் பொருத்தமாகும். .15 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அருணகிரிநாதர் இயற்றிய,

"நாள் என் செயும் வினைதான் என் செயும் எனை நாடி வந்த
கோள் என் செயும் கொடுங் கூற்றென் செயும் குமரேசர் இரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்னே வந்து தோன்றிடினே"

என்னும் கந்தரலங்காரப் பாடலிலும் இதே கருத்தை ஒப்பிடத்தகுந்த வகையில் காணமுடிகிறது.[2]

2. "பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்" எனத் தொடங்கும் பதிகம் கோயில் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்துப் பாடல்களில் திருநாவுக்கரசர் சிற்றம்பல கூத்தனின் புகழைக் கூறி, அவனை மறந்து உய்வனோ? என்று வினவுகிறார். சான்றாக முதற்பாடல் வருமாறு :

2. அருணகிரிநாதா இயற்றிய கந்தா் அலங்காரம், செய்யுள எண் 38.

"பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்
நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்
அனைத்துவேடம் ஆம் அம்பலக் கூத்தனை
தினைத்தனைப் பொழுதும் மறந்து உய்வனோ?"

இப்பாடலின் பொருளுக்கேறப இதனை பழம்பஞ்சுரப் பண்ணில் பணணாஙகமாக இசை அமைத்துப பாடலாம். இதறகுரிய சுரதாள குறிபபு வருமாறு :

பண பழம்பஞ்சுரம் தாளம் ஆதி
இராகம் : சங்கராபரணம்

| /4 | 0 | 0 |
|---|---|---|
| ;சாசா பா பமகா மாகா | கரிகரி காரிக | மககரி சா; |
| பனைக கை மும மத | வே .ழமஉ | ரித்த வன |
| ;சாசாரீ சா; தாநீ | சாபா மகமரி | காமா பா, |
| .நினைபப வா மனம | கோ. யிலா | கொணடவன் |
| ,தபமக மாபா; தாநீ | ,;ச்சாரி சா | சாரிச் நித நீச்சா |
| அனைத்து வே டமஆம | அம பல | கூத . தனை |
| ;பாபா கரிச் நிதப தாநீ | ரீச்சா பாம | கா, கமகரி |
| .தினைதத.னை .பொழு | தும் மறந் துய்வ | னோ |
| கா | | |

3 "கடவுளை கடலுள எழு" எனத் தொடங்கும பதிகம திருநெலவாயில அரத்துறை என்ற தலததிறகுரியது பத்துப பாடல்கள் கொண்ட இபபதிகததில முதல மற்றும் ஒன்பதாம் பாடல்கள தவிர ஏனைய பாடல்களில் "ஒபபானை" என்ற சொல முதல அடியின் இரண்டாம சீராக வந்துள்ளது இப்பாடல்களில் அபபர், அரத்துறை மேவிய இறைவனையே தாம எபபோதும தொழுவதாகக் கூறுகிறார். இபபதிகததின இரண்டாம் பாடல வருமாறு

"கரும்பு ஒப்பானை, கரும்பினில் கட்டியை
விரும்பு ஒப்பானை, விண்ணோரும் அறிகிலா
அரும்பு ஒப்பானை, அரத்துறை மேவிய
சுரும்பு ஒப்பானை-கண்டீர்-நாம் தொழுவதே"

இப்பாடலின பொருளுக்கேறப இதனைச் சுத்தாஙகமாகப் பாடலாம

4 "வட்டனை மதிசூடியை" எனத் தொடங்கும பதிகம திருஅணணாமலை தலததிறகுரியது. பத்துப பாடலகள் கொண்ட இபபதிகததின் ஒவ்வொரு பாடலிலும இறைவன் முபபுரம் எரிதத செயலைக குறிப்பிட்டு, அபபடிப்பட்ட இறைவனை அடியேன் மறந்து உயவனோ என்று திருநாவுக்கரசர் வினவுகிறார். சான்றாக முதற்பாடல வருமாறு .

"வட்டனை(ம்) மதி சூடியை, வானவர்
சிட்டனை, திருஅண்ணா மலையனை,
இட்டனை, இகழ்ந்தார் புரம் மூன்றையும்
அட்டனை-அடியேன் மறந்து உய்வனோ?"

இப்பாடலின சநத அமைபபிறகேற்ப இதனைப் பணணாங்கமாக, நடடபாடை பண்ணில் இசை அமைத்துப பாடலாம் இதறகுரிய சுரதாளக குறிபபு வருமாறு :

பண் : நடடபாடை தாளம் கண்டசாபு
இராகம் . கமபீரநாடடை

| | /5 | /5 | |
|---|---|---|---|
| கா சகச | கமபாம | பா காம | கா, , |
| வட டனை | மதி சூடி | யை வான | வர். . |
| மா பமா | கமக சா | கம பபம | பா, , |
| சிட டனை | திரு அண் | ணா மலைய | னை |
| பா கமா | பச ச்சா | பச் ச்சாச | நிச நிபா |
| இட டனை | இகழநதோா | புர மூன்றை | யும |
| சச் கச்சா | நிச்சநிப | பப மகம | கசா; |
| அட டனை | அடியேன. | மறந் துய்வ | னோ |

5 "பட்டி ஏறு உகந்து ஏறி" எனத தொடங்கும பாடல திருஅண்ணாமலை தலத்திற்குரியது பததுப் பாடலகள் கொண்டது. இபபாடலகளில் அணணாமலை இறைவனை கைதொழுவதினால் நம வினைகள் போகும் என்று கூறப்படடுள்ளது. சான்றாக ஆறாம் பாடல வருமாறு ·

"கட்டி ஒக்கும், கரும்பின் இடை; துவரி
வெட்டி வீணைகள் பாடும் விகிர்தனார்,
அட்டமூர்த்தி, அண்ணாமலை மேவிய

நட்டம் ஆடியை, நண்ண நன்கு ஆகுமே"

6. "எப்போதும்(ம்) இறையும் மறவாது" எனத் தொடங்கும் பதிகம் திருஆரூர் தலத்துக்குரியது. இப்பதிகம் பத்துப் பாடல்கள் கொண்டது. ஆரூர் இறைவனை வருணிக்கும் வகையில் இப்பாடல்கள் காணப்படுகின்றன. சான்றாக முதற்பாடல் வருமாறு :

"எப்போதும்(ம்) இறையும் மறவாது, நீ;
முப்போதும் பிரமன் தொழ நின்றவன்
செப்பு ஓதும் பொனின் மேனிச் சிவன் அவன்,
அப்போதைக்கு, "அஞ்சல்!" என்னும்-ஆரூரரே"

இப்பாடலில் 'போது' என்ற சொல் திரும்ப திரும்ப ஆளப்பட்டிருப்பது குறிப்பிடத்தகுந்தது.

7. "கொக்கரை, குழல்" எனத் தொடங்கும் பதிகம், திருஆரூர் தலத்திற்குரியது. பன்னிரெண்டு பாடல்கள் கொண்டது. முதற்பாடலில் கொக்கரை, குழல், வீணை, கொடுகொட்டி ஆகிய இசைக்கருவிகளை இசைக்கும் பூதங்களுடன் ஆடும் ஆரூர் இறைவனை பின்வருமாறு வருணிக்கிறார்.

"கொக்கரை, குழல், வீணை, கொடுகொட்டி,
பக்கமே பகுவாயன பூதங்கள்
ஒக்க ஆடல் உகந்து உடன் கூத்தராய்
அக்கினோடு அரவு ஆர்ப்பர்-ஆரூரரே"

8. "பாறு அலைத்த படுவெண்" எனத் தொடங்கும் பதிகம் திருஅன்னியூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்டது. இப்பாடல்கள் அன்னியூர் இறைவனை வருணிக்கும் வகையில் அமைந்தது. முதற்பாடல் வருமாறு:

"பாறு அலைத்த படுவெண் தலையினன்
நீறு அலைத்த செம்மேனியன்-நேரிழை
கூறு அலைத்த மெய் கோள் அரவு ஆட்டிய
ஆறு அலைத்த சடை அன்னியூரனே"

இப்பாடலில் 'அலைத்த' என்னும் சொல் ஒவ்வொரு வரியின் இரண்டாவது சீராகக் காணப்படுகிறது.

9. "ஓதம் மால் கடல் பரவி" எனத் தொடங்கும் பதிகம்

திருமறைக்காடு தலத்திற்குரியது. திருநாவுக்கரசர் உழவாரப் பணி செய்து கொண்டு ஒவ்வொரு தலத்திற்குச் செல்லும் போதும் அத்தலத்து இறைவனைப் புகழ்ந்து பாடி வருகின்றார். அவ்வகையில் ஒன்பது பாடல்கள் கொண்ட இப்பதிகம் திருமறைக்காடு இறைவனை வருணித்தும் அத்தலத்தைப் புகழ்ந்தும் பாடும் வகையில் அமைந்தது. இரண்டாம் பாடலில் இறைப்பணி செய்யும் தம் அடியார்களை இறைவன் நோக்கிக் காண்பான் என்னும் பொருள்பட பாடியுள்ளார். இப்பாடல் வருமாறு :

"பூக்கும் தாழை புறணி அருகு எலாம்
ஆக்கம் தான் உடை மா மறைக்காடரோ!
ஆர்க்கும் காண்பு அரியீர்! அடியார் தம்மை
நோக்கிக் காண்பது, நும்பணி செய்யிலே"

10. "பண்ணின் நேர் மொழியாள்" எனத் தொடங்கும் பதிகம் திருமறைக்காடு என்னும் தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் முதற்பாடல் திரையிசையில் இடம் பெற்றுள்ளது. பௌளி இராகத்தில் சுத்தாங்கமாகப் பாடப்பட்டுள்ளது. இப்பாடல் வருமாறு :

"பண்ணின் நேர் மொழியாள் உமைபங்கரோ!
மண்ணினார் வலம் செய்ம் மறைக்காடரோ!
கண்ணினால் உமைக் காணக் கதவினைத்
திண்ணம் ஆகத் திறந்து அருள் செய்ம்மினே!"

இப்பாடலைப் பண்ணாங்கமாக்கிச் சுரதாளக் குறிப்புடன் இங்கு தரப்படுகிறது.

இராகம் : பௌளி
(15ஆவது மேளகர்த்தாவாகிய
மாயா மாளவகௌளையில் பிறந்தது)
தாளம் : ஆதி
ஆரோசை : சரிகபதச்
அமரோசை :ச்நிதபகரிச

;கா காபா; பாதாபா ; பதா பாப பாதச் தாபா
.பண் ணின்நேர்.மொழியாள்.உமை பங்க ரோ . . .

| | | |
|---|---|---|
| ;கா பா தாச்ா, நிதபா | ;கபா காரி | சரிகா ரிகபா |
| .மண்ணினார். வலம்செய் | .மறைக்காட | ரோ . . . |
| ;காபாதாச்ா, ரிச்ாச்ா | ச்ா-ச்ாச்ாநீ | தா; பா; |
| .கண்ணினால் உமைக்கா | ண க தவி | னை . . . |
| ;காபாதாச்ா நீ தாபா | ;கபா கரீ | சரிகா ரிகபா |
| .திண்ணம்ஆ . . . க | .திறந்தருள் | செய்...மி.னே |

இப்பதிகத்தின் அனைத்துப் பாடல்களிலும் இறுதிவரி மறைக்காடு தலத்துகோயில் கதவினைத் திறந்து அருள் செய்யுமாறு வேண்டுவதாக அமைந்துள்ளது.

இப்பதிகம் பாடப்பட்ட சூழல் வருமாறு :

திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் சேர்ந்து பல தலங்கட்கும், சென்று இறைவனை வணங்க எண்ணினர். திருமறைக்காட்டிற்கு வந்த இருவரும், பண்டை நாளில் வேதங்களால் இறைவனை வழிபட்டு அடைத்த திருக்கதவு அமைந்த வாயிலைக் கண்டனர். முன்னாளில் மறைகளால் அடைக்கப்பெற்ற திருக்கதவு மறைகளில் வல்லவர்கள் எவரும் வராமையால் நெடுநாள் திறக்கப்படாமல் இருந்தது. அதனால் அவ்வூர் மக்கள் வேறொரு வாயில் அமைத்து இறைவனை வழிபட்டு வந்ததை அறிந்த ஞானசம்பந்தர், திருநாவுக்கரசரை நோக்கி, "நாம் எப்படியும் நேர்முகமாகவுள்ள இத்திருவாயிலின் வழியே சென்று இறைவனை வழிபட வேண்டும். ஆதலால் இத்திருக்கதவு திறக்கும்படி பதிகம் பாடுவீராக" என்று வேண்டினார். இதற்கிசைந்து திருநாவுக்கரசரும், "பண்ணினேர் மொழியாளுமை" என்னும் இத்திருக்குறுந்தொகைப் பதிகத்தைப் பாடியருளினார். இப்பதிகத்தின் முதற்பாடலை பாடி அடுத்தடுத்து பாடல்களைப் பாடியும் கதவு திறக்காது இருந்தமையைக் கண்டு வருந்தி நின்றார். இந்நிலையில் "இராவணனை விரலால் அடர்த்திட்ட நீவிர் ஒரு சிறிதும் இரக்கமுடையவர் அல்லீர்" என இறைவனை நோக்கிப் பிணங்கிப் பின்வருமாறு பாடினார்.

"அரக்கனை விரலால் அடர்த்திட்ட நீர்
இரக்கம் ஒன்று இலீர்; எம்பெருமானிரே!
சுரக்கும் புன்னைகள் சூழ் மறைக்காடரோ!

சரக்க இக் கதவம் திறப்பிம்மினே!''

இப்பாடல் பாடப்பெற்றவுடன் பன்னெடு நாட்களாக அடைபட்டிருந்த திருக்கதவு இறைவனருளால் திறக்கப்பெற்றது. இக்கதவு நாள்தோறும் திறக்கவும், அடைக்கவும் பெறும் நிலைக்காக, ஞானசம்பந்தர், "சதுரம் மறை" எனத் தொடங்கும் பதிகத்தின் முதற்பாடலை பாடவும் கதவு அடைக்கப் பெற்றது. அன்று முதல் திருமறைக்காட்டு கோயிலின் திருக்கதவு திறத்தலும் சாத்துதலுமான வழக்கத்தைப் பெறுகிறது.

மேற்கண்ட பாடல் இகழ்வது போல புகழ்ந்து பாடும் (நிந்தாஸ்துதி) அமைப்பில் அமைந்துள்ளது. இவ்வகைப் பாடல்களே பிற்காலத்தில் நிந்தாஸ்துதி பாடல்களாக சிறப்படைந்துள்ளது என்று கூறலாம். பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த மாரிமுத்தாபிள்ளையின் பாடல்கள் இவ்வகையில் மிகவும் புகழ் வாய்ந்தவை. சான்று : "என்ன பிழைப்பு உந்தன் பிழைப் பய்யா - இதை எண்ணி பார்த்தால் யார்க்கும் பழிப்பய்யா".[3]

11. "தோற்றும் கோயிலும்" எனத் தொடங்கும் பதிகம் திருமீயச்சூர் இளங்கோயில் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் திருமீயச்சூர் தலத்து இறைவனின் பெருமையை உரைக்கின்றது. சான்றாக ஒன்பதாம் பாடல் வருமாறு :

''வேதத்தான் என்பர், வேள்வி உளான் என்பர்,
பூதத்தான் என்பர், புண்ணியன் தன் னையே;
கீதத்தான் கிளரும் திரு மீயச்சூர்,
ஏதம் தீர்க்க நின்றார், இளங்கோயிலே''

12. "கரைந்து கைதொழுவாரையும்" எனத் தொடங்கும் பதிகம் திருவீழிமிழலை தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம், வீழிமிழலை தலத்துப் பெருமையை உரைக்கின்றது. இப்பதிகத்தின் ஆறாம் பாடலில், "குழலை யாழ் மொழியார் இசை வேட்கையால்-உழலை யாக்கையை ஊணும் உணர்வு இலீர்!" என்று குழல் யாழ் இசை பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

3. "நிந்தாஸ்துதி என்பது இறைவனை இகழவது போல புகழ்ந்து பாடுவது", மாரிமுத்தா பிள்ளை இவ்வகைப் பாடல்கள பாடுவதில் சிறப்புடையவர்

இப்பதிகத்தின் பத்தாம் பாடலில்,

"பாலையா ழொடு செவ்வழி பண் கொள
மாலை வானவர் வந்து வழிபடும்,
ஆலை ஆர் அழல் அந்தணர் ஆகுதி
வேலையார் தொழும், வீழிமிழலையே"

என்று பாலையாழில் செவ்வழி பண் இசைத்து மாலை நேரத்தில் தேவர்கள் வந்து வழிபடும் இடம் திருவீழிமிழலை என்று தலச்சிறப்பினைப் பாடுகிறார்.

பாலையாழ் தற்போதைய அரிகாம்போதி இராகத்திற்கு நேரானது என்றும் செவ்வழிப் பண் யது குலகாம்போதிக்கு நேராவது என்றும் கொள்வோமானால், பாலையாழில் பிறந்த செவ்வழிப் பண்ணை மாலை நேரத்தில் வானவர் பாடி இறைவனை வழிபடுபவர் என்ற குறிப்பினைப் பெறலாம்.

தற்போதும் யதுகுலகாம்போதி இராகம் இரவு நேரங்களில் பாடுவதற்கு பொருத்தமானதாக உள்ளமை குறிப்பிடத்தகுந்தது. செவ்வழிப் பண்ணில் திருநாவுக்கரசர் பதிகங்கள் காணப்படவில்லை. பஞ்சமப்பண் போன்று செவ்வழிப் பண்ணையும் அகச்சான்றாக திருநாவுக்கரசர் குறிப்பிட்டிருப்பதால், செவ்வழிப் பண்ணிலும் திருநாவுக்கரசர் பாடல்கள் அமைந்திருக்கலாம் என்று கருத வாய்ப்புள்ளது.

இதற்கேற்ப செவ்வழிப் பண்ணில் இப்பாடலுக்கு இசையமைத்துச் சுரதாளக் குறிப்பு இங்கு தரப்படுகிறது.[4]

பண் : செவ்வழி தாளம் : ஆதி
இராகம் : யதுகுலகாம்போதி

| /4 | 0 | 0 |
|---|---|---|
| ;சா ரீமா மா; மாமா | ;கம பபா, | பாதா தபமா |
| .பா .லை யா ழொடு | .செவ் வழி | பண் கொள.. |
| ; பாதாச்ா தாச்ா தபமா | பாதா தாபா | பமகா ரிகமக |
| . மா. லை வா.னவர் | வந். துவ | ழிப டும் |
| சா, தாபதா; தச்ா நிதா | ; , தா தபா | பாதச் தபமா |
| . ஆலையார் அழல் . . | . அந்தணர் | ஆகு தி.. |

4. ஆசிரியரால் இசை அமைக்கபபட்டுச் சுரதாளக குறிப்பு வரையப்பட்டுள்ளது.

; பாதாச்தாச்ா தபமா பாதாதாபா பமகா ரிகமக
வே.லையார்.தொழும் வீ.ழிமி ழலை யே..
சா-

13. "என் பொனே! இமையோர் தொழு பைங்கழல்" எனத் தொடங்கும் பதிகம் திருவீழிமிழலை தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், திருவீழிமிழலை இறைவனை பலவாறு போற்றி, தம்மை குறிக்கொள்க என்று இறைஞ்சிப் பாடும் வகையில் அமைந்துள்ளது. இப்பாடல்களின் இறுதி அடியின் இறுதிச்சீர் "அடியேனைக் குறிக்கொளே!" என்று அமைந்துள்ளது. சான்றாக முதற்பாடலைக் காட்டலாம்.

"என் பொனே! இமையோர் தொழு பைங்கழல்
நன் பொனே! நலம் தீங்கு அறிவு ஒன்று இலேன்;
செம் பொனே! திருவீழிமிழலையுள்
அன்பனே! அடியேனைக் குறிக்கொளே!"

14. "பாசம் ஒன்று இலராய்" எனத் தொடங்கும் பதிகமும், "பறையின் ஓசையும்" எனத் தொடங்கும் பதிகமும் திருஇடைமருதூர் தலத்திற்குரியவை. முதற்பதிகம் பதினொரு பாடல்களைக் கொண்டு, இறைவனை வணங்கினால் வினைகள் அறும் என்னும் குறிப்புடன் பாடப்பட்டுள்ளது. அடுத்த பதிகம் ஆறு பாடல்களைக் கொண்டது. இடைமருது ஈசனை தன் உள்ளம் எப்போதும் எண்ணும் என்னும் குறிப்பில் இவை பாடப்பட்டுள்ளன. முதற்பாடல் வருமாறு :

"பறையின் ஓசையும் பாடலின் ஓசையும்
மறையின் ஓசையும் வைகும், அயல் எலாம்
இறைவன், எங்கள் பிரான்-இடைமருதினில்
உறையும் ஈசனை உள்கும், என் உள்ளமே"

15. "மறையும் ஓதுவர்" எனத் தொடங்கும் பதிகம் திருப்பேரெயில் தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் சிறப்புக்களை எடுத்தியம்பும் வகையில் உள்ளது. சான்றாக இதன் பத்தாம் பாடல் இங்கு கொடுக்கப்படுகிறது.

"பாணி ஆர் படுதம் பெயர்ந்து ஆடுவர்;
தூணி ஆர் விசயற்கு அருள் செய்தவர்;
மாணியாய் மண் அளந்தவன், நான்முகன்,
வேணியார் அவர் பேரெயிலாளரே"

16 "முததினை, பவளத்தை" எனத் தொடங்கும பதிகம, திருவெண்ணியூர் தலததிற்குரியது பதினொரு பாடலகள கொணட இப்பதிகம திருநாவுக்கரசா கண்ட வெணணியூா இறைவனின் சிறப்பினை எடுத்தியம்புவதாக உள்ளது இபபதிகத்தின மூன்றாம் பாடல் சானறாக இங்கு தரபபடுகிறது

"காற்றினை, கனலை, கதிர் மா மணி
நீற்றினை; நினைப்பார் வினை நீக்கிடும்
கூற்றினை உதைத்திட்ட குணம் உடை
வீற்றினை; நெருநல் கண்ட வெண்ணியே"

17 "முறறிலா முலையாள இவள ஆகிலும்" எனத் தொடஙகும் பதிகம திருக்கடமபநதுறை தலத்திற்குரியது பத்துப பாடல்கள கொணட இபபதிகத்துப் பாடல்கள திருக்கடமபந்துறை இறைவனின சிறப்பினை எடுத்தியமபுவனவாக உளளன

இபபதிகத்தின 1,3,4 ஆம பாடலகளை ஓதுவார் முத்துக்கந்தசாமி தேசிகர் அவர்கள ஒலிநாடாவில பாடியுள்ளாா 1,3 ஆம பாடலகள் சுததாஙகமாகவும், நானகாம் பாடல பண்ணாஙகமாகவும் பாடபபட்ட இப்பாடலகள் பூாவிகலயாணி இராகததில் அமைநதுள்ளன பணணாஙகமாக அமைநத 'பணணின் இனமொழி' எனத தொடங்கும் பாடல சுரதாள குறிப்புடன் இதுவரையில் நூலகளில வெளிவராமையால இஙகு சுரதாள குறிப்புடன் கொடுக்கபபடுகிறது

"பண்ணின் இன்மொழி கேட்கும் பரமனை
வண்ண நல்மலரான் பலதேவரும்
கண்ணனும் அறியான் கடம்பந்துறை
நண்ண, நம்வினை ஆயின நாசமே"

இராகம் : பூர்விகல்யாணி
(53 ஆவது இராகம்ான
கமனபாியாவில் பிறந்தது) தாளம் : ஆதி
ஆரோசை · சாிகமபதபச
அமரோசை : ச்நிதபமகாிச

| /4 | | 0 | 0 |
|---|---|---|---|
| ;சா சாாிக | | | |
| ாிசநித | ,சா,ாீ,கா,மா, | பா, பாதம | காிகாி கமபம காிசா |
| .பண்.. ணின் | .இன்மொழி | கேட்.கும்ப. | ர.ம னை |
| ;சா சாாிக | | | |
| காிசா | சநிதா, சாபதாபபா | சா,ாிகா, காிகம | பா; பாநிததபபா |
| வண...ண நல். | மல ரான் | பல தே .வ | ரும் .. |
| ;பமகா, பதா, ச்சா | ச்சாாிக் க்ாிச்ா | ,,சக்ாிச்ச் | ச்நிதா, சாபதாபபா |
| .கண் ணனும | அறி யான். | கடமப | ந்து றை |
| பா , ச்க்ாிச்ா ச்நிதா | | ச்சாபதாப | பா, கநிதபம |
| | | காிகமபம | காிசா |
| நண்ணநம் | வினை | ஆயின | நா. .சமே |

18. "திருக்கடமபூர்க கரக்கோயில்" என்னும தலத்தில் இரண்டு பதிகங்கள பாடபபடடுள்ளன இவ்விரு பதிகஙகளும திருக்கடம்பூர்க கரக்கோயில தலத்துப பெருமையை உரைபபனவாக உள்ளன "தளரும கோள் அரவத்தொடு" எனத் தொடங்கும பதிகம் பதினொரு பாடல்கள் கொணடமைநதுளளது "ஒருவராய் இருமூவரும ஆயவன்" எனத் தொடஙகும பதிகம பததுப் பாடல்கள் கொணடமைநதுளளது. முதற் பதிகத்தின் முதறபாடல் வருமாறு

"தளரும் கோள் அரவத்தொடு தண்மதி
வளரும் கோல வளர்சடையார்க்கு இடம்
கிளரும் பேர் இசைக் கின்னரம் பாட்டு அறாக்
களரும் கார்க் கடம்பூர்க் கரக்கோயிலே"

இதே பாடல் ஒருசில மாற்றங்களுடன், "ஒருவராய் இருமூவரும்" எனத் தொடங்கும் பதிகத்தின் ஏழாம் பாடலில் இடம்பெறுகிறது. இதில் மூன்றாம் வரியாக, "கிளரும் பேர் ஒலிக் கின்னரம் பாட்டு அறா" என்று கின்னர ஒலி குறிப்பிடப்படுகிறது.

"தளருங்கோரவம்" எனத் தொடங்கம் பதிகத்தின் ஒன்பதாம் பாடல் புகழ் வாய்ந்த பாடலாகும். இப்பாடல் வருமாறு :

"நங்கடம்பனைப் பெற்றவன் பங்கினை
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கடன் னடியேனையும் தாங்குதல்
என்கடன் பணி செய்து கிடப்பதே"

இப்பாடலில், இறைவனின் கடமையையும் அடியார்களின் பொறுப்பையும் தெளிவுபடுத்துகின்றார்.

19. "என்னில் ஆரும் எனக்கு இனியார் இல்லை" எனத் தொடங்கும் பதிகம் திருஇன்னம்பர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் நாவுக்கரசர் இன்னம்பர் தலத்து இறைவன் தம் உள்ளத்தில் நிறைந்து இருப்பதாகப் பாடியுள்ளார். இதன் பத்தாம் பாடலில் இராவணனைப் பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது.

"சனியும் வெள்ளியும் திங்களும் ஞாயிறும்
முனிவனாய் முடிபத்து உடையான் தனைக்
கனிய ஊன்றிய காரணம் என் கொலோ
இனியனான் நின்ற இன்னம்பர் ஈசனே"

20. "பூ வணத்தவன் புண்ணியன்" எனத் தொடங்கும் பதிகம் திருக்குடமூக்கு தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் குடமூக்கில் உறையும் இறைவனையும் இறைவியையும் சிறப்பிக்கும் வகையில் பாடப்பட்டுள்ளது. இறுதிப் பாடலில் இராவணன் பற்றிய

குறிப்பு பின்வருமாறு இடம்பெறுகிறது.

"அன்று தான் அரக்கன் கயிலாயத்தைச்
சென்று தான் எடுக்க(வ்) உமை அஞ்சலும்
நன்று தான் நக்கு, நல்விரல் ஊன்றி, பின்
கொன்று, கீதம் கேட்டான், குடமூக்கிலே"

21. "கொடுங்கண் வெண்தலை" எனத் தொடங்கும் பதிகம் திருநின்றியூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் நான்காம் பாடலில்,

"பறையின் ஓசையும் பாடலின் ஓசையும்
மறையின் ஓசையும் மல்கிஅயல் எலாம்
நிறையும் பூம்பொழில் சூழ் திருநின்றியூர்
உறையும் ஈசனை உள்கும், என் உள்ளமே"

என்றவாறு பறை, பாடல், மறை ஆகியவற்றின் ஓசை நிறைந்த திருநின்றியூர் தலத்துஉறையும் ஈசனை என் உள்ளம் நினைக்கும் என்று பாடுகிறார். இப்பாடலை நாதநாமக்ரியை இராகத்தில் அமைத்துப் பாடலாம். இப்பாடலுக்குரிய சுரதாள குறிப்பு நூல்களிற் காணப்படாமையால் இங்கு கொடுக்கப்படுகிறது.

பண் : இந்தளம் தாளம் : ஆதி
இராகம் : சீகாமரம்

| /4 | 0 | 0 |
|---|---|---|
| ;சரிநீசாரீ கா;மா | ;மா மமா, | மா; தபமக |
| பறையின் ஓசையும் பா | ட லின் | ஓ சையும் |
| ;தபமகமா பா,ம தபதா | ; , பாதபம | பதாபா ; , |
| .மறையின் ஓ சையும் | . . மல்கிஅ | யல் எலாம். |
| ;பதநீதாபா ; , மபத | பா; ,ம பா | மா,க பமகா |
| நிறையும் பூம்பொழில் | சூழ் திரு | நின்றியூர் |
| ;மா மாமா ரிகமக ரீசா | ;சாநிச ரீ | .சா,நி கரிசா |
| .உறையும் ஈ.சனை | .உள்குமென் | உள் ளமே. |

22. "ஒற்றிஊரும் ஒளிமதி" எனத் தொடங்கும் பதிகம் திருஒற்றியூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் ஒற்றியூர் தலத்து இறைவனின் பெருமைகளையும், இறைவனை வணங்குவதால் ஏற்படும்

பயன்களையும், விளக்கும் வகையில் அமைந்துள்ளது. சான்றாக இப்பதிகத்தின் ஒன்பதாம் பாடல் வருமாறு :

"படைகொள் பூதத்தர், வேதத்தர், கீதத்தர்,
சடைகொள் வெள்ளத்தர், சாந்த வெண்நீற்றினர்,
உடையும் தோல் உகந்தார், உறை ஒற்றியூர்,
அடையும் உள்ளத்தவர் வினை அல்குமே"

23. "முந்தி மூஎயில் எய்த" எனத் தொடங்கும் பதிகம் திருப்பாசூர் தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் இறுதி வரி, இறுதிச் சீர், "பாசூர் அடிகளே" என்று முடிவடைகிறது. சான்றாக ஒன்பதாம் பாடல் வருமாறு :

"சாம்பல் பூசுவர், தாழ்சடை கட்டுவர்
ஓம்பல் மூதெருது ஏறும் ஒருவனார்
தேம்பல் வெண்மதி சூடுவர், தீயதுஓர்
பாம்பும் ஆட்டுவர், பாசூர் அடிகளே"

இப்பாடலும் இந்தளப் பண்ணில் பாடப் பெறலாம்.

24. திருவன்னியூர் தலத்தில் "காடு கொண்டு அரங்கா" எனத் தொடங்கும் பதிகம் ஒன்று உள்ளது. ஒன்பது பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் ஒவ்வொரு பாடலின் இறுதிவரி இறுதிச்சீர் 'வன்னியூரரே' என்று நிறைவு பெறுகிறது. சான்றாக மூன்றாம் பாடல் வருமாறு:

"ஞானம் காட்டுவர்; நன்நெறி காட்டுவர்
தானம் காட்டுவர், தம் அடைந்தார்க்கு எலாம்;
தானம் காட்டி, தம் தாள் அடைந்தார்கட்கு
வானம் காட்டுவர் போல்-வன்னியூரரே"

25. "சிந்தை வாய்தல் உளான்", "சிந்தை வண்ணத்தராய்" எனத் தொடங்கும் இரண்டு பதிகங்கள் திருஐயாறு தலத்திற்குரியவை. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகங்கள், ஐயாறப்பனின் சிறப்புக்களை எடுத்தியம்புவதாக உள்ளன. பாடல்களின் பக்திச் சுவைக்கேற்ப இவற்றிற்கு நாதநாமகிரியை இராகம் பொருத்தமாக உள்ளது. "சிந்தை வண்ணத்தராய்" எனத் தொடங்கும் பதிகத்தின் நான்காம் பாடல் வருமாறு :

"இருளின் வண்ணமும், ஏழ்இசை வண்ணமும்
சுருளின் வண்ணமும், சோதியின் வண்ணமும்
மருளும் நான்முகன் மாலொடு வண்ணமும்
அருளும் வண்ணமும் ஆவர் ஐயாறரே"

இப்பதிகத்தின் பத்துப் பாடல்களிலும் "வண்ணம்" என்ற சொல் திரும்ப திரும்ப வருவது குறிப்பிடத்தகுந்தது.

26. "நிறைக்க வாலியள் அல்லள்" எனத் தொடங்கும் பதிகம் திருஆவடுதுறை தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் ஆறாம் பாடல்,

"குழலும், கொன்றையும், கூவிளம், மத்தமும்
தழலும், தையல்ஓர் பாகமாத் தாங்கினான்;
அழகன்; "ஆவடு தண்துறையா!" எனக்
கழலும், கைவளை காரிகையாளுக்கே"

என்று குழல் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. இப்பாடல்கள் அனைத்திலும் உமையொரு பாகனாக நிற்கும் இறைவனின் சிறப்பு காணப்படுகிறது.

27. "கரப்பர், காலம் அடைந்தவர்" எனத் தொடங்கும் பதிகம் திருப்பராய்த்துறை தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனைத் தொழுவதால் உண்டாகும் பயன்களை உரைப்பதாக உள்ளது. இப்பதிகத்தின் பத்தாம் பாடலில் திருநாவுக்கரசர் தாம் எவ்வாறு திருப்பராய்த்துறை இறைவனைக் கண்டு உய்வதாகப் பின்வருமாறு கூறுகிறார்.

"தொண்டு பாடியும் தூமலர் தூவியும்
இண்டை கட்டி இணைஅடி ஏத்தியும்
பண்டரங்கர் பராய்த்துறைப் பாங்கரைக்
கண்டு கொண்டு, அடியேன் உய்ந்து போவனே"

28. "கோனைக் காவிக்" எனத் தொடங்கும் பதிகம் திருஆனைக்கா தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் இரண்டாம் பாடல் முதற்கொண்டு ஒவ்வொரு பாடலிலும் நான்காம் வரியின் இறுதிச்சீர் "ஆனைக்கா அண்ணலே" என்று நிறைவடைகிறது. பத்தாம் பாடலில் இராவணனைப் பற்றிய குறிப்பு பின்வருமாறு

காணப்படுகிறது.

"ஓதம் மாகடல் சூழ் இலங்கைக்கு இறை
கீதம் கின்னரம் பாட, கெழுவினான்,
பாதம் வாங்கி, பரிந்து, அருள்செய்து, அங்குஓர்
ஆதி ஆயிடும் - ஆனைக்கா அண்ணலே"

29. "கொடி கொள் செல்வ" எனத் தொடங்கும் பதிகம் திருப்பூந்துருத்தி தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகப் பாடல்களில், திருநாவுக்கரசர் திருப்பூந்துருத்தி நகர் இறைவனின் பெருமைகளை உரைத்து அன்னாரின் சேவடிக் கீழே தாம் இருப்பதாகக் கூறுகிறார். சான்றாக முதற்பாடல் வருமாறு :

"கொடி கொள் செல்வ விழாக் குணலை அறாக்
கடிகொள் பூம்பொழில் கச்சி ஏகம்பனார்
பொடிகள் பூசிய பூந்துருத்தி(ந்) நகர்
அடிகள் சேவடிக்கீழ் நாம் இருப்பதே!"

30. "கொல்லை ஏற்றினர்" எனத் தொடங்கும் பதிகம் திருச்சோற்றுத்துறை தலத்தில் பாடப்பட்டது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம் நெஞ்சுக்கு அறிவுறுத்தும் வகையில் பாடப் பெற்றுள்ளது. திருச்சோற்றுத்துறை இறைவனின் பெருமைகளை உரைத்து, அத்தலத்து இறைவனுக்கே பணி செய்வாயாக! மடநெஞ்சமே! என்று பாடுகிறார். சான்றாக முதற்பாடல் வருமாறு :

"கொல்லை ஏற்றினர், கோள் அரவத்தினர்
தில்லைச் சிற்றம்பலத்து உறை செல்வனார்,
தொல்லை ஊழியர், சோற்றுத் துறையர்க்கே
வல்லை ஆய்ப்பணி செய், மடநெஞ்சமே!"

31. "கொல்லியான குளிர் தூங்கு" எனத் தொடங்கும் பதிகம் திருநெய்த்தானம் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், திருநெய்த்தான இறைவனைச் சிறப்பித்து, அவ்விறைவனை தேவர்கள் தொழுவர் என்றும், அவனை தொழுவாரின் வினை அறும் என்னும் கருத்திலும் பாடப்பட்டுள்ளது. சான்றாக ஒன்பதாம் பாடல் வருமாறு :

"மா லொடும், மறை ஓதிய நான்முகன்
கா லொடும் முடி காண்பு அரிது ஆயினான்
சே லொடும் செலுச் செய்யும் நெய்த்தானனை
மா லொடும் தொழுவார் வினை வாடுமே"

32. "அருவனான் அத்தி ஈர்உரி" எனத் தொடங்கும் பதிகம் திருப்பழனத் தலத்திற்குரியுது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் பல்வேறு க்ருத்துக்களைக் கொண்டுள்ளது. ஒருசில பாடல்களில் திருப்பழன இறைவனை வணங்காதவர்கள் தீவினையாளர்கள், மூடர்கள் என்று பழித்தும், ஒருசிலவற்றில் இறைவனின் நாமத்தை எண்ணுக என்று அறிவுறுத்தும் வகையிலும் திருப்பழன இறைவனே தம் மனத்திலிருப்பவன், தமக்கு தாய் தந்தை போன்றவன். அப்பேர்பட்ட இறைவனை எவ்வாறு தான் மறக்க இயலும் என்றும் திருநாவுக்கரசர் பாடுகிறார். இக்கருத்துக்களுக்கேற்ப இவை சுத்தாங்க மாகவும், பண்ணாங்கமாகவும் இசையமைத்துப் பாடலாம். சான்றாக, மூன்றாம் பாடல் வருமாறு :

"வண்ணம் ஆக முறுக்கிய வாசிகை
திண்ணம் ஆகத் திருச்சடைச் சேர்த்தியே
பண்ணும் ஆகவே பாடும், பழனத்தான்
எண்ணும் நீர் அவன் ஆயிரம் நாமமே!"

33. "கான் அறாத கடி பொழில்" எனத் தொடங்கும் பதிகம் திருச்செம்பொன்பள்ளி தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனின் பெருமை களை எடுத்துரைக்கும் வகையில் அமைந்துள்ளது. கல்யாணி இராகத்தில் பண்ணாங்கமாக இப்பதிகம் பாடப் பெறலாம். சான்றாக, "பூஉலாம் சடைமேல்" எனத் தொடங்கும் பாடல் இங்கு தரப்படுகிறது.[5]

"பூஉலாம் சடை மேல் புனல் சூடினான்
ஏவலால் எயில் மூன்றும் எரித்தவன்
தேவீர் சென்று இறைஞ்சும் செம்பொன் பள்ளியான்
மூவராய் முதல் ஆய் நின்ற மூர்த்தியே"

5 ஆசிரியரால் இசை அமைக்கப்பட்டுச் சுரதாளக் குறிபபு வரையபபட்டுள்ளது.

இராகம் : கல்யாணி தாளம் : ஆதி
ஆரோசை : சரிகமபதநிச்
அமரோசை : ச்நிதபமகரிச

| /4 | 0 | 0 |
|---|---|---|
| ; ,ச்ாச்ச்நிநித பமகாகா | ; காநீதா | பதபம கரிசா |
| . .பூஉலாம்.. சடைமேல். | .புனல் | சூ..டி.னான் |
| ; பமகரிகா மாபாதாநீ | ச்ா ; ச்ாச்ா | ச்நிநிதபா-மப |
| ; ஏ..வலால் . . எயில் | மூன் றும்எ | ரித்..தவன்.. |
| தநி-ச்நிதாநீரீ; ரீக்ா | க்ரிரிச்ச்ாச்ா | ச்நிதா ச்ாச்ா |
| ..தே..வர்சென் றிறைஞ் | சும்.. | |
| | செம்பொன் | பள்..ளியான் |
| ;தாக்ாரீச்நிதா, பச்ா | ச்நிதா பாபா | மாபா தநிச்ா |
| .மூ.வ ராய். முத. | லாய். நிறை | மூர்த் தியே |

34. "மலைக்கொள் ஆனை" எனத் தொடங்கும் பதிகம் திருக்கடவூர் வீரட்டம் தலத்திற்குரியது. 11 பாடல்கள் கொண்ட இப்பதிகப் பாடல்களில் ஒவ்வொரு வரியின் இறுதியிலும் 'ஆனையார்' என்னும் சொல் தொடர்ந்து வந்துள்ளது. சான்றாக இரண்டாம் பாடல் வருமாறு :

"வெள்ளி மால்வரை போல்வது ஓர் ஆனையார்;
உள்ளஆறு எனை உள்புகும் ஆனையார்;
கொள்ளம் ஆகிய கோயிலுள் ஆனையார்;
கள்ள ஆனை கண்டீர்-கடவூரரே"

35. "குழைகொள் காதினர்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கடவூர் மயானம் தலத்திற்குரியது. எட்டு பாடல்களைக் கொண்ட இப்பதிகம் இறைவன் அடிகளின் சிறப்பினை எடுத்துரைக்கும் வகையில் அமைந்துள்ளது சான்றாக முதற்பாடல் வருமாறு :

"குழைகொள் காதினர், கோவண ஆடையர்
உழையர்தாம் கடவூரின் மயானத்தார்;
பழைய தம் அடியார் செய்யும் பாவமும்
பிழையும் தீர்ப்பர், பெருமான் அடிகளே"

இப்பாடலின் கருத்துக்கேற்ப, இஃது பண்ணாங்கமாச பூர்விகல்யாணி-ஆதி தாளத்தில் அமையப் பெறலாம்.

36. "கொள்ளும் காதன்மை" எனத் தொடங்கும் பாடல் திருமயிலாடுதுறை தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவன் அருளினால் ஏற்படும் பலன்களை விளக்கும் வகையில் அமைந்துள்ளது. சான்றாக முதற்பாடல் வருமாறு :

"கொள்ளும் காதன்மை பெய்துஉறும் கோல்வளை
உள்ளம் உள்கி உரைக்கும், திருப்பெயர்
வள்ளல் மாமயிலாடுதுறை உறை
வெள்ளம் தாங்கு சடையனை வேண்டியே"

37. "வண்ணமும் வடிவும்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கழிப்பாலை தலத்திற்குரியது. ஒன்பது பாடல்கள் கொண்ட இப்பதிகம், கழிப்பாலை தலத்து இறைவியின் தன்மையை இறைவன் மட்டுமே அறிவான் என்று உமையம்மையின் சிறப்பினை எடுத்துரைக்கும் வகையில் அமைந்துள்ளது. சான்றாக முதற்பாடல் வருமாறு:

"வண்ணமும் வடிவும் சென்று கண்டிலள்;
எண்ணி நாமங்கள் ஏத்தி நிறைந்திலள்
கண் உலாம் பொழில் சூழ்கழிப்பாலைஎம்
அண்ணலே அறிவான், இவள் தன்மையே!"

பூர்விகல்யாணி-ஆதி தாளத்தில் பண்ணாங்கமாக இப்பதிகம் பாடப்பெறலாம்.

38. "உடையர் கோவணம்" எனத் தொடங்கும் பதிகம் திருப்பைஞ்ஞீலி தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் பெருமைகளை உரைக்கும் வகையில் அமைந்துள்ளது. சான்றாக ஒன்பதாம் பாடல் வருமாறு :

"கார் உலாம் மலர்க்கொன்றை அம்தாரினான்,
வார் உலாம் முலை மங்கை ஓர் பங்கினன்
தேர் உலாம் பொழில் சூழ்ந்த பைஞ்ஞீலி எம்
ஆர்கிலா அமுதை, அடைந்து உய்ம்மினே!"

39. "நன்று நாள்தொறும்" எனத் தொடங்கும் பதிகம் திருவேட்களம் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனை தொழுதிருப்போர்க்கு இடர்இல்லை என்னும் கருத்தில் பாடப்பட்டுள்ளது.

சான்றாக இரண்டாம் பாடல் வருமாறு :

"கருப்பு வெஞ்சிலைக் காமனைக் காய்ந்தவன்
பொருப்பு வெஞ்சிலை யால் புரம் செற்றவன்
விருப்பன் மேவிய வேட்களம் கைதொழுது
இருப்பன் ஆகில் எனக்கிடர் இல்லையே"

இப்பாடல் நாதநாமக்ரியா இராகத்தில் பண்ணாங்கமாக பாடப் பெறலாம்.

40. "கொல்லத்தான் நமனார்" எனத் தொடங்கும் பதிகம் திருநல்லம் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனைக் கைதொழுவோர் அடையும் பலன்களை உரைக்கும் வகையில் அமைந்துள்ளது. சான்றாக ஆறாம் பாடல் வருமாறு :

"அல்லல் ஆக ஐம்பூதங்கள் ஆட்டினும்
வல்ல ஆறு "சிவாயநம" என்று,
நல்லம் மேவிய நாதன் அடிதொழ,
வெல்ல வந்த வினைப்பகை வீடுமே"

இப்பாடலை நாதநாமகிரியா இராகத்தில் பண்ணாங்கமாகப் பாடலாம்.

41. "மாமாத்து ஆகிய மால்அயன்" எனத் தொடங்கும் பதிகம் திருஆமாத்தூர் தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவன் பெருமைகளை உரைக்கும் வண்ணம் அமைந்துள்ளது. சான்றாக எட்டாம் பாடல் வருமாறு :

"பண்ணில் பாடல்கள் பத்திசெய் வித்தகர்க்கு
அண்ணித்து ஆகும் அமுதினை, ஆமாத்தூர்
சண்ணிப்பானை-தமர்க்கு அணித்து ஆயதுஓர்
கண்ணில் பாவை அண்ணன், அவன்-காண்மினே!"

இப்பாடல் நாதநாமகிரியை இராகத்தில் பாடப் பெறலாம்.

42. "மாது இயன்று மனைக்கு இரு" எனத் தொடங்கும் பதிகம் திருத்தோணிபுரம் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவியின் பெருமைகளை உரைத்து அவள் தோணிபுரவர்க்கு நல்லள் என்னும் குறிப்பில் பாடப்பட்டுள்ளது. சான்றாக நான்காம்

பாடல் வருமாறு :

"பாலையாழ் மொழியாள் அவள் தாழ்சடை
மேலன் ஆவது கண்டனள்; விண்உறச்
சோலை ஆர்தரு தோணி புரவர்க்குச்
சால நல்லள் ஆகின்றனள்-தையலே"

43. "துன்னக் கோவண" எனத் தொடங்கும் பதிகம் திருப்புகலூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் புகலூர் இறைவனின் பெருமைகளை உரைத்து, அன்னாரை என்உள் வைத்து இன்புற்று இருப்பேன் என்னும் பொருள்பட பாடப்பட்டுள்ளது. சான்றாக நான்காம் பாடல் வருமாறு :

"மின்னின் நேர் இடையாள் உமைபங்கனை
தன்னை நேர் ஒப்பு இலாத தலைவனை
புன்னைக் காவல் பொழில் புகலூரனை
என்னுள் ஆக வைத்து இன்புஉற்று இருப்பனே"

இதற்கேற்ப இப்பாடல் நாதநாமகிரியை இராகத்தில் பாடப் பெறலாம்.

44. "பண்டு செய்த பழவினையின்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கச்சி ஏகம்பம் தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம் கச்சி ஏகம்பனைத் தொழுவோர் அடையும் பயன்களையும் அவனுடைய சிறப்பையும் உரைக்கின்றது. சான்றாக எட்டாம் பாடல் வருமாறு :

"பண்ணில் ஓசை பழத்தினில் இன்சுவை
பெண்ணொடு ஆண் என்று பேசற்கு அரியவன்
வண்ணம் இலி, வடிவுவேறு ஆயவன்
கண்ணில் உள்மணி-கச்சி ஏகம்பனே"

இதற்கேற்ப நாதநாமகிரியை இராகத்தில் இப்பாடல் பாடப் பெறலாம்.

45. "பூ மேலானும் பூமகள்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கச்சி ஏகம்பம் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் கச்சி ஏகம்பனை முறையாக தொழ வேண்டும் என்னும் கருத்தில் பாடப்

பெற்றுள்ளது. சான்றாக ஐந்தாம் பாடல் வருமாறு :

"சிந்தையுள் சிவமாய் நின்ற செம்மையோடு
அந்திஆய் அவை ஆய்,புனல், வானம் ஆய்
புந்திஆய் புகுந்து உள்ளம் நிறைந்தஎம்
எந்தை ஏகம்பம் ஏத்தித் தொழுமினே"

இப்பாடல் பூர்வி கலியாணி இராகத்தில் பாடப் பெறலாம்.

46. "பண் காட்டிப்படிஆய" எனத் தொடங்கும் பதிகம் திருவெண்காடு தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் நெஞ்சை முன்னிலைபடுத்தி, '' திருவெண்காடு இறைவனை அடைக'' என்று அறிவுறுத்தும் வகையில் அமைந்துள்ளது. இப்பாடல்கள் நாதநாமகிரியை இராகத்தில் பண்ணாங்கமாக அமைத்துப் பாடுவதற்கேற்ற பாடல்களாகத் திகழ்கின்றன. பாடல் வருமாறு :

"பாலை ஆடுவர், பல்மறை ஓதுவர்
சேலை ஆடிய கண்உமை பங்கனார்
வேலை ஆர்விடம் உண்ட வெண்காடர்க்கு
மாலை ஆவது மாண்டவர் அங்கமே"

47. "எங்கே? என்ன, இருந்த" எனத் தொடங்கும் பதிகம் திருவாய்மூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் திருவாய்மூருக்குத் தன்னை அழைத்து அருள் செய்த திறத்தை வெளிப்படுத்துகின்றது. இப்பதிகப் பாடல்களில் "வா! எங்கே?" போன்ற வினைச்சொற்கள் வந்திருப்பதால், இவற்றைச் சுத்தாங்கமாகப் பாடலாம். இப்பதிகத்தின் முதற்பாடல் வருமாறு :

"எங்கே? என்ன, இருந்த இடம் தேடிக் கொண்டு
அங்கே வந்து, அடையாளம் அருளினார்,
தெங்கே தோன்றும் திருவாய்மூர்ச் செல்வனார்
"அங்கே வா!" என்று போனார்; அதுஎன் கொலோ"

48. "நீலமா மணி கண்டத்தார்" எனத் தொடங்கும் பதிகம் திருப்பாலைத்துறை தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண். இப்பதிகம் இறைவனை வருணித்துப் பாடும் வகையி அமைந்துள்ளது. பண்ணாங்கமாக நாதநாமகிரிய ராகத்தில் அமைய ஏதுவாக உள்ளது.

இப்பதிகத்தின் ஏழாம் பாடல் சான்றாக இங்குத் தரப்படுகிறது.

"குரவனார் கொடு கொட்டியும் கொக்கரை
விரவினார் பண்கெழுமிய வீணையும்
மருவுநாள் மலர் மல்லிகை, செண்பகம்
பரவுநீர்ப் பொன்னிப் பாலைத்துறையரே"

இதில் கொடுகொட்டி, கொக்கரை, வீணை போன்ற கருவிகளோடு விளங்கும் இறைவனாக வருணிக்கப் பட்டுள்ளது.

49. "நல்லர் நல்லது ஓர்" எனத் தொடங்கும் பதிகம் திருநாகேச்சுரம் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் திருநாகேச்சுவர இறைவனின் சிறப்பு உவமித்து கூறப்படுகிறது. ஒவ்வொரு பாடலின் இறுதி வரியின் முதற்சீரில் 'போல்' என்னும் சொல் இடம்பெறுகிறது. சான்றாக எட்டாம் பாடல் வருமாறு :

"கழல் கொள் காலினர்; காலனைக் காய்ந்தவர்;
தழல் கொள் மேனியர்; சாந்த வெண்நீறுஅணி
அழகர்; ஆல்நிழல்கீழ் அறம் ஓதிய
குழகர் போல்-குளிர் நாகேச் சுரவரே"

இப்பாடல் பண்ணாங்கமாக கமாசு இராகத்தில் அமையப் பாடப் பெறலாம்.

இராகம் : கமாசு தாளம் : ஆதி
(28ஆவது மேளகர்த்தாவாகிய அரிகாம்போதியில் பிறந்தது)

ஆரோசை : சமகமபதநிச்
அமரோசை : ச்நிதபமகரிச

| /4 | 0 | 0 |
|---|---|---|
| ; , ம பாதா மா; காமா | ; , சமகமா | பா,ம நீதா |
| க ழல்கொள் கா லினர் | கா லனைக் | காய்ந் தவர் |
| ; , தநீச்சா ச்நிநித பாபா | ; , ம பாதா | மா ; காமா |
| தழல் கொள்மே . . னியர் | சாந்த வெண் | நீ றணி |
| ; தாநீச்சா ம்ம்க்ரி ச்சாச்சா | ச்சா தாநீ ரிச் | ச்நிநித பாதா |
| . அழகர் ஆல் . . நிழல் | கீழ் அறம் | ஓ . . . திய |

| | | |
|---|---|---|
| மா-சமகாமா பநிதம தநிச்சா | ; ச்சா, ச்சா, | நீதா நீச்சா |
| -கு ழகர் போல் குளிர். | . நாகேச் | சுர வரே |

50. "கோணல் மாமதி சூடி" எனத் தொடங்கும் பதிகம் திருஅதிகை வீரட்டானம் தலத்திற்குரியது. பன்னிரண்டு பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில், திருஅதிகை வீரட்டானத்து இறைவனைக் காணாவிட்டால் என் கண் துயில் கொள்ளுமோ? என்று வினவுகிறார். சான்றாக முதற் பாடல் வருமாறு :

"கோணல் மா மதி சூடி, ஓர் கோவண
நாண் இல் வாழ்க்கை நயந்தும், பயன்இலை
பாணில் வீணை பயின்றவன் வீரட்டம்
காணில் அல்லது, என்கண் துயில் கொள்ளுமே?"

இப்பதிகத்தில் எல்லா பாடல்களின் இறுதி வரியின் இரண்டாம் பகுதி "என்கண் துயில் கொள்ளுமே?" என்று முடிகிறது. இவ்வாறான அமைப்பே தற்போதுள்ள கிருதி, கீர்த்தனையில் பல்லவியாக வளர்ந்திருக்கும் எனக் கருதலாம்.

51. "எட்டுநாள் மலர் கொண்டு" எனத் தொடங்கும் பதிகம் திருஅதிகை வீரட்டானம் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் திருஅதிகை வீரட்டனாரை வழிபடுவதால் அடையும் பயன்கள் கூறப்படுகிறது. பக்திச்சுவை ததும்பும் இப்பதிகம் நாதநாமகிரியையில் அமைந்துப் பாடப் பெறலாம். இதன் முதற்பாடல் வருமாறு :

"எட்டுநாள் மலர் கொண்டு அவன் சேவடி
மட்டுஅலர் இடுவார் வினை மாயுமால்
கட்டித்தேன் கலந்தன்ன கெடிலவீ
ரட்டனார் அடி சேருமவருக்கே"

52. "வீறுதான் உடை வெற்பன்" எனத் தொடங்கும் பதிகம் திருநாரையூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனின் அழகினை எடுத்துரைக்கும் பாங்கில் அமைந்துள்ளது. சான்றாக ஏழாம் பாடல் வருமாறு :

"பண்ணின் நால்மறை பாடலொடு ஆடலும்

எண்ணிலார் புரம்மூன்று எரி செய்தலும்
நண்ணினார் துயர் தீர்த்தலும்-நாரையூர்
அண்ணலார் செய்கை அம்ம அழகிதே"

இப்பதிகத்தின் எல்லா பாடல்களின் இறுதி வரி இரண்டாம் பகுதியில் "அம்ம அழகிதே" என்னும் தொடர் காணப்படுகிறது. இப்பாடல்களை கிருதி (அ) கீர்த்தனையாக மாற்றி இசையரங்குகளில் பாடுகையில் இத்தொடர் பல்லவியாக அமைவதற்கு வாய்ப்பாக உள்ளது.

53. "மைக் கொள் கண் உமை பங்கினன்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கோளிலி தலத்தில் பாடப்பட்டது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் இறைவனைத் தொழுவதால் ஏற்படும் பயன்கள் கூறப்பட்டுள்ளன சான்றாக முதற்பாடல் வருமாறு :

"மைக் கொள் கண் உமை பங்கினன், மான் மழுத்
தொக்க கையினன், செய்யது ஓர் சோதியன்
கொக்கு அமர் பொழில் சூழ்தரு கோளிலி
நக்கனை, தொழ நம் வினை நாசமே"

54. "முன்னமே நினையா தொழிந்தேன்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கோளிலி தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் முதற்பாடல் நாவுக்கரசர் தாம் இறைவனை முன்னரே துதியாமல் இருந்ததற்கு வருந்திப் பாடும் வகையிலும், மற்ற பாடல்கள் இறைவனை வருணித்து அவனை நினைந்துப் பாடுங்கள் என்று பிறருக்கு அறிவுறுத்தும் வகையிலும் பாடப் பெற்றுள்ளன. இக்கருத்துக்கேற்ப முதற்பாடல் மாயாமாளவ கௌளை இராகத்தில் சுத்தாங்கமாகவும் மற்ற பாடல்கள் பண்ணாங்கமாகவும் பாடப் பெறலாம். சான்றாக முதற்பாடலும், இரண்டாம் பாடலும் இங்கு தரப்படுகிறது.

**சுத்தாங்கம்**

"முன்னமே நினையா தொழிந்தேன், உனை;
இன்னம் நான் உன்சேவடி ஏத்திலேன்,
செந்நெல் ஆர் வயல் சூழ் திருக்கோளிலி
மன்னனே, அடியேனை மறவலே!"

**பண்ணாங்கம்** : நாதநாமகிரியை

"விண்உளார் தொழுது ஏத்தும் விளக்கினை,
மண்உளார் வினை தீர்க்கும் மருந்தினை,
பண்உளார் பயிலும் திருக்கோளிலி
அண்ணலார்-அடியே தொழுது உய்ம்மினே!"

55. "தலை எலாம் பறிக்கும் சமண் கையர்" எனத் தொடங்கும் பதிகம் திருப்பழையாறை வடதளி தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் சமணர்களை ஒடுக்கிய இறைவனை நினைந்தால் நாம் அடையும் பயன்கள் என்ன என்பதை எடுத்துரைக்கும் வகையில் உள்ளது. சான்றாக ஒன்பதாம் பாடல் வருமாறு:

"வாய் இருந்தமிழே படித்து, ஆள்உறா
ஆயிரம் சமணும் அழிவு ஆக்கினான்
பாய் இரும் புனல்ஆறை வடதளி
மேயவன்(ன்) "என வல்வினை வீடுமே""

56. "பொரும் ஆற்றின் படைவேண்டி" எனத் தொடங்கும் பதிகம் திருமாற்பேறு தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனை வழிபடுவார்க்கு இடர் இல்லையே என்னும் பொருள்பட பாடப்பட்டுள்ளது. சான்றாக நான்காம் பாடல் வருமாறு :

"தீதுஅவை செய்து தீவினை வீழாதே
காதல் செய்து கருத்தினில் நின்றநல்
மாதவர்பயில் மாற்பேறு கைதொழப்
போதுமின் வினை ஆயின போகுமே"

பக்திச்சுவை ததும்பி நிற்கும் இப்பாடலை மாயாமாளவ கௌளை இராகத்தில் இசை அமைத்துப் பாடலாம்.

57. "ஏதும் ஒன்றும் அறிவு இலர்" எனத் தொடங்கும் பதிகம் திருமாற்பேறு தலத்திற்குரியது. எட்டு பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் இறைவனை நினைத்த மாத்திரத்தில் அருள் கிட்டும் என்னும் பொருள் விளக்கப் பட்டுள்ளது. இப்பதிகத்தின் மூன்றாம் பாடல் குறிப்பிடத்தகுந்தது. இப்பாடல் வருமாறு :

"சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்?
"பாத்திரம் சிவன்" என்று பணிதிரேல்

மாத்திரைக்குள் அருளும், மாற்பேறரே''

இப்பாடலில் சாத்திரம், கோத்திரம், குலம் ஆகியவற்றினால் பலனில்லை. சிவனைப் பணிந்தால் ஒரு வினாடிக்குள் அருள் கிட்டும் என்னும் கருத்து கூறப்பட்டுள்ளது. சமுதாய சீர்திருத்த கருத்தும், ஆன்மீக கருத்தும் இணையும் இப்புதுமை கருத்து மக்களை நல்வழிபடுத்தும் என்பதில் ஐயமில்லை. ஆனால் இப்பாடல் செவ்விசை அரங்குகளில் ஒலிக்காதிருப்பது வருந்துதற்குரியது. இப்பாடலைப் பண்ணாங்கமாக நாதநாத கிரியையில் பாடப் பெறலாம். இப்பாடலுக்குரிய சுரதாளக் குறிப்பு வருமாறு :

இராகம் : நாதநாமகிரியை
தாளம் : ஆதி

| /4 | 0 | 0 |
|---|---|---|
| ; , சாசரீ கரீக மாமா | ; மாமா பம | கா ; ; ; |
| . . சாத்திரம் பலபே சும். | .சழக்கர் | காள் . . . |
| ; பா, கமா பா,ம தபதா | ;பதாநிதம | பா ; பாபா |
| கோத்திர மும்கு ல.மும் | .கொண் டென் | செய் வீர் |
| ; , மா மமா மா கமபத பம | கா; மா மக | பமகா ; ; |
| . .பாத்திரம் சி வன்..என் | று பணி | தி ரேல் |
| ; ,மாமமக ரிகமக ரீசா | ;சநீத நீ | சாரீ ரிசசா |
| மாத்திரைக்குள் அருளும் | .மாற்பே | ற.ரே... |

58. "முத்து ஊறும் புனல் மொய்" எனத் தொடங்கும் பதிகம் திருஅரிசிற்கரைப்புத்தூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் தனிபெரும் சிறப்புக்களை எடுத்துரைக்கும் வகையில் அமைந்துள்ளது. சான்றாக நான்காம் பாடல் வருமாறு :

''வேதனை மிகு வீணையில் மேவிய
கீதனை கிளரும் நறுங்கொன்றைஅம்
போதனை புனல் சூழ்ந்த புத்தூரனை
நாதனை நினைந்து எம்மனம் நையுமே''

இப்பாடலில் மறைகளை வீணையில் இசைத்த இசைவாணனாம் இறைவன் பெருமை எடுத்துரைக்கப் பட்டுள்ளது.

59. "ஒருத்தனை மூஉலகோடு" எனத் தொடங்கும்

பதிகம் திருக்கடுவாய்க் கரைப் புத்தூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், திருநாவுக்கரசர் இறைவனை தாம் புத்தூர் சென்று கண்டு உய்ந்த செய்தியை விளக்குகிறது. சான்றாக முதற்பாடல் வருமாறு :

"ஒருத்தனை, மூஉலகோடு தேவர்க்கும்
அருத்தனை, அடியேன் மனத்துள்(ள்) அமர்
கருத்தனை, கடுவாய்ப் புனல் ஆடிய
திருத்தனை, புத்தூர் சென்றுகண்டு உய்ந்தெனே"

60. "இரங்கா வன் மனத்தார்கள்" எனத் தொடங்கும் பதிகம் திருத்தென் குரங்காடுதுறை தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம் குரங்காடு துறை இறைவனின் சிறப்புக்களை விளக்குகின்றது. இப்பதிகத்தின் எட்டாம் பாடலில் இறைவனின் அடிகளைத் தொழுவதற்கும், பாடுவதற்கும் குரங்காடு துறையில் கூடுங்கள் என்று தொண்டர்களை விளிக்கும் வகையில் அமைந்துள்ளது. இப்பாடல் வருமாறு :

"நாடிநம் தமர்ஆயின தொண்டர்காள்!
ஆடுமின்(ன்)! அழுமின்! தொழுமின்(ன்)! அடி
பாடுமின்! பரமன் பயிலும்(ம்) இடம்
கூடுமின், குரங்காடு துறையையே!"

61. "வேழம் பத்து ஐவர் வேண்டிற்று" எனத் தொடங்கும் இப்பதிகம் திருக்கோழம்பம் தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம், கோழம்பத்து இறைவனின் சிறப்புக்களையும் அவ்விறைவனின் அருளினையும் நினைந்து உருகிப் பாடியது. இதன் நான்காம் பாடல் வருமாறு :

"பாடல் ஆக்கிடும், பண்ணொடு பெண்இவள்
கூடல் ஆக்கிடும் குன்றின் மணல் கொடு
கோடல் பூத்து அலர் கோழம் பத்துள் மகிழ்ந்து
ஆடும் கூத்தனுக்கு அன்புபட்டாள் அன்றே!"

இதில் இறைவி கோழம்பத்தில் மகிழ்ந்தாடும் கூத்தனுக்கு அன்புபட்ட இறைவியின் சிறப்பு குறிப்பிடப்படுகிறது. இப்பதிகத்துப் பொருளுக்கேற்ப இப்பாடல்கள் சுத்தாங்கமாகவும், பண்ணாங்கமாகவும் பாடப் பெறலாம்.

62. "பூவனூர்ப் புனிதன் திருநாமம்" எனத் தொடங்கும் பதிகம் திருப்பூவனூர் தலத்திற்குரியது. இப்பதிகம் பதினொரு பாடல்கள் கொண்டது. பூவனூர் இறைவனின் திருநாமத்தைப் போற்றுபவர், அடையும் பலன்களைக் கூறும் வகையில் இப்பாடல்கள் உள்ளன. ஏழாம் பாடலில்,

"ஆதிநாதன் அமரர்கள் அர்ச்சிதன்
வேதநாவன் வெற்பின் மடப்பாவைஓர்
பாதிஆனான் பரந்த பெரும்படைப்
பூதநாதன்-தென்பூவனூர் நாதனே"

இப்பாடலின் பொருளுக்கேற்ப இதனைச் சுத்தாங்கமாக நாதநாமகிரியை இராகத்தில் அமைத்துப் பாடலாம்.

63. "ஓதம் ஆர் கடலின்" எனத் தொடங்கும் பதிகம் திருவலஞ்சுழி தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனைத் தொழுது உய்ய வேண்டிப் பாடப்பட்டுள்ளது. சான்றாக ஆறாம் பாடல் வருமாறு :

"படம்கொள் பாம்பொடு பால் மதியம் சடை
அடங்க ஆளவல்லான் உம்பர் தம்பிரான்
மடந்தை பாகன் வலஞ்சுழியான் அடி
அடைந்தவர்க்கு அடிமைத் திறத்து ஆவனே"

இப்பாடலை நாதநாமகிரியை இராகத்தில் பண்ணாங்கமாகப் பாடலாம். இதற்குரிய சுரதாள குறிப்பு வருமாறு :

இராகம் : நாதநாமகிரியை
தாளம் : ஆதி

| /4 | 0 | 0 |
|---|---|---|
| மாமாமா மா; மாமா | ; ,மா மமா | மா,த பமகா |
| . படம்கொள்பாம். பொடு | பால்மதி | யம்ச டை.. |
| ; பா காமா பா, ம தபதா | ; பதநீ தம | பாபா பா; |
| . அடங்க ஆள வல்லான் | . உம்பர்.. | தம்பி ரான் |
| ; மாமாமா கம பதாமாப | ; கமாபமா | பாபா தபமா |
| மடந்தை பா......கன் | சேர்வலஞ்சுழி | யான்.அ.டி |
| ;மாமாமா கமபமகரிச॥ | . சாதாநீ | சா,நிகரிசா |
| . அடைந்தவர்க் கடிமை | . திறத்து | ஆ வனே |

64. "படையும் பூதமும்" எனத் தொடங்கும் பதிகம் திருவாஞ்சியம் தலத்திற்குரியது. ஏழு பாடல்கள் கொண்ட இப்பதிகம், திருவாஞ்சியம் தலத்துப் பெருமையை உரைக்கும் வண்ணம் திகழ்கின்றது. சான்றாக முதற் பாடல் வருமாறு:

"படையும் பூதமும் பாம்பும் புல்வாய் அதன்
உடையும் தாங்கிய உத்தமனார்க்கு இடம்
புடை நிலாவிய பூம்பொழில் வாஞ்சியம்
அடைய வல்லவர்க்கு அல்லல் ஒன்று இல்லையே"

65. "உள்ஆறாதது ஓர் புண்டரிகத்திரள்" எனத் தொடங்கும் பதிகம் திருநள்ளாறு தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், திருநள்ளாற்று இறைவனைப் போற்றுவதால் ஏற்படும் பலன்களை உரைக்கின்றது.

இப்பதிகத்தின் ஒன்பதாம் பாடல் வருமாறு:

"பாம்பு அணைப் பள்ளி கொண்ட பரமனும்
பூம் பணைப் பொலிகின்ற புராணனும்
தாம் பணிந்து அளப்ப ஒண்ணாத் தனித்தழல்
நாம் பணிந்து அடிபோற்றும் நள்ளாறனே".

66. "மட்டு இட்ட குழலார்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கருவிலிக் கொட்டிட்டை என்னும் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இத்தலத்து இறைவனை வழிபட்டு உரிய பலன் எய்துவீர் என்று உலகத்தாரை முன்னிலைப்படுத்தி பாடும் வகையில் அமைந்துள்ளது. சான்றாக ஐந்தாம் பாடல் வருமாறு:

"உய்யும் ஆறுஇது கேண்மின் உலகத்தீர்
பைகொள் பாம்பு அரையின் படைஆர்மழுக்
கையினான் உறைகின்ற கருவிலி
கொய் கொள் பூம்பொழில், கொட்டிட்டை சேர்மினே".

67. "கண்ட பேச்சினில்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கொண்டீச்சுரம் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், பல்வேறு பொருளமைதி கொண்டுள்ளது. பொதுமாதர் வலையில் வீழாமலிருக்கவும் பலவிதமான நோய்களிலிருந்து விடுபட வேண்டியும்

இறைவன் கழல் சேர வேண்டும் என்று அறிவுறுத்துகிறார். சான்றாக நான்காம் பாடல் வருமாறு:

"தந்தை தாயொடு தாரம் எனும் தளை
பந்தம் ஆங்கு அறுத்து பயில்வு எய்திய
கொந்து அவிழ் பொழில் கொண்டீச்சுரவனைச்
சிந்தை செய்ம் மின்கள், சேவடி சேரவே!"

பதினைந்தாம் நூற்றாண்டினைச் சேர்ந்த அருணகிரிநாதர் சந்த அமைப்பில் இயற்றிய திருப்புகழும் இதே பொருள்களைக் கொண்டுள்ளது. இப்பதிகத்தின் பொருள் அடிப்படையில் திருநாவுக்கரசரை அருணகிரிநாதர் பின்பற்றியுள்ளார் என்று கருதலாம்.

68. "குசையும் அங்கையில்" எனத் தொடங்கும் பதிகம் திருவிசய மங்கை தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் விசயமங்கை இறைவனை வழிபடுவார் பெறும் பலன்களை உரைக்கின்றது. இப்பதிகத்தின் பத்தாம் பாடலில் இராவணனை அழித்த இறைவனை வாழ்த்துவார் பெறும் பலன் கூறப்படுகிறது.

"இலங்கை வேந்தன் இருபது தோள்இற
விலங்கல் சேர் விரலான் விசயமங்கை
வலம் செய்வார்களும், வாழ்த்து இசைப்பார்களும்
நலம் செய்வார் அவர் நன்நெறி நாடியே".

69. "வைத்தமாடும்" எனத் தொடங்கும் பதிகம் திருநீலக்குடி தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், நீலக்குடி இறைவனை நினைப்பவர் பெறும் பலன்களை உரைக்கின்றது. இப்பதிகத்தின் ஏழாம் பாடலில், கல்லில் தம்மை பூட்டிய சமணர்களின் தொல்லையை நீலக்குடி தல இறைவனின் நாமம் சொல்லி தாம் உய்ந்த நிகழ்ச்சியைக் கூறுகிறார். இப்பாடல் வருமாறு:

"க[illegible]லினோடு எனைப் பூட்டி அமண்கையர்
[illegible]லை நீர் புக நூக்க, என் வாக்கினால்
நெல்லு நீள் வயல் நீலக்குடி அரன்
நல்ல நாமம் நவிற்றி உய்ந்தேன் அன்றே!"

70. "தங்கு அலப்பிய தக்கன்" எனத் தொடங்கும் பதிகம், திருமங்கலக்குடி தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள்

கொண்ட இப்பதிகம் தலப்பெருமையை உரைத்தும், இத்தலத்து இறைவனின் பெருமைகளை உரைத்தும் இவ்விறைவனை வணங்கியோர் பற்றியும், உரைக்கின்றது. இப்பதிகத்தின் ஐந்தாம் பாடல் வருமாறு:

"செல்வம் மல்கு திரு மங்கலக்குடி
செல்வம் மல்கு சிவநியமத்தராய்
செல்வம் மல்கு செழு மறையோர் தொழ
செல்வன் தேவியொடும் திகழ் கோயிலே"

இதில் 'செல்வம் மல்கு' என்னும் தொடர் மூன்று வரியிலும் முதல் வரியாகக் காணப்படுகிறது.

71. "விரும்பி ஊறு விடேல்" எனத் தொடங்கும் பதிகம் திருஎறும்பியூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், எறும்பியூர் ஈசனின் பெருமையை உரைக்கின்றது. சான்றாக ஒன்பதாம் பாடல் வருமாறு:

"கண் நிறைந்த கன பவளத்திரள்
விண் நிறைந்த விரிசுடர்ச் சோதியான்
உள் நிறைந்து உருஆய் உயிர் ஆயவன்
எண் நிறைந்த எறும்பியூர் ஈசனே".

72. "மரக் கொக்குஆம் என" எனத் தொடங்கும் பதிகம் திருக் குரக்குக்கா தலத்திற்குரியது. இத்தலத்து இறைவனை தொழுவார் அடையும் பலன்களை இப்பதிகம் பத்துப் பாடல்களில் உரைக்கின்றது.சான்றாக ஒன்பதாம் பாடல் வருமாறு:

"உருகி ஊன் குழைந்து ஏத்தி எழுமின்நீர்
கரிய கண்டன் கழல்அடி தன்னையே
குரவனம் செழுங் கோயில் குரக்குக்கா
இரவும் எல்லியும் ஏத்தித் தொழுமினே!"

இப்பொருளுக்கேற்ப நாதநாமகிரியையில் இப்பதிகம் சுத்தாங்கமாக பாடப் பெறலாம்.

73. "திருவின் நாதனும்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கானூர் தலத்திற்குரியது. ஒன்பது பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் பெருமைகளை உரைக்கும் வண்ணம் திகழ்கின்றது. இப்பதிகத்தின் ஆறாம் பாடல் வருமாறு:

"கல்வி ஞானக் கலைப் பொருள் ஆயவன்
செல்வம் மல்கு திருக் கானூர் ஈசனை
எல்லியும் பகலும்(ம) இசைவு ஆனவா
சொல்லி டீர், நும் துயரங்கள் தீரவே!"

பக்திச் சுவைக்கேற்ப இப்பாடலைப் பண்ணாங்கமாக நாதநாமகிரியையில் பாடலாம்.

74. "பூரியாவரும் புண்ணியம்" எனத் தொடங்கும் பதிகம் திருச்சேறைச் செந்நெறி தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இத்தலத்து இறைவனின் நாமத்தைக் கூறினாலும், அவன் கழல் நினைத்தாலும் ஏற்படும் பலன்களைச் சில பாடல்களிலும் கூற்றுவனுக்கும், வேந்தரின் சீற்றத்திற்கும், உற்றார் உறவினர்களுக்கும் அஞ்ச வேண்டியதில்லை.இறைவன் உளார் என்னும் பொருள் சில பாடல்களிலும் கூறப்பட்டுள்ளன. சான்றாக எட்டாம் பாடல் வருமாறு :

"சூலன்கள் என் செய்வ? குற்றங்கள் என் செய்வ?
துலங்கி நீ நின்று சோர்ந்திடல் நெஞ்சமே !
இலங்கு சேறையில் செந்நெறி மேவிய
அலங்களார் உளர்; அஞ்சுவது என்னுக்கே?"

இப்பாடலின் பக்திச் சுவைக்கேற்ப இதனை நாதநாமகிரியையில் பாடலாம்.

75. "சங்கு உலாம் முன்கை" எனத் தொடங்கும் பதிகம் திருக்கோடிகா தலத்திற்குரியது. ஏழு பாடல்கள் கொண்ட இப்பதிகம், கோடிகா இறைவனின் பெயரைக் கூறினாலே இன்பம் வந்தெய்தும் என்னும் பொருளில் பாடப்பட்டுள்ளது. இதன் ஆறாம் பாடல் வருமாறு :

"நாடி நாரணன், நான்முகன் வானவர்
தேடி ஏசறவும், தெரியாதது ஓர்
கோடி காவனைக் கூறாத நாள்எலாம்
பாடி காவலில் பட்டுக்கழியுமே"

இப்பாடலின் செய்யுளமைப்பிற்கேற்ப இதனை பூர்வி கல்யாணி, ஆதி தாளத்தில் இசையமைத்துப் பாடலாம். இதன் சுரதாளக்குறிப்பு "பண்ணின் இன்மொழி" எனத்

தொடங்கும் பாடலுக்கு கொடுக்கப்பட்டுள்ளதைப் போன்று அமையப் பெறும்.

76. "வெள் எருக்கு அரவம்" எனத் தொடங்கும் பதிகம் திருப்புள்ளிருக்கு வேளூர் தலத்திற்குரியது. ஒன்பது பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் புள்ளிருக்கு வேளூர் இறைவனை வணங்கித் தொழுவதால் உண்டாகும் பலன்களைக் கூறுகின்றார். இப்பதிகத்தின் இரண்டாம் பாடல் வருமாறு:

"மாற்றம் ஒன்று அறியீர்; மனை வாழ்க்கைபோய்க்
கூற்றம் வந்து உமைக் கொள்வதன் முன்னமே,
போற்ற வல்லிரேல், புள்ளிருக்கு வேளூர்,
சீற்றம் ஆயின தேய்ந்து அறும்; காண்மினே!"

இப்பாடலின் பொருளுக்கேற்ப இதனைச் சுத்தமாங்கமாகப் பாடலாம்.

77. "வானம் சேர் மதி சூடிய" எனத் தொடங்கும் பதிகம் திருஅன்பில் ஆலந்துறை தலத்திற்குரியது. பத்துப் பாடல்களைக் கொண்ட இப்பதிகம், இறைவனின் புகழைக்கூறி அவனை நினையாமல் இருந்த நாட்களை எண்ணி வருந்திப் பாடுவதாக அமைந்துள்ளது. இப்பதிகத்தின் ஒன்பதாம் பாடல் வருமாறு:

"பொய் எலாம் உரைக்கும் சமண் சாக்கியக்
கையன் மார் உரை கேளாது எழுமினே!
ஐயன், எம்பிரான், அன்பில் ஆலந்துறை
மெய்யன் சேவடி ஏத்துவார் மெய்யரே"

இப்பாடற் பொருளுக்கேற்ப இதனைப் பண்ணாங்கமாக நாதநாதகிரியை இராகத்தில் பாடலாம்.

78. "சிட்டனை, சிவனை" எனத் தொடங்கும் பதிகம் திருப்பாண்டிக் கொடுமுடி தலத்திற்குரியது. ஐந்து பாடல்கள் கொண்ட இப்பதிகம், இத்தலத்து இறைவனைத் தொழுவதால் ஏற்படும் பலன்களைக் கூறுகின்றது. சான்றாக முதற்பாடல் வருமாறு :

"சிட்டனை, சிவனை, செழுஞ்சோதியை,
அட்ட மூர்த்தியை, ஆலநிழல் அமர்

பட்டனை, திருப்பாண்டிக் கொடுமுடி
நட்டனை, தொழ நம்வினை நாசமே"

79. "விண்ட மாமலர் கொண்டு" எனத் தொடங்கும் பதிகம் திருவான்மியூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் திருவான்மியூர் இறைவனை வணங்குவதால் ஏற்படும் பலன்களைக் கூறுகின்றது. சான்றாக ஐந்தாம் பாடல் வருமாறு:

"படம் கொள் பாம்பரை, பால்மதி சூடியை,
வடம் கொள் மென்முலைமாது ஒரு கூறனை
தொடர்ந்து நின்று தொழுது எழுவார் வினை
மடங்க நின்றிடும்-வான்மியூர் ஈசனே"

இப்பாடலின் பொருளுக்கேற்ப இதனை நாதநாமகிரியை இராகத்தில் பண்ணாங்கமாகப் பாடலாம்.

80. "பாணத்தால் மதில் மூன்றும்" எனத் தொடங்கும் பதிகம் திருநாகைக் காரோணம் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், திருநாகைக் காரோண இறைவன் பெயரைக் கூறினாலும், கண்டாலும், நினைந்தாலும், நம் வினைகள் நீங்கும் என்னும் கருத்தில் அமைந்துள்ளது. சான்றாக ஒன்பதாம் பாடல் வருமாறு:

"கருவனை, கடல் நாகைக் காரோணனை
இருவருக்கு அறிவு ஒண்ணா இறைவனை
ஒருவனை, உணரார் புரம்மூன்று எய்த
செருவனை, தொழத் தீவினை தீருமே"

81. "மாட்டுப்பள்ளி மகிழ்ந்து" எனத் தொடங்கும் பதிகம் திருக்காட்டுப் பள்ளித் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் யாக்கை நிலையாமையை அறிவுறுத்தி, இத்தலத்து இறைவனின் அடிகளைப் புகழ்ந்து பாடி அவனடியை அடைந்து உய்யுக என்று பாடப்பட்டுள்ளது. சான்றாக ஒன்பதாம் பாடல் வருமாறு:

"இன்று உளார் நாளை இல்லை" எனும் பொருள்
ஒன்றும் ஓராது, உழிதரும் ஊமர்காள்!
அன்று வானவர்க்கு ஆக விடம் உண்ட
கண்டனார் காட்டு பள்ளி கண்டு உய்ம்மினே"

82. "மட்டுவார் குழலாளொடு" எனத் தொடங்கும் பதிகம் திருச்சிராப்பள்ளி தலத்திற்குரியது. நான்கு பாடல்கள் கொண்ட இப்பதிகம் திருச்சிராப்பள்ளி இறைவனை தொழுவார்க்கு வினைகள் அறும் எனும் பொருள்பட பாடப்பட்டுள்ளது. சான்றாக, நான்காம் பாடல் வருமாறு:

"தாயும்ஆய் எனக்கே, தலை கண்ணும் ஆய்,
பேயனேனையும் ஆண்ட பெருந்தகை;
தேயநாதன் - சிராப்பள்ளி மேவிய
நாயனார் என நம் வினை நாசமே"

இப்பாடலின் பொருளுக்கேற்ப இதனைச் சுத்தாங்கமாகப் பாடலாம்.

83. "கால பாசம் பிடித்து" எனத் தொடங்கும் பதிகம் திருவாட்போக்கி தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இத்தலத்து இறைவனைத் தொழுவார்க்கு வினைகள் தீரும் என்பதால் அவ் விறைவனைத் தினமும் தொழுக என்று கூறும் வண்ணம் திகழுகின்றது. சான்றாக எட்டாம் பாடல் வருமாறு:

"நாடி வந்து, நமன்தமர் நல்இருள்
கூடிவந்து, குமைப்பதன் முன்னமே
ஆடல் பாடல் உகந்த வாட்போக்கியை
வாடி ஏத்த, நம் வாட்டம் தவிருமே"

84. "பட்டம் நெற்றியர்; பாய் புலித்தோலினர்" எனத் தொடங்கும் பதிகம் திருமணஞ்சேரி தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனை வருணித்து பாடும் வகையில் உள்ளது. சான்றாக ஐந்தாம் பாடல் வருமாறு :

"துள்ளுமான் மறி, தூமழு வாளினர்;
வெள்ளநீர் கரந்தார், சடைமேல் அவர்;
அள்ளல் ஆர் வயல் சூழ் மணஞ்சேரிஎம்
வள்ளலார்;கழல் வாழ்த்தல் வாழ்வு ஆவதே"

இப்பாடலின் பொருளுக்கேற்ப இதனைப் பண்ணாங்கமாக பழம் பஞ்சுரப் பண்ணில் இசை அமைத்துப் பாடலாம். இப்பாடலுக்குரிய சுரதாளக் குறிப்பு

வருமாறு :

பண் : பழம் பஞ்சுரம்
இராகம் : சங்கராபரணம்
தாளம் : ஆதி

| /4 | 0 | 0 |
|---|---|---|
| ; காரீ சா சாதா நீசா | ; , சாபமா | காமக ரிமாக |
| . துள்.ளு மான் மறி | ..தூரமழு | வா..ளினர் |
| ; காமாபா பா,த நிதபம | ; ச்ாநி பாம | காமரி மாகா |
| . வெள்ள நீர்க ரந்தார் | . ச. டை | மேல் அவர் |
| ; தபமக மாபா; தாநீ | ச்ா, ச்ாரிச்ா | ச்ாரிச் நீதா நீச்ா |
| . அள். ளல்ஆர் வயல் | சூழ் மணஞ் | சே... ரிஎம் |
| ; பாபா க்ரிச்நி தபதநிச்ரி | ; ச்ாநிபாம | கா ரி மாமகா |
| வள் . ள லார் ... கழல். | . வாழ்த்தல் | வாழ் வாவதே |
| ; ; கா மா ; பதாபபா, | ; ; ; ; ; | ; ; ; ; ; |

85. “பெருகல் ஆம் தவம்” எனத் தொடங்கும் பதிகம் திருமருகல் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இத்தலத்து இறைவனை வாழ்த்தி வணங்கும் பொருளிலும், (உமையம்மை இறைவனை வழிபடும் தன்மைகளையும்) கூறுகின்றது. இப் பதிகத்தை ஓதுவார் தருமபுரம் பி. சுவாமிநாதன் அவர்கள் ஒலிநாடாவில் பாடி பிரபலபடுத்தியுள்ளார்.[6] முதற் பாடலைச் சுத்தாங்கமாகவும் மாயாமாளவ கௌளை இராகத்தில் பாடியுள்ளார். இவை சுரதாள குறிப்புடன் இதுவரை நூல்களில் வராமையால் இங்கு கொடுக்கப் படுகிறது. இப்பாடல்கள் வருமாறு:

**சுத்தாங்கம்**

“பெருகலாம் தவம் பேதைமை தீரல்ஆம்;
திருகல் ஆகிய சிந்தை திருத்தல் ஆம்;
பருகல்ஆம் பரம் ஆயதுஓர் ஆனந்தம்-
மருகலான் அடி வாழ்த்தி வணங்கவே”.

**பண்ணாங்கம்**

“ஓது பைங்கிளிக்கு ஒண்பால் அமுதுஊட்டி,
பாது காத்துப் பலபல கற்பித்து

6. தருமபுரம் பி.சுவாமிநாதன் ஒலிநாடா 4SE1, 108, வாணி வெளியீடு, சென்னை.

மாது தான், மருகல் பெரு மானுக்குத்
தூது சொல்ல விடத்தான் தொடங்குமே"

| /4 | 0 | 0 |
|---|---|---|
| ; சா, சா தா,த தாதா; | ; பா, பாத | பா,ம தாபா |
| . ஓது பைங்கி ளிக்கு | . ஒண் பால்அ | முதூ ட்டி |
| ; பாபாதாமபதப தபமா | ; கமாபமா | கமபம கரிசா |
| பா.துகா . . .த்து | பல பல | கற்பித்து .. |
| ; ச்ாச்ா ரிச் ச்நிதா, ததா | ச்ா ; ச்ா நீ | ரீ ; ச்ா ச்ா |
| . மா . து தான் மரு | கல் பெரு | மா னுக் குத் |
| ,, | ,, | ச்ரிக்ம் க்ரிச்ா |
| | | மா ..... னுக்கு |
| ; ச்ாச்ா ச்ரிச் நி தாபதா, | பா ; ; பா | மாதா பா ; |
| . தூது சொல்ல .விடத் | தான் தொ | டங்குமே. |

86. "ஒன்று வெண் பிறை" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் பாடல்கள் ஒன்று முதல் பத்து வரையில் எண்ணுமுகத்தான் அமைந்துள்ளன. சான்றாக முதற்பாடல் வருமாறு :

"ஒன்று வெண் பிறைக்கண்ணி; ஓர் கோவணம்;
ஒன்று கீள் உமையோடும் உடுத்தது-
ஒன்று வெண்தலை ஏந்தி, எம் உள்ளத்தே
ஒன்றி நின்று அங்கு உறையும் ஒருவனே"

இப்பாடலில் ஒவ்வொரு வரியில் முதல் சீரும் ஒரே மாதிரி அமைந்துள்ளது. இவ்வாறே பத்துப் பாடல்களிலும் ஒவ்வொரு வரியின் முதற்சீர்கள் ஒரேமாதிரி அமைந்துள்ளன. இப்பாடல்களனைத்தும் இறைவனின் பெருமைகளை உணர்த்தி அவன் தன் நெஞ்சில் நிறைந்தவன் என்னும் பொருளில் பாடப்பட்டுள்ளன. இப்பதிகம் "தனித் திருக்குறுந்தொகை" என்னும் சிறப்புப் பெயரில் அழைக்கப்படுகின்றது.

87. "மாசில் வீணையும்" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். இப்பதிகம் ஓதுவார்களால் பரவலாக பாடப்பட்டு வரும் பதிகமாகும். தனித் திருக்குறுந்தொகை என்னும் சிறப்புப் பெயரில் வழங்கப்படுகிறது. பூர்வி

கலியாணி இராகத்தில் பாடப்பட்டு வரும் இப்பதிகத்துப் பாடல்கள் திரையிசையிலும் இடம் பெற்றுள்ளன. இப் பதிகத்தின் 1,2,7 மற்றும் 10 ஆம் பாடல்கள் பெரும்பான்மையாக ஓதுவார்களால் பாடப்பட்டு வருகின்றன. இவை வருமாறு :

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே"

"நமச்சிவாயவே ஞானமும் கல்வியும்
நமச்சிவாயவே நான்அறி விச்சையும்
நமச்சிவாயவே நாநவின்று ஏத்துமே
நமச்சிவாயவே நன்நெறி காட்டுமே"

இவ்விரு பாடல்களும் பண்ணாங்கமாக திரையிசையில் இடம் பெற்றுள்ளன.

ஏழாம் பாடலான "வாழ்த்த வாயும்" எனத் தொடங்கும் பாடல் சுத்தாங்கமாக பாடப்பட்டு வருகின்றது.

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்தவா வினையேன் நெடுங் காலமே"

பத்தாம் பாடல் பண்ணாங்கமாக பாடப் பெற்று வருகின்றது. இப்பாடல் வருமாறு :

"விறகில் தீயினன் பாலில் படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவுகோல் நட்டு, உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடைய, முன்நிற்குமே".

88. "ஏஇலானை, என் இச்சை" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். ஒன்பது பாடல்கள் கொண்ட இப்பதிகம் தனித்திருக் குறுந்தொகை என்னும் சிறப்புப் பெயர் கொண்டது. இவை முழுவதும் எதுகை மோனைச் சிறப்புடன் விளங்குகின்றன. இவை வெவ்வேறு பொருளுடையனவாய், விளங்குகின்றன. சிலவற்றில் மனிதர்களுக்கு, அறிவுறுத்தும் பாங்கிலும் சிலவற்றில்

தம்மை சிறியேனாக சிறுமைபடுத்திக் கொண்டும், உள்ளம் உருகி பாடப்பட்டுள்ளன. இப்பாடற் பொருளுக்கேற்ப இவற்றை சுத்தாங்கமாக விரும்பிய இராகத்தில் பாடலாம். இப் பதிகத்தின் மூன்றாம் பாடல் வருமாறு:

"ஞானத்தால்-தொழுவார் சில ஞானிகள்
ஞானத்தால் தொழுவேன் உனைநான் அலேன்
ஞானத்தால் தொழுவார்கள் தொழ கண்டு
ஞானத்தால் உனை, நானும் தொழுவனே"

இப்பாடலின் ஒவ்வொரு வரியின் முதல்சீர் ஞானத்தால் என்ற சொல்லைக் கொண்டு விளங்குகின்றன.

89. "கண்டு கொள்ள ரியானை" எனத் தொடங்கும் பதிகம் காலபாசத் திருக்குறுந்தொகை என்னும் சிறப்புப் பெயர் பெற்று விளங்குகின்ற பொதுப் பதிகமாகும். பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனை வழிபடுவதால் உண்டாகும் பலன்களைக் கூறுகின்றன. சான்றாக முதற்பாடல் வருமாறு :

"கண்டு கொள்ள (அ)ரியானைக் கனிவித்துப்
பண்டு நான் செய்த பாழிமை கேட்டிரேல்,
கொண்ட பாணி கொடு கொட்டி தாளம் கைக்
கொண்ட தொண்டரைத் துன்னிலும் சூழலே!"

இப்பாடலில் கொடுகொட்டி தாளம் என்கிற தாள இசைக்கருவி குறிப்பிடப்பட்டுள்ளது.

90. "காசனை, கனலை" எனத் தொடங்கும் பதிகம் "மறக்கிற்பனே" என்னும் சிறப்புப் பெயர் கொண்ட திருக்குறுந்தொகைப் பதிகமாகும். பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் பெருமைகளைப் பலவாறு கூறி, அவ்விறைவனை யான் என்றும் மறக்க மாட்டேன் என்னும் கருத்தில் பாடப்பெற்றுள்ளது. பக்திச்சுவைப் பொருந்தி, உள்ளம் உருகிப் பாடியுள்ள இப்பாடல்களைச் சுத்தாங்கமாகப் பாடுதல் பொருத்தமாகும். இப்பதிகத்தின் 3,4 ஆம் பாடல்களின் முதல்வரியின் முதற்சீர் "ஈசன்" என்ற சொல்லில் தொடங்குகின்றன. இப்பதிகப் பாடல்கள் முழுவதும் யான் மறக்கிற்பனே என்னும் சொல்லில் முடிவடைகின்றன. சான்றாக

நான்காம் பாடல் வருமாறு :

"ஈசன் என்னை அறிந்தது அறிந்தனன்,
ஈசன் சேவடி ஏற்றப் பெறுதலால்,
ஈசன் சேவடி ஏத்தப் பெற்றேன்; இனி
ஈசன் தன்னையும் யான் மறக்கிற்பனே?".

91. "அண்டத்தானை அமரர்" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம் "தொழற்பாலதே என்னும் திருக்குறுந்தொகை'' என்னும் சிறப்புப் பெயர் உடையது. இப்பதிகப் பாடல்களின் இறுதிச்சீர் "தொழற்பாலதே" என்று நிறைவு பெறுகிறது. இப்பாடல்களில் எதுகை, மோனைச் சிறப்புக்கள் இடம்பெறுகின்றன. பாடல் முதற்சீரின் இறுதி எழுத்து ஒன்று போல் ஒத்து வருகின்றன. சான்றாக மூன்றாம் பாடல் வருமாறு :

"பண் ஒத்தானை பவளம் திரண்டதோர்
வண்ணத்தானை வகை உணர்வான்தனை
எண்ணத்தானை இளம்பிறை போல் வெள்ளைச்
சுண்ணத்தானை கண்டீர் தொழல்பாலதே"

இறைவனை வருணிக்கும் வகையிலமைந்த இப்பாடல்களை விரும்பிய இராகத்தில் பண்ணாங்கமாக இசையமைத்துப் பாடலாம். மேற்கண்ட பாடலைத் தக்கேசிப் பண்ணில் (காம்போதி இராகத்தில்) இசையமைத்துச் சுரதாள குறிப்புடன் இங்கு கொடுக்கப்படுகிறது.[7]

பண் : தக்கேசி
இராகம் : காம்போதி
தாளம் : ஆதி

| /4 | 0 | 0 |
|---|---|---|
| ; தா ; ச்ா நீ; தா; | ; ததா ததா | . பமா பதாச்ா |
| . பண் ஒத்தா னை | பவ ளம்தி | ரண்ட தோர் |
| ; நீ; தா பாபா தாமா | ; மகா பதா | ச்நிபா தாச்ா |
| வண்ணத் தானை... | . வகை உணர் | வான் தனை |

7. ஆசிரியரால் இசை அமைக்கப்பட்டுச் சுரதாளக் குறிப்பு வரையப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| ;மகாபதா ச்ாச்ா | | |
| ச்ரிக்ரி | ரீ ரிக்ா ச்ாச் ச்நிநித | பதச்ா |
| .எண்ணத் தா.னை... | இளம் பிறை | போல். |
| | | வெள்ளை |
| தாதர்ரீ நீ; தாதா | பா பதா மகா | பா, தா, ச்ா |
| சுண்ணத் தா னை | .கண்டீர்தொ | ழுல் பாலதே |

92. "புக்கு அணைந்து புரிந்து" எனத் தொடங்கும் பதிகம் இலிங்க புராணத் திருக்குறுந்தொகை என்ற சிறப்புப் பெயருடன் வழங்கப்படும் பொதுப் பதிகமாகும். இப்பதிகம் பதினொரு பாடல்கள் கொண்டு விளங்குகின்றது. ஒவ்வொரு பாடலும் அங்கு இருவரே என்னும் இறுதிச் சீரோடு விளங்குகின்றது. இப்பாடல்களில் முதலிரண்டு வரிகள் சமண மதத்திலிருப்பவர்களின் தன்மைகளையும், அடுத்த இரண்டு வரிகள் இறைவனின் பெருமைகளையும் விளக்குகின்றன. சான்றாக எட்டாம் பாடல் வருமாறு :

"வெந்தநீறு விளங்க அணிந்திலர்
கந்தமாமலர் இண்டை புனைந்திலர்;
எந்தை ஏறு உகந்து ஏறுஎரி வண்ணனை
அந்தம் காணல் உற்றார் - அங்கு இருவரே"

இப்பாடலின் பொருளுக்கேற்ப இதனைப் பண்ணாங்கமாக நாதநாம கிரியையில் பாடலாம்.

93. "பொன் உள்ளத் திரள்" எனத் தொடங்கும் பதிகம், மனத்தொகைத் திருக்குறுந்தொகை என்னும் சிறப்புப் பெயருடைய பொதுப் பதிகமாகும். இஃது பத்துப் பாடல்கள் கொண்டது. இப்பாடல்களின் இறுதிவரி "எந்தை பிரானிரே" என்னும் தொடருடன் முடிவடைகிறது. இறைவனின் பெருமையை உரைக்கும் வகையில் அமைக்கப்பட்டுள்ள இப்பாடல்களுள் ஐந்தாம் பாடல் சான்றாக இங்குத் தரப்படுகிறது.

"பூத்தார் கொன்றையினாய் புலியின் அதள்
ஆர்த்தாய் ஆடுஅரவோடு அனல் ஆடிய
கூத்தா நின்குரை ஆர் கழலே அலது
ஏத்தா, நாஎனக்கு; எந்தை பிரானிரே!"

இப்பதிகத்தின் பத்தாம் பாடலில் ஒவ்வொரு வரியின் முதற்சீரும், "எந்தை எம்பிரான்" என்னும் சொல்லுடன் தொடங்குகின்றது.

94. "சிந்திப்பார் மனத்தான்" எனத் தொடங்கும் பதிகம் சித்தத் தொகைத் திருக்குறுந்தொகை என்னும் சிறப்புப் பெயர் கொண்ட பொது பதிகமாகும். இப்பதிகம் 30 பாடல்கள் கொண்டது. இறைவனை வருணித்தும், அவனடி பணிபவர்கள் பெறும் பலன்களும் இப்பாடற் பொருளாக விளங்குகின்றது. இதற்கேற்ப இப்பாடல்கள் சுத்தாங்கமாகவும் பண்ணாங்கமாகவும் பாடப்படலாம். இவை மரபு முறைப்படி பூர்வி கலியாணி இராகத்திலும் நாதநாமகிரியையிலும் அல்லது விரும்பிய இராகத்திலும் பாடப் பெறலாம். இப் பதிகத்தின் 29 ஆம் பாடல் வருமாறு:

"தன்னில்-தன்னை அறியும் தலைமகன்
தன்னில்-தன்னை அறியில் தலைப்படும்
தன்னில்-தன்னை அறிவுஇலன் ஆயிடில்
தன்னில்-தன்னையும் சார்தற்கு அரியனே"

இப்பாடல் முழுவதிலும் முதல் வரியின் முதற்சீர் 'தன்னில் தன்னை' என்று தொடங்குகிறது.

95. "நீறு அலைத்தது ஓர்மேனி" எனத் தொடங்கும் பதிகம் "உள்ளத் திருக்குறுந்தொகை" என்னும் சிறப்புப் பெயர் கொண்ட பொதுப் பதிகமாகும். இறைவனை வருணித்தும் அவன் பெருமைகளை உரைத்தும், பிறகு அத்தகைய பெருமை உடைய இறைவனை என் உள்ளம் கண்டு கொண்டது என்று தன் உள்ளகிடக்கையை பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் கூறுகின்றார். இப்பதிகப் பாடல் முழுவதிலும் இறுதி வரியின் இறுதிச்சீர் "என் உள்ளமே" என்று முடிவடைகிறது. சான்றாக முதற் பாடல் வருமாறு :

"நீறு அலைத்தது ஓர் மேனி நிமிர்சடை
ஆறு அலைக்க நின்று ஆடும் அமுதினை
தேறலை தெளியை தெளி வாய்த்ததுஓர்
ஊறலை கண்டு கொண்டது என் உற்றமே"

---

8. ஆசிரியரால் இசை அமைக்கப்பட்டுச் சுரதாளக குறிபபு வரையப்பட்டுள்ளது.

இப்பாடலின் பொருளுக்கேற்ப இதனை பண்ணாங்கமாக மரபு முறைப்படி நாதநாம கிரியாவிலும் பாடலாம். விரும்பிய இராகத்தில் பாடவேண்டுமெனில் மேகராகக் குறிஞ்சிப் பண்ணில் பண்ணாங்கமாக இசையமைத்துப் பாடலாம்.[8] இதற்குரிய சுரதாள குறிப்பு வருமாறு:

பண் : மேகராகக் குறிஞ்சி
இராகம் : நீலாம்பரி
தாளம் : ஆதி

| /4 | 0 | 0 |
|---|---|---|
| ; , கமபபா பாபா பமமா | ; பநீச்ச்நி | தாநீ ச்ரிச் நி பமமா |
| நீ .றலைத்த தோர் மேனி | . நிமிர் ச.. | டை . . . . . |
| ; கமபபதநிதப பதபமகரிகா | ; . கா கமக | கரி ரிபபபமகமா |
| ஆ.றலை . . . கநின்று . . . | . . ஆ டும்அ | மு...தி..னை |
| ; கசா சசா ச்ாச்ா ; ச்நிநீ | ; ச்ச்ா ச்ச்நி | தாநீ ச்ரிச் நிபா; பமகம |
| தே றலை தெளி யை | . தெளி வாய்த்த | தோர் . . . |
| ;,கமப பதநிதப பதபமமா | ;,காககம | கரிரிப பபமகமக |
| ..ஊறலை .... கண்டு.. | கொண்ட | தென் உள்ளமே. |
| மா ; ; ; மகரிகசா ; | ; ; ; ; | ; ; ; ; |

..........................................................................................

96. "பாவமும் பழி அற்றுஅற" எனத் தொடங்கும் பதிகம் பாவநாசத் திருக்குறுந்தொகை என்ற சிறப்புப் பெயர் கொண்ட பொதுப் பதிகமாகும். பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், ஈசனை நினைந்தவர்கள் வேறு ஒன்றும் செய்ய வேண்டுவதில்லை என்ற பொருளில் பாடப்பட்டுள்ளது. சான்றாக நான்காம் பாடல் வருமாறு :

"வேதம் ஓதில்என்? வேள்விகள் செய்கில் என்
நீதி நூல்பல நித்தல் பயிற்றில் என்
ஓதி அங்கம் ஓர் ஆறும் உணரில்என்
ஈசன் உள்குவார்க்கு அன்றி இல்லையே"

இப்பாடற்பொருளுக்கேற்ப இதனைப் பண்ணாங்கமாக தக்கேசிப் பண்ணில் அமைத்துப் பாடலாம்.

97. "வேதநாயகன்" எனத் தொடங்கும் பதிகம் "ஆதிபுராணத் திருக்குறுந்தொகை" என்னும் சிறப்புப் பெயர் கொண்ட பொதுப் பதிகமாகும். பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் ஈசனின் பெருமையை உரைக்கின்றது. சான்றாக முதற்பாடல் வருமாறு :

"வேத நாயகன்; வேதியர் நாயகன்;
மாதின் நாயகன்; மாதவர் நாயகன்;
ஆதி நாயகன்; ஆதிரை நாயகன்;
பூத நாயகன்-புண்ணிய மூர்த்தியே"

இப்பாடலை மரபு முறையாக பூர்விகல்யாணியிலும் நாதநாமகிரியாவிலும் பாடலாம். விரும்பிய இராகத்தில் பண்ணாங்கமாகவும் பாடலாம். அவ்வகையில் தக்கேசிப் பண்ணில் இப்பாடல் சுரதாளக் குறிப்புடன் இங்குக் கொடுக்கப்படுகிறது.

பண் : தக்கேசி
தாளம் : ஆதி
இராகம் : காம்போதி

| /4 | 0 | 0 |
|---|---|---|
| ;தா;ச்ா நீ; தா; | ;,தாததா | பமா பதாச்ா |
| .வே.த நா.ய கன் | .வேதியர் | நா ய .கன் |
| ;நீ; தா பா பா தாமா | ;மகா பதா | ச்நிபா தாச்ா |
| மா தின் நா. யகன் | மா தவர் | நா. யகன் |
| ;பா தா; ச்ா; ச்ரிக்ரி | ரீரிக்ா ச்ச்ா | ச்நிநித பதச்ா |
| .ஆ .தி நா ய கன்.. | .ஆ.திரை | நா..யகன் |
| ;தா ;ரீ நீதா தாபா | ;பதாமகா | பா; தாச்ா |
| பூ த நா. யகன் | புண்ணிய | மூர்த்தியே |

*முடிவுரை*

திருக்குறுந்தொகைப் பதிக ஆய்விலிருந்து இப்பாடல்கள் அனைத்தும் இந்தளப் பண்ணில் பாடுதற்கு ஏற்றவாறு உள்ளன என்பதறிய முடிகிறது. திருக்குறுந்தொகைப் பாடல்கள் மரபு வழியாக இந்தளப் பண்ணில் பாடப்பட்டு வந்திருந்தாலும், மேலும் பல்வேறு பண்/இராகங்களில் இசையமைத்துப் பாடுதற்கு ஏதுவாக

இப்பாடல்கள் திகழ்ந்துள்ளமைத் தெளிவாகிறது.

திருக்குறந்தொகை பாடல் அமைப்பில் நூறு பதிகங்கள் இருப்பதால் இவையனைத்தையும் மரபுமுறைப்படி என்று நாதநாம கிரியையில் மட்டுமே பாடி கொண்டிருந்தால் செவ்விசையில் இப்பாடல்கள் செல்வாக்கு அடைவது சற்று கடினமாக இருக்கும். எனவே, அரிய கருத்துக்களும், பக்திச் சுவையும் பொருந்திய இப்பாடல்களை மக்கள் மயமாக்குவதற்கு தேவார ஓதுவார்களுக்கும், இசைக் கலைஞர்களுக்கும் மரபு முறையின் அடிப்படையில் வேறுசில பண்/இராகங்களில் பாடுவதற்கு உரிமை வழங்கப்பட வேண்டும். இவ்வகையில் இப்பாடல்கள் இந்தளப் பண் மற்றும் பூர்விகலியாணியில் பாடப்பட்டு வந்ததாகத் தெரிகிறது. மேலும் தன்யாசி, சாவேரி போன்ற இராகங்களும் ஓதுவார்கள் பாடுமுறையில் காணப்படுகிறது.

பெரும்பாலான தலங்களில் காலை நேரத்தில் திருப்பள்ளியெழுச்சியாக இப்பாடல்கள் பாடப்பட்டு வருவதால் காலை நேரத்திற்குரிய இராகங்களான பௌளி, பூபாளம் போன்ற இராகங்களிலும் இவை பாடப் பெறலாம். திரையிசையிலும் இவ்வாறு பாடப்பட்டு சில பாடல்கள் பிரபலமாகியுள்ளன. இவ்வாறு திருக்குறுந்தொகைப் பாடல்களை மக்களிடையே பரவச் செய்வதற்கு திருநாவுக்கரசரால் கையாளப்படாத வேறு சில பண்களிலும் இராகங்களிலும் இப்பாடல்கள் பாடப் பெறலாம். அவ்வாறு பாடப்படும்போது பாடல்களின் பொருளும், பாடல் பாடப்பட்ட சூழலும் கருத்தில் கொள்ளப்பட வேண்டும்.

திருஞானசம்பந்தரோடு நெருங்கிப் பழகியிருந்தமையால் ஞானசம்பந்தர் பாடிய பண்களிலும் திருநாவுக்கரசர் பதிகங்கள் பாடியிருக்க வாய்ப்புண்டு. இந்தளம், பழம் பஞ்சுரப்பண், பௌளி, கல்யாணி, பூர்விகல்யாணி, கமாசு போன்ற பண் இராகங்களில் இசை அமைத்து பதினைந்து பாடல்களுக்குச் சுரதாளக் குறிப்புக்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

திருக்குறுந்தொகைப் பாடல்களில் இசைக்

குறிப்புக்களும், இசைக்கருவி குறிப்புக்களும் அதிகமாக காணப்படவில்லை. கொடுகொட்டி, தாளம், வீணை போன்ற ஒருசில கருவிகள் பற்றிய குறிப்புக்கள் சில பாடல்களில் காணப்பட்டுள்ளன.

# 6

# திருநாவுக்கரசரின் திருத்தாண்டகப் பாடல்களில் இசை

திருநாவுக்கரசர் இயற்றிய பாடல்களுள் சிறப்பாக குறிப்பிடத்தக்க பாடல்கள் திருத்தாண்டகப் பாடல்களாகும். இவையனைத்தும் முறையாகப் பெற்றது ஆறாம் திருமுறையாகும். இதில் 99 திருப்பதிகங்கள் அடங்கியுள்ளன. இவற்றின் இசைச் சிறப்புக்கள் இவ்வியலில் விரிவாக ஆராயப்படுகிறது.

"தாண்டகம்" என்பது ஒரு யாப்பு வகை. இஃது எண்சீரான் வந்த கொச்சக வொருபோகு எனப்படும்.

தமிழ்ச் செய்யுள் வகையாகிய தாண்டகம் என்னும் யாப்பிற்கு மூல இலக்கியமாக விளங்குவன அப்பர் பெருமான் அருளிய இத் தாண்டகத் திருப்பாடல்களே. இவற்றை முதன்முதலாக அருளிச்செய்த காரணம் பற்றியே அப்பர், "தாண்டகச் சதுரர்", "தாண்டக வேந்தர்" எனவும் போற்றப் பெறுவார். அடிதோறும் நான்காம் சீரும் ஏழாம் சீரும் பெரும்பான்மை தேமாவாகவும் ஒரேவழிப் புளிமாவாகவும் அமைய இவையொழிந்த 1,2,5,6 ஆம் சீர்கள் பெரும்பான்மை காய்ச்சீர்களாகவும் சிறுபான்மை மாச்சீர் விளச்சீர்களாகவும் வருதல் தாண்டகம் என்னும் பாவின் இலக்கணம் ஆகும்.

வடமொழியில் 'தண்டகம்' என்ற செய்யுள் வகை ஒன்றுள்ளது. "பாதந்தோறும் நகணங்கள் இரண்டும் ரகணங்கள் ஏழுமுடையது தண்டகமாம்" அதாவது "தனன தனன தானனா தானனா தானனா தானனா தானனா தானனா தானனா" என இருபத்தேழு எழுத்தான் வரும் வடமொழித் தண்டகத்தின் இலக்கணத்தினை வேங்கடமகி தமது சதுர்தண்டி பிரகாசிகையில் கூறியுள்ளார். ஆனால் வடமொழி தண்டகத்திற்கும் தமிழ்த் தாண்டகத்திற்கும் தொடர்பில்லை என்பது வெளிப்படையாகத் தெரிகிறது.

இசை ரீதியாக திருத்தாண்டகம் விருத்தப் பாடல் வகையைச் சேர்ந்தது. தாளமில்லை. மரபுவழியாக அரிகாம்போதி இராகத்தில் பாடப் பெறுகிறது. பொருளைச் சிதைக்காமல் இருப்பதற்காகத்தான் அரிகாம்போதியில் பாடப்பெற்று வருகிறது என்பது பண்ணாராய்ச்சி வித்தகர் குடந்தை ப.சுந்தரேசனாரின் கருத்து. பெரும்பாலும் அரிகாம்போதியில் சுத்தாங்கமாகவும்,சில சமயங்களில் இலயாங்கமாகவும் பாடுவது உண்டு என்னும் முடிவு சென்னைத் தமிழிசைச் சங்கத்தின் தேவாரப் பண்ணராய்ச்சி மாநாட்டில் ஏற்பட்டுள்ளது.[1] திருவாவடுதுறை முதலான மடங்களில் இலயாங்கத்தில் பியாகடையில் பாடப்பட்டு வருகின்றது. பியாகடை, அரிகாம்போதி ஆகிய இவ்விரண்டு இராகங்களில் பாடுகின்ற முறையில் பியாகடை பிற்காலத்தது.

தமிழிசையின் பழமையான இராகமாகக் கருதப்படும் அரிகாம்போதியின் இலக்கணத்தை ஈண்டுக் காணலாம்.

அரிகாம்போதி 72 மேளகர்த்தா அமைப்பில் 28 ஆவது வரிசை எண் கொண்டது. சம்பூர்ண ஆரோகண அவரோகணம் கொண்டது.

சரிகமபதநிச் - ச்நிதபமகரிச

குரல் இளியைத் தவிர இந்த இராகத்தில்

1 பண ஆராய்ச்சியும் அதன முடிவுகளின தொகுப்பும், பக் 264

வரும் சுரங்களாவன : நிறைதுத்தம் (ரி2), நிறை கைக்கிளை (க2), குறை உழை (ம1), நிறை விளரி (த2), குறைதாரம்(நி1). அனைத்துச் சுரங்களும் அசைவுகளுடன் (கமகத்துடன்) பாடக்கூடிய இராகம். ம. நி ஆகிய சுரங்கள் இந்த இராகத்தை நன்கு வெளிப்படுத்தும். இளி (பஞ்சமம்) முடிவு சுரமாகும். இந்த இராகத்திலிருந்து அநேக ஜன்னிய இராகங்கள் பிறந்துள்ளன. அவை கமாசு, காம்போதி, மோகனம் முதலியனவாகும். சிறந்த இனிமை பயக்கக்கூடிய (ரத்தி) இராகம். கேட்போர் மனத்தைச் சுலபமாகக் கவரக்கூடியது.

திருநாவுக்கரசரின் திருத்தாண்டகத்தை மாதிரியாகக் கொண்டு திருமங்கையாழ்வார் பிரபந்த வகையில் இரண்டு தாண்டகங்கள் செய்துள்ளார். திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் என்று அவை வழங்கும்[2] வைணவ சம்பிரதாயத்தில் இவை பிரபந்த வகைகள் என்று கூறப்படும். இவற்றைப் பாவினம் என்றுதான் கொள்ள வேண்டும். திருமங்கையாழ்வார் இயற்றிய தாண்டகங்கள் வருமாறு:

<u>திருக்குறுந்தாண்டகம்</u>

இஃது இருபது பாடல்களைக் கொண்டது. இவை நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் 2032 முதல் 2051 வரையிலானவை. அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம் என்னும் யாப்பில் அமைந்துள்ளது. முதல் பாடல் வருமாறு:

"நிதியினைப் பவளத்தூணை நெறிமையால்
நினையவல்லார்
கதியினைக் கஞ்சன் மாளக் கண்டுமுன் அண்டமாளும்
மதியினை மாலை வாழ்த்தி வணங்கி என் மனத்துவந்த
விதியினைக் கண்டு கொண்ட தொண்டனேன்
விடுகிலேனே"

<u>திருநெடுந்தாண்டகம்</u>

இஃது 30 பாசுரங்களைக் கொண்டுள்ளது. இவை

2. நாலாயிரத் திவ்விய பிரபந்தம் பாடல், 2032 முதல் 2086 கிருஷ்ணசாமி அய்யங்கார (ப ஆ) புதுவை 1988

2052 முதல் 2081 வரையிலடங்கும். இவை எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம் என்னும் யாப்பில் அமைந்துள்ளன. முதற் பாசுரம் வருமாறு :

"மின்னுருவாய் முன்னுருவில் வேதம் நான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள்
தானாய்
பின்னுருவாய் முன்னுருவிற் பிணி மூப்பில்லாப்
பிறப்பிலியாய் இறப்பதற்கே எண்ணாது
எண்ணும்
பொன்னுருவாய் மணியுருவிற் பூதமைந்தாய்ப்
புனலுருவாய் அனலுருவில் திகழும் சோதி
தன்னுருவாய் எண்ணுருவில் நின்ற எந்தை
தளிர்புரையும் திருவடி என் தலை மேலவே".

இனி திருநாவுக்கரசரின் திருத்தாண்டகப் பதிகப் பாடல்களின் இயலிசை அமைப்பினைத் தனித்தனியாக ஆராயலாம்.

1. "அரியானை அந்தணர்தம்" எனத் தொடங்கும் முதற்பதிகம் கோயில் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனைப் பலவாறு புகழ்ந்து வருணிக்கும் வகையில் அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலும், "பெரும்பற்றப் புலியூரானை பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே" என்று நிறைவு பெறுகிறது. இஃது பெரிய திருத்தாண்டகம் என்னும் சிறப்புப் பெயர் கொண்டது.

2. "மங்குல் மதி தவழும் மாடவீதி" எனத் தொடங்கும் பதிகம் கோயில் தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம்,, புக்க திருத்தாண்டகம் என்னும் சிறப்புப் பெயர் உடையது. இப் பாடல்கள் இறைவனைப் பலவாறு புகழ்ந்தும், வருணித்தும் பாடப்படுள்ளன. ஒன்று முதல் பத்துப் பாடல்களில் ஒவ்வொரு பாடலும், "புலியூர்ச் சிற்றம்பலமே புக்கார் தாமே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

3. "வெறி விரவு கூவிளநல்" எனத் தொடங்கும் பதிகம் திருஅதிகை வீரட்டானம் தல்த்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம் "ஏழைத் திருத்தாண்டகம்" என்ற சிறப்புப் பெயர் உடையது. இப்பாடல்களில் சில இறைவனைப் பலவாறு புகழ்ந்தும் வருணித்தும் அப்பேர்பட்ட இறைவனைப் புண்டை நாட்களில் இகழ்ந்து இருந்தேனே என்று வருந்திப் பாடும் வகையில் பாடப்பட்டுள்ளன. சில பாடல்கள் சமண மதத்தைத் தழுவி இருந்த நாட்களை எண்ணி வருந்திப் பாடுவதாக அமைந்துள்ளன. இப் பாடல்கள் அனைத்தும், "ஏழையேன் நான் பண்டு இகழ்ந்த ஆறே" என்னும் இறுதிவரியுடன் நிறைவு பெறுகின்றன.

4. "சந்திரனை மாகங்கை" எனத் தொடங்கும் பதிகம் திருஅதிகை வீரட்டானம் தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம் "அடையாளத் திருத்தாண்டகம்" என்ற சிறப்புப் பெயருடன் விளங்குகின்றது. சிவபெருமானின் அடையாளங்களை ஒவ்வொன்றாக எடுத்துச் சொல்லி, இவ்வடையாளங்கள் உடையார் எவரோ அவரே திருவதிகை வீரட்டனார் என்று கூறுமாறு ஒவ்வொரு பாடலும் இருத்தலால் இஃது அடையாளத் திருத்தாண்டகம் என்னும் பெயர் பெறுகின்றது. இப் பதிகத்தின் ஒவ்வொரு பாடலின் இறுதிவரியும், "ஆவன்ஆகில் அதிகை வீரட்டன் ஆமே" என்ற தொடருடன் நிறைவு பெறுகிறது. இறைவனின் பெருமைகளைப் பலவாறாக வருணிக்கும் இப் பதிகத்தின் ஐந்தாம் பாடலில், "குடமுழவம், வீணை, தாளம், குறுநடைய சிறுபூதம் முழக்க, மாக்கூத்து ஆடுமே" என்னும் தொடர் காணப்படுகிறது. ஏழாம் பாடல்,"

"குழலொடு கொக்கரை கைத்தாளம், மொந்தை
குறள் பூதம் முன் பாடத் தான் ஆடு(ம்) மே"

என்று தொடங்குகின்றது. இவற்றில் குடமுழவம், வீணை, தாளம், குழல், கொக்கரை, கைத்தாளம், மொந்தை ஆகிய கருவிகளுடன் பூதங்கள் முழக்கி பாடும் அற்புதம் கூறப்பட்டுள்ளது.

5. "எல்லாம் சிவன் என்ன நின்றாய் போற்றி" எனத் தொடங்கும் பதிகம் போற்றித் திருத்தாண்டகம் என்ற சிறப்புப் பெயருடன் விளங்குகின்றது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் முழுவதிலும் இறைவனைப் போற்றித் துதி செய்யும் வகையில் "போற்றி" என்ற சொல் காணப்படுகிறது. தினசரிப் பாராயணம் செய்வதற்கு ஏற்ற வகையில் அமைந்த இப் பதிகத்தின் பத்தாம் பாடல் வருமாறு :

"முக்கணா போற்றி முதல்வா போற்றி!
முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி !
தக்கணா போற்றி ! தருமா போற்றி !
தத்துவனே போற்றி ! என் தாதாய் போற்றி !
தொக்கு அணா என்று இருவர்தோள் கைகூப்ப
துளங்காது எரிசுடர் ஆய்நின்றாய் போற்றி !
எக்கண்ணும் கண்இலேன் எந்தாய் போற்றி !
எறி கெடில வீரட்டத்து ஈசா போற்றி !

6. "அரவு அணையான் சிந்தித்து" எனத் தொடங்கும் பதிகம் திருஅதிகை வீரட்டானத் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் முழுவதும் இறைவனின் திருவடிச்சிறப்பைப் பலவாறு புகழ்ந்து பாடும் வகையில் அமைந்துள்ளது. இக் காரணம் பற்றியே, இஃது "திருவடித் திருத்தாண்டகம்" என்னும் சிறப்புப் பெயருடன் விளங்குகின்றது. தினசரி பாராயணத்துக்கு ஏற்ற இப்பதிகத்தின் முதற்பாடல் வருமாறு :

"அரவு அணையான் சிந்தித்து அரற்றும் (ம்) அடி ;
அருமறையான் சென்னிக்கு அணி ஆம்அடி;
சரவணத்தான் கைதொழுது சாரும் (ம்) அடி;
சார்ந்தார்கட்கு எல்லாம் சரண் ஆம் அடி;
பரவுவார் பாவம் பறைக்கும் (ம்) அடி ;
பதினெண் கணங்களும் பாடும் (ம்) அடி ;
திரை விரவு தென் கெடில நாடன் (ன்) அடி -
திரு வீரட்டானத்து எம் செல்வன் (ன்) அடி".

7. "செல்வப் புனல் கெடில" எனத் தொடங்கும் பதிகம் திருஅதிகை வீரட்டானம் தலத்திற்குரியது. 12 பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவன் உறையும் பல்வேறு தலங்களைக் கூறி, அவை தம்முடைய காப்புக்களாகும் என்று பாடுகிறார். இப் பாடல்கள் அனைத்தும் "காப்புக்களே" என்னும் இறுதிச் சொல்லுடன் நிறைவு பெறுகின்றன. "ஆதலால் இப்பதிகம் காப்புத் தாண்டகம் எனப் பெயரேற்கின்றது" என்பர் டாக்டர் ந.சுப்பு ரெட்டியார் அவர்கள்.

8. "விற்று ஊண் ஒன்று" எனத் தொடங்கும் பதிகம் திருக்காளத்தி தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப் பதிகம், இறைவனின் பெருமைகளை உரைத்து, அத்தகைய இறைவன் "என்கண் உளானே" என்னும் தொடருடன் நிறைவு பெறுகின்றன. இப்பாடல்களில் "காண்" என்னும் சொல் எல்லா பாடல்களின் எல்லா வரிகளிலும் இடம்பெறுகிறது. இப்பதிகத்தின் ஐந்தாம் பாடலில் மட்டும் "உள்ளான்" என்ற சொல் இடம்பெறுகிறது. இப்பாடல் வருமாறு :

"மனத்து அகத்தான்; தலைமேலான் ; வாக்கின்
உள்ளான்
வாய் ஆரத்தன் அடியே பாடும் தொண்டர்-
இனத்து அகத்தான் ; இமையவர் தம் சிரத்தின்
மேலான்
ஏழ் அண்டத்து அப்பாலான் ; இப்பால்
செம்பொன்
புனத்து அகத்தான் நறுங்கொன்றைப் போதில்
உள்ளான்;
பொருப்பு இடையான் ; நெருப்பு இடையான் ;
காற்றின் உள்ளான் ;
கனத்து அகத்தான் ; கயிலாயத்து உச்சி உள்ளான்
காளத்தியான் அவன், என் கண் உளானே".

9. "வண்ணங்கள் தாம் பாடி" எனத் தொடங்கும் பதிகம் திருஆமாத்தூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் இறைவனின் பெருமைகளை

தலைவன் தலைவி நிலையில் நிறுத்தி உரைக்கின்றார். இப்பாடல்களின் இறுதிவரி, "அழகியரே, ஆமாத்தூர் ஐயனாரே!" என்று நிறைவு பெறுகிறது. இதன் பத்தாம் பாடலில் ".... கொடுகொட்டி, தாளம், உடையார்போலும்" என்று இசைக்கருவிகள் பற்றிய குறிப்பு காணப்படுகின்றது.

10. "நோதங்கம் இல்லாதார்" எனத் தொடங்கும் பதிகம் திருப்பந்தணைநல்லூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் சிறப்புக்களை எடுத்துரைக்கும் வகையில் அமைந்துள்ளது. இப்பாடல்கள் அனைத்தும், "பலி ஏற்றார் பந்தணை நல்லூராரே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகின்றன. இப்பதிகத்தின் இரண்டாம் பாடலில் "பிடவம் மொந்தை குடமுழவம், கொடுகொட்டி, குழலும், ஓங்கப் பாடலார்" என்னும் குறிப்பில் இசைக்கருவிகள் இடம்பெற்றுள்ளன.

11. "பிறவாதே தோன்றிய" எனத் தொடங்கும் பதிகம், திருப்புன்கூர், திருநீடூர் ஆகிய இரண்டு தலங்களுக்குமுரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில், இறைவனின் சிறப்புக்களை உரைத்து, அவனை நினையாமல் இருந்தேனே என்று வருந்திப் பாடும்வகையில் அமைந்துள்ளது. இப் பாடல்கள் அனைத்திலும், ஆறாம் வரியில், "திருப்புன்கூர் மேவிய சிவலோக(ன்)னை" என்ற வரியும், எட்டாம் வரியில் "நீதனேன் என்னே நான் நினையா ஆறே!" என்னும் வரியும் இடம்பெறுகின்றன. இவ்வாறு ஆறாம் வரியில் திருப்புன்கூர் இறைவனையும், ஏழாம் வரியில் திருநீடூர் இறைவனையும் குறிப்பிட்டுள்ளார்.

12. "ஊன் உடுத்தி ஒன்பது வாசல்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கழிப்பாலை தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனை வருணித்தும் அவன்தம் பெருமைகளை உரைத்தும் அவன் வழியே நாம் போக வேண்டும் என்றும் பாடப்பட்டுள்ளது. இப் பாடல்கள் ஒவ்வொன்றின் ஆறாம் வரி, "கழிப்பாலை மேய கபால (அ)ப்பனார் ;" என்றும் எட்டாம் வரி "வழி

வைத்தார்க்கு அவ்வழியே போதும் நாமே" என்றும்அமைந்துள்ளது. இப்பதிகத்தின் ஐந்தாம் பாடல் ஓதுவார்களால் பரவலாகப் பாட்ப்படும் பாடலாகும். இப் பாடல் வருமாறு :

" விண் ஆனாய் ! விண்ணவர்கள் விரும்பி வந்து,
" வேதத்தாய் ! கீதத்தாய் ! விரவி எங்கும்
எண் ஆனாய் எழுத்து ஆனாய் ! கடல் ஏழ் ஆனாய்!
இறை ஆனாய்! எம் இறையே ! " என்று நிற்கும்
கண் ஆனாய் ! கார் ஆனாய் ! பாரும் ஆனாய் !
கழிப்பாலையுள் உறையும் கபால (அ)ப்பனார்,
மண் ஆன மாயக் குரம்பை நீங்க
வழி வைத்தார்க்கு, அவ்வழியே போதும், நாமே".

13. "கொடி மாட நீள் தெருவு" எனத் தொடங்கும் பதிகம் திருப்புறம்பயம் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவன் பெருமைகளைக் கூறி பல்வேறு தலங்களை விட்டு புறம்பயம் தம் ஊர் என்று போயினார் என்று பாடுகின்றார். ஒவ்வொரு பாடலும், "புறம்பயம் நம் ஊர்" என்று போயினாரே !" என்னும் இறுதிவரியுடன் நிறைவு பெறுகின்றது. இப்பதிகத்து பத்தாம் பாடல் சான்றாக இங்கு தரப்படுகிறது.

"கோ ஆய இந்திரன் உள்ளிட்டார் ஆகக்
குமரனும் விக்கின விநாயக(ன்)னும்;
பூ ஆய பீடத்துமேல் அய(ன்)னும்,
பூமி அளந்தானும் போற்று இசைப்ப;
பா ஆய இன் இசைகள் பாடி ஆடிப்
பாரிடமும் தாமும் பரந்து பற்றி
பூ ஆர்ந்த கொன்றை பொறி வண்டு ஆர்க்க
"புறம் பயம் நம் ஊர்" என்று போயினாரே"

14. "நினைந்து உருகும் அடியாரை" எனத் தொடங்கும் பதிகம் திருநல்லூர் தலத்திற்குரியது. பதினொரு பாடல்களைக் கொண்ட இப்பதிகம் இறைவனின் செயல்களை உரைக்கின்றது. ஒவ்வொரு பாடலும், நல்லூர் எம்பெருமானார் நல்ல ஆறே" என்னும் இறுதிவரியுடன்

நிறைவு பெறுகிறது. பாடல்கள் முழுவதிலும் "வைத்தார்" என்னும் சொல் இடம்பெறுகின்றது.

15. "குருகு ஆம் வயிரம் ஆம்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கருகாவூர் தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்டது. பாடல் முழுவதிலும் "ஆம்" என்னும் சொல் இடம்பெறுகிறது. ஒவ்வொரு பாடலும் "கண் ஆம்-கருகாவூர் எந்தைதானே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

16. "சூலப்படை உடையார்" எனத் தொடங்கும் பதிகம் திருஇடைமருது தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்டது. இப்பாடல் முழுவதிலும் 'போலும்' என்ற சொல் இடம்பெறுகின்றது. ஒவ்வொரு பாடலும் "இடைமருது மேவிய ஈசனாரே" என்னுய இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

17. "ஆறுசடைக்கு அணிவர்" எனத் தொடங்கும் பதிகம் திருஇடைமருது தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் சிறப்புக்களை எடுத்துரைக்கின்றது. ஒவ்வொரு பாடலின் இறுதி வரியும் "இடைமருது மேவி இடம்கொண்டாரே" என்று நிறைவு பெறுகிறது.

18. "வடி ஏறு திரிசூலம்" எனத் தொடங்கும் பதிகம் திருப்பூவணம் தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிக முழுவதிலும் "தோன்றும்" என்னும் சொல் விரவி வருகின்றது. ஒவ்வொரு பாடலும் "பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனார்க்கே" என்னும் இறுதிவரியுடன் நிறைவு பெறுகின்றது.

19. "முளைத்தானை எல்லார்க்கும்" எனத் தொடங்கும் பதிகம் திருஆலவாய் தலத்துக்குரியது. இப்பதிகம் பதினொரு பாடல்கள் கொண்டது. இறைவனின் சிறப்புக்களை எடுத்துரைக்கும் இப்பாடல்கள், "திருஆலவாய்ச் சிவன் அடியே சிந்திக்கப் பெற்றேன், நானே" என்னும் இறுதித் தொடருடன் நிறைவு

பெறுகின்றன. இப் பதிகத்தின் எட்டாம் பாடல் ஓதுவார்களால் பரவலாகப் பாடப்பெற்று வரும் பாடலாகும். இப் பாடல் வருமாறு :

"வாயானை, மனத்தானை, மனத்துள் நின்ற
கருத்தானை, கருத்தறிந்து முடிப்பான் தன்னை
தூயானை தூவெள்ளை ஏற்றான் தன்னை
சுடர்த்திங்கள் சடையானை தொடர்ந்து நின்றஎன்
தாயானை தவம்ஆய தன்மையானை
தலைஆய தேவாதி தேவர்க்கு என்றும்
சேயானை-தென்கூடல் திருஆலவாஅய்ச்
சிவன் அடியே சிந்திக்கப் பெற்றேன், நானே".

20. "ஆதிக்கண்ணான் முகத்தில்" எனத் தொடங்கும் பதிகம் திருநள்ளாறு தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் இறைவனின் உருவச் சிறப்புக்களையும் பெருமைகளையும் உரைத்துத் தாம் உய்ந்த பெற்றிமையைக் கூறுகின்றார். ஒவ்வொரு பாடலும் "நள்ளாற்றினை-நான் அடியேன் நினைக்கப் பெற்று உய்ந்த ஆறே" என்னும் இறுதித் தொடருடன் நிறைவு பெறுகின்றது.

21. "முடித் தாமரை அணிந்த" எனத் தொடங்கும் பதிகம் திருஆக்கூர்த் தான் தோன்றி மாடம் என்னும் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிக முழுவதிலும் "போலும்" என்ற சொல் விரவி வந்துள்ளது. ஒவ்வொரு பாடலும் இறைவனின் உருவச் சிறப்பைக் கூறி, "ஆக்கூரில் தான் தோன்றி அப்பனாரே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

22. "பாரார் பரவும்" எனத் தொடங்கும் பதிகம் திருநாகைக் காரோணம் தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் பெருமைகளைக் கூறி, அவ்விறைவனை நாகைக் காரோணத்தில் எப்பொழுதும் காணலாமே என்னும் குறிப்பில் பாடப்பெற்றுள்ளது. ஒவ்வொரு பாடலும்

"நாகைக் காரோணத்து எஞ்ஞான்றும் காணல் ஆமே" என்னும் இறதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

23. "தூண்டு சுடர் அனைய" எனத் தொடங்கும் பதிகம் திருமறைக்காடு தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலிலும் "கண்டாய்" எனும் சொல் விரவி வந்துள்ளது. ஒவ்வொரு பாடலும் இறைவனின் உருவச்சிறப்பையும், அவனது பெருமைகளையும் உரைத்து, "மறைக்காட்டு உறையும் மணாளன்தானே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. இப்பதிகத்தின் முதற்பாடல், தருமபுரம் சுவாமிநாதன் அவர்களால் பாடப்பெற்று ஒலிநாடாவில் வெளிவந்துள்ளது.[3] இப் பாடல் வருமாறு :

"தூண்டு சுடர் அனைய சோதி கண்டாய் ;
தொல் அமரர் சூளாமணி தான் கண்டாய்
காண்டற்கு அரிய கடவுள் கண்டாய் ;
கருதுவார்க்கு ஆற்ற எளியான் கண்டாய்
வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்
மெய்ந்நெறி கண்டாய் ; விரதம் எல்லாம்
மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய்
மறைக்காட்டு உறையும் மணாளன்தானே"

24. "கைம்மான மதகளிற்றின்" எனத் தொடங்கும் பதிகம் திருஆரூர் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் உருவச்சிறப்பையும், அவனது பெருமைகளையும் உரைக்கின்றது. "காண்" என்னும் சொல் ஒவ்வொரு பாடலிலும் விரவிவந்து, "திரு ஆரூரான் காண் என் சிந்தையானே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

25. "உயிரா வணம் இருந்து" எனத் தொடங்கும் பதிகம் திருஆரூர் தலத்துக்குரியது. பதினொரு பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு பொருளில் அமைந்துள்ளது. இதன் ஏழவாது பாடல் நாட்டிய அரங்கில் பிரபலமாக பாடப்பட்டு வரும் பாடலாகும். இதில்

3 தருமபுரம் சுவாமிநாதன் ஒலிநாடா எண் 43 F. 108 வாணி வெளியீடு, சென்னை

இறைவனிடம் அன்பு பூண்ட உமையம்மையின் நிலை வருணிக்கப்பட்டுள்ளது. அபிநயத்திற்கேற்ற இப்பாடல் வருமாறு :

“முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவன் இருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தை
தன்னை மறந்தாள் ; தன் நாமம் கெட்டாள்
தலைப் பட்டாள், நங்கை தலைவன்தாளே !”

இப்பாடல் அமரர் கல்கியின் புதினமொன்றிலும் இடம்பெற்றுள்ளது. சில பாடல்கள் இறைவனின் பெருமைகளையும், உருவச் சிறப்பையும், சில பாடல்கள் இறைவனை பக்தி உணர்வோடு வழிபடும் தொண்டர்களின் நிலையையும் எடுத்துரைக்கின்றது.

26. “பாதித் தன் திருஉருவில்” எனத் தொடங்கும் பதிகம் திரு ஆரூர் தலத்திற்குரியது. ஆறு பாடல்கள் மட்டுமே கொண்ட இப்பதிகம், இறைவனின் உருவச் சிறப்பையும், பெருமைகளையும் உரைக்கின்றது. ஒவ்வொரு பாடலும் “ஆரூரில் கண்டு அடியேன் அயர்த்த ஆறே” என்னும் வரியுடன் நிறைவு பெறுகிறது.

27. “பொய்ம் மாயப் பெருங்கடலில்” எனத் தொடங்கும் பதிகம் திரு ஆரூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்டது. ஐம்பூதங்கள், ஐம்புலன்கள், சுவைகள், குரோதம், உலோபம், பொறை போன்ற இடர்கள் எல்லாம் ஆரூர் இறைவனை அடைந்தோரிடம் நிற்காது என்னும் பொருள்பட பாடப்பட்டுள்ளது.

28. “நீற்றினையும் நெற்றிமேல்” எனத் தொடங்கும் பதிகம் திரு ஆரூர் தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்டது. இப்பாடல்களில் “போலும்” என்னும் சொல்

முழுவதுமாக விரவி வந்துள்ளது. ஒவ்வொரு பாடலும் அணிஆரூர்த் திருமூலட்டானனாரே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. இப்பதிகத்தின் ஏழாம் பாடல் ஓதுவார்களால் பரவலாகப் பாடப்பட்டு வருவதாகும். இப் பாடல் வருமாறு :

"முடிஆர்மதி அரவம் வைத்தார் போலும் ;
மூவுலகும் தாமேஆய் நின்றார் போலும் ;
செடிஆர் தலைபலி கொண்டு உழல்வார் போலும் ;
செல்கதி தான் கண்ட சிவனார் போலும்
கடிஆர் நஞ்சு உண்டு இருண்ட கண்டர் போலும்
கங்காள வேடக் கருத்தர் போலும் ;
அடியார் அடிமை உகப்பார் போலும்
அணி ஆரூர்த் திருமூலட் டானனாரே"

29. "திருமணியை, தித்திக்கும் தேனை" எனத் தொடங்கும் பதிகம் திருஆரூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்டது. இப் பாடல்களில் இறைவனைப் பலவாறு புகழ்ந்து பாடி, "ஆரூரில் அம்மான் தன்னை–அறியாது அடிநாயேன் உயர்த்த ஆறே" என்னும் தொடருடன் நிறைவு பெறுகிறது. இப் பதிகத்தின் முதற் பாடலில்,

". . . . . குழல் மொந்தை தாளம் வீணை
கொக்கரையில் சச்சரியின் பாணியானை"

என்னும் வரிகளில் இசைக்கருவிகள் குறிப்பிடப்பட்டுள்ளது. சச்சரி என்பது 108 தாளங்களில் ஒன்றாகவும் கருதலாம். இப்பதிகத்தின் எட்டாம் பாடல் ஓதுவார்களால் பரவலாக பாடப்பட்டு வருகின்றது. இப் பாடல் வருமாறு :

"முத்தினை, மணிதன்னை, மாணிக்கத்தை
மூவாத கற்பகத்தின் கொழுந்து தன்னை
கொத்தினை, வயிரத்தை கொல்ஏறு ஊர்ந்து
கோள் அரவு ஒன்று ஆட்டும் குழகன் தன்னை
பத்தனை, பத்தர் மனத்து உளானை,

பரிதி போல்-திருமேனி உடையான் தன்னை,
அத்தனை, ஆரூரில் அம்மான் தன்னை,
அறியாது அடிநாயேன் அயர்த்த ஆறே"

30. "எம்பந்த வல்வினை நோய்" எனத் தொடங்கும் பதிகம் திருஆரூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்டது. இறைவனின் பெருமைகளையும், அவனது உருவகச் சிறப்பையும் உரைக்கின்ற இப்பாடல்கள், "திருஆரூரில் திருமூலட்டானத்து எம் செல்வன்தானே" என்னும் தொடருடன் நிறைவு பெறுகின்றன. எல்லா பாடல்களிலும் "காண்" என்னும் சொல் விரவி வந்துள்ளது.

31. "இடர் கெடும் ஆறு எண்ணுதியேல்" எனத் தொடங்கும் பதிகம் திரு ஆரூர் தலத்திற்குரியது.பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், நெஞ்சை முன்னிலைப்படுத்திப் பாடும் வகையில் உள்ளது. இப் பாடல்கள் இறைவனை எவ்வாறெல்லாம் சிறப்பித்துப் பாடவேண்டும் என்று நெஞ்சுக்கு அறிவுறுத்தும் வகையில் அமைந்துள்ளன.

32. "கற்றவர்கள் உண்ணும் கனியே போற்றி" எனத் தொடங்கும் பதிகம் திரு ஆரூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், "போற்றித் திருத்தாண்டகம்" என்னும் சிறப்புப் பெயர் கொண்டது. எல்லா பாடல் வரிகளிலும் "போற்றி" என்னும் சொல் விரவி வந்துள்ளது. ஒவ்வொரு பாடலும், "திருமூலட்டானனே போற்றி" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

33. "பொரும்கை மதகரி" எனத் தொடங்கும் பதிகம் திரு ஆரூர் அரநெறி தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் பெருமைகளை உரைக்கின்றது. ஒவ்வொரு பாடலும், "...அரநெறியில் அப்பன் தன்னை-அடைந்து அடியேன் அருவினை நோய் அறுத்த ஆறே;" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

34."ஒருவனாய் உலகுஏத்த நின்ற நாளோ?" எனத் தொடங்கும் பதிகம் திரு ஆரூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடல் வரியிலும் நாளோ? என்று வினா இடம்பெறுகிறது. ஒவ்வொரு பாடலின் ஏழாவது வரியில் முன்னோ? பின்னோ? என்னும் தொடர் இடம்பெறுகிறது. இறுதி வரி "ஆரூர் கோயிலாக் கொண்ட நாளே" என்று நிறைவு பெறுகிறது, இப் பதிகத்து ஒன்பதாம் பாடலில் எட்டு என்ற எண்ணிக்கை கொண்ட பொருள்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இப் பாடல் வருமாறு:

"புகை எட்டும் போக்கு எட்டும், புலன்கள் எட்டும்
பூதலங்கள் அவை எட்டும், பொழில்கள் எட்டும்
கலை எட்டும், காப்பு எட்டும் காட்சி எட்டும்
கழல் சேவடி அடைந்தார் களைகள் எட்டும்
நகை எட்டும், நாள் எட்டும், நன்மை எட்டும்,
நலம் சிறந்தார் மனத்து அகத்து மலர்கள் எட்டும்
திசை எட்டும், தெரிப்பதற்கு முன்னோ? பின்னோ?
திரு ஆரூர் கோயிலாக் கொண்ட நாளே".

35. "தூண்டு சுடர் மேனி" எனத் தொடங்கும் பதிகம் திருவெண்காடு தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனின் உருவச்சிறப்பை சிறப்ப ரீதியில் உணர்த்துகின்றது. ஒவ்வொரு பாடலும் "வெண்காடு மேவிய விகிர்தனாரே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகின்றது. சான்றாக முதற்பாடல் வருமாறு :

"தூண்டு சுடர் மேனித் தூநீறு ஆடி,
சூலம் கைஏந்தி, ஓர் சுழல் வாய் நாகம்
பூண்டு பொறி அரவம் காதில் பெய்து
பொன் சடைகள் அவை தாழ, புரிவெண் நூலர்
நீண்டு கிடந்து இலங்கு திங்கள் சூடி
நெடுந் தெருவே வந்து எனது நெஞ்சம் கொண்டார்,
வேண்டும் நடை நடக்கும் வெள்ஏறு ஏறி-
வெண்காடு மேவிய விகிர்தனாரே".

அபிநயத்திற்கேற்ற இப் பாடல்களை நாட்டிய அரங்குகளில் சிறப்பாக இடம்பெறச் செய்யலாம்.

36. "அலை ஆர் கடல் நஞ்சம்" எனத் தொடங்கும் பதிகம் திருப்பழனம் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனின் பெருமைகளை உணர்த்தும் வகையில் அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலும், "பழனநகர் எம்பிரானார் தாமே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகின்றது. எல்லா வரிகளும் "தாமே" என்னும் சொல்லுடன் நிறைவு பெறுகிறது.

37. "ஆரார் திரிபுரங்கள்" எனத் தொடங்கும் பதிகம், திரு ஐயாறு தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனைப் பலவாறு போற்றி அரற்றும் வகையில் பாடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலும், "என்று என்றே நான் அரற்றி நைகின்றேனே" என்னும் இறுதிவரியுடன் நிறைவு பெறுகின்றது.எல்லா வரிகளும், "நானே" என்னும் சொல்லுடன் நிறைவு பெறுகிறது.

38. ஓசை ஒலி எல்லாம் ஆனாய் நீயே" எனத் தொடங்கும் பதிகம் திரு ஐயாறு தலத்துக்குரியது. பதினொரு பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலும், "திருஐயாறு அகலாத செம்பொன் சோதி!" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. ஒவ்வொரு வரியும் "நீயே" என்னும் இறுதிச் சொல்லுடன் நிறைவு பெறுகிறது. முதல் பாடல் பண்ணாங்கமாகவும் அரிகாம்போதி இராகத்தில் பாடப்பெறுகிறது. இப்பாடல் வருமாறு :

"ஓசை ஒலி எலாம் ஆனாய், நீயே
உலகுக்கு ஒருவனாய் நின்றாய் நீயே ;
வாசமலர் எலாம் ஆனாய் ; நீயே ;
மலையான் மருகனாய் நின்றாய், நீயே;"
பேசப் பெரிதும் இனியாய் நீயே ;
பிரானாய் அடி என் மேல் வைத்தாய், நீயே
தேச விளக்கு எலாம் ஆனாய், நீயே,

திரு ஐயாறு அகலாத செம்பொன் சோதி !"

பண்ணாங்கமாக பாடப்பெறும் இத்திருத்தாண்டகப் பாடலுக்குரியச் சுரதாளக் குறிப்பு வருமாறு

இராகம் : அரிகாம்போதி
தாளம் : ஆதி (28ஆவது மேளகர்த்தா இராகம்)

பல்லவி

; கமா கா, ; ரிகா ரிசா ; கரிச நிதநி சரிகம கா;
. ஓ . சை ஒலி யெலாம் . ஆ . . வாய். நீ . . யே ..
; கரீ ரிரீ ரீகா மாபா மகபம கரிமக சாசா சரிகம
. உல குக்கு ஒரு வனாய் நின். றாய்.. நீ . யே . .
பத // ஓசை

அனுபல்லவி
; தா;தா; பதாப மா ; த்நீ ச்ரீ நீச்சா நீதா
. வா ச மலர்எலாம் ஆ .னாய் நீ. யே.
; கரீ ரிரீ ரீகாமாபா மகபம கரிமக சாசா சரிகம
. மலை யான் மரு கனாய் நின். . றாய் . . நீ.. யே...
பத (ஓசை)

.................................................................................

(மற்ற அடிகளையும் இதே இசையமைப்பில் பாடவும்)

39. "நீறு ஏறு திருமேனி" எனத் தொடங்கும் பதிகம் திருமழபாடி தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் உருவச் சிறப்பையும் பெருமைகளையும் விளக்குகின்றது. ஒவ்வொரு பாடலும், "மழபாடி மன்னும் மணாளன் தானே" என்னும் இறுதி வரியுடன் நிறைவடைகின்றது. ஒவ்வொரு வரியும் "கண்டாய்" என்னும் இறுதிச் சொல்லைக் கொண்டு முடிகிறது.

40. "அலை அடுத்த பெருங்கடல்" எனத் தொடங்கும் பதிகம் திருமழபாடி தலத்திற்குரியது. ஏழு பாடல்களை

கொண்டது.இப்பாடல்கள்இறைவனின் பெருமைகளையும் திருநாவுக்கரசர் தாம் சமண மதத்தைத் தழுவி இருந்த நாட்களை நினைத்து வருந்திப் பாடுவதாகவும் அமைந்துள்ளன. ஒவ்வொரு பாடலும்,

"................. மழபாடி வயிரத்தூணே
என்று என்றே நான் அரற்றி நைகின்றேனே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

"அறை கலந்த குழல், மொந்தை, வீணை, யாழும்" எனத் தொடங்கும் இரண்டாம் பாடலில், குழல், மொந்தை, வீணை, யாழ் போன்ற இசைக் கருவிகளின் குறிப்பு இடம்பெறுகிறது.

41, "வகை எலாம் உடையாயும்" எனத் தொடங்கும் பதிகம் திருநெய்த்தானம் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனைப் பலவாறு போற்றி அத்தகைய இறைவனே என் நெஞ்சுள்ளான் என்று நாவுக்கரசர் பாடும் வகையில் அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலும்.

"........................... நீயே என்றும்
நின்ற நெய்த்தானா-என் நெஞ்சு உளாயே"

என்றும் இறுதி வரியுடன் பாடப்பட்டுள்ளது. ஒவ்வொரு வரியும், "நீயே என்றும்" என்னும் இறுதிச் சொல்லுடன் நிறைவு பெறுகிறது.

42. "மெய்த்தானத்து அகம்படியுள்" எனத் தொடங்கும் பதிகம் திருநெய்த்தானம் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் நெஞ்சை முன்னிலைப்படுத்தி உலக மாயையை யொழித்து நெய்த்தானத்து இறைவனை நினைந்தால் உய்யலாம் என்னும் கருத்தில் பாடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலும், "நினையுமா நினைந்தக்கால் உய்யல் ஆமே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

43, " நில்லாத நீர் சடைமேல்" எனத் தொடங்கும் பதிகம் திருப்பூந்துருத்தி தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள்

கொண்ட இப்பதிகத்தில் இறைவனின் பெருமைகளையும், தமக்கு அருளிய திறத்தையும் உரைத்து, அத்தகைய இறைவனை பூந்துருத்தியில் கண்டேன் நானே என்னும் கருத்தில் திருநாவுக்கரசர் பாடுகின்றார். முதல் இரண்டு பாடல்கள் தவிர, மற்ற பாடல்கள் 'புனிதன் தன்னை, பொய் இலியை - பூந்துருத்திக் கண்டேன், நானே' என்னும் இறுதி வரியுடன்நிறைவு பெறுகிறது.

44. "மூத்தவனாய் உலகுக்கு" எனத் தொடங்கும் பதிகம் திருச்சோற்றுத்துறை தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் இறைவனின் பெருமைகளை உரைத்து திருச்சோற்றுத்துறை உறையும் சிவனே ! உன் அடிமை நானே என்று நாவுக்கரசர் பாடுகிறார். ஒவ்வொரு பாடலும், " . . . . திருச்சோற்றுத்துறை உளானே ! திகழ் ஒளியே சிவனே ! உன் அபயம் நானே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

45. "வண்டு ஓங்கு செங்கமலம்" எனத் தொடங்கும் பதிகம் திருஒற்றியூர் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்டது. இப்பதிகத்தின் ஒன்பதாம் பாடல் குறிப்பிடத்தக்கது. "அல்லை" என்ற சொல் பாடல் முழுவதிலும் விரவி வந்துள்ளது. இப்பாடல் வருமாறு :

"மண் அல்லை ; விண் அல்லை ; வலயம் அல்லை ;
மலை அல்லை ; கடல் அல்லை ; வாயு அல்லை;
எண் அல்லை ; எழுத்து அல்லை ; எரியும் அல்லை ;
இரவு அல்லை ; பகல் அல்லை ; யாவும் அல்லை ;
பெண் அல்லை ; ஆண் அல்லை ; பேடும் அல்லை ;
பிறிது அல்லை ; ஆனாயும், பெரியாய் ! நீயே ;
உள் நல்லை, நல்லார்க்கு ; தீயை அல்லை
உணர்வு அரிய ஒற்றியூர் உடைய கோவே ! "

46. "நம்பனை நால்வேதம்" எனத் தொடங்கும் பதிகம் திருஆவடுதுறை தலத்துக்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனைப் பலவாறு சிறப்பித்து போற்றும் வகையில் அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலும்.

"...... ஆவடுதண் துறையுள் மேய
அரன் அடியே அடிநாயேன் அடைந்து உய்ந்தேனே!"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

47. "திருவே என் செல்வமே" எனத் தொடங்கும் பதிகம் திருஆவடுதுறை தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவன் தம்மை, "அஞ்சேல்" என்று கூறி அருளிச் செய்த திறத்தை எடுத்துரைக்கின்றார். ஒவ்வொரு பாடலும் "... அஞ்சேல் ! என்னாய்-ஆவடுதண் துறை உறையும் அமரர்ஏறே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

48. "நல்லான் காண், நால்மறைகள்" எனத் தொடங்கும் பதிகம் திருவலிவலம் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில், இறைவனைப் பலவாறு சிறப்பித்து, அவ்விறைவன் என் மனத்துளானே என்று பாடுகிறார். ஒவ்வொரு பாடலும், "... வானவர்கள் வணங்கி ஏத்தும் வலிவலத்தான் காண் ; அவன் என் மனத்து உளானே" என்னும்இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. ஒவ்வொரு வரியிலும் "காண்" என்னும் சொல் பரவலாக இடம்பெறுகின்றது.

49. "சந்திரனும் தண்புனலும்" எனத் தொடங்கும் பதிகம், திருக்கோகரணம் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்டது. இறைவனின் உருவச் சிறப்பினையும் மற்ற சிறப்புக்களையும் உரைக்கும் இப்பாடல்கள் "மாகடல் சூழ் கோகரணம் மன்னினானே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. ஒவ்வொரு வரியிலும், "காண்" என்ற சொல் பரவலாக இடம் பெற்றுள்ளது.

50. "போர் ஆனை ஈர்உரிவை" எனத் தொடங்கும் பதிகம் திருவீழிமிழலை தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனின் சிறப்புக் கூறி அவனைச் சேராதவர் தீநெறிக்குச் செல்பவரே என்று கூறுகின்றார்.

ஒவ்வொரு பாடலும்,

"..... திருவீழிமிழலை யானை, -
சேராதார் தீநெறிக்கே சேர்கின்றாரே"

என்னும் இறுதிவரியுடன் நிறைவு பெறுகின்றது.

51. "கயிலாய மலை உள்ளார்" எனத் தொடங்கும் பதிகம் திருவீழிமிழலை தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் கயிலாயம், காரோணம், மயிலாடுதுறை, வெண்காடு போன்ற பல்வேறு தலங்களில் உள்ள இறைவனைக் குறிப்பிட்டு, அவ்விறைவன் வீழிமிழலையில் மேவினாரே என்று நாவுக்கரசர் பாடுகிறார். ஒவ்வொரு பாடலும், "வீழிமிழலையே மேவினாரே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

52. "கண் அவன் காண்" எனத் தொடங்கும் பதிகம் திருவீழிமிழலை தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் திருவீழிமிழலை இறைவனின் உருவச் சிறப்பை வருணிக்கின்றது. ஒவ்வொரு பாடலும், "விண்இழி தண் வீழிமிழலையானே" என்னும்இறுதி வரியுடன் நிறைவு பெறுதகிறது.பாடல் முழுவதிலும் "காண்" என்னும் சொல் பரவலாக இடம்பெற்றுள்ளது. சான்றாக முதற்பாடல் வருமாறு :

"கண் அவன் காண் ; கண்ஒளி சேர் காட்சியான்காண்;"
கந்திருவம் பாட்டு இசையில் காட்டுகின்ற
பண் அவன்காண் ; பண் அவற்றின் திறம் ஆனான்காண் ;
பழம் ஆகிச் சுவை ஆகிப் பயக்கின்றான் காண்;
மண் அவன் காண்; தீ அவன் காண் ; நீர் ஆனான்காண் ;
வந்து அலைக்கும் மாருதன் காண் ; மழைமேகம்சேர்
விண் அவன் காண் ; விண்ணவர்க்கும் மேல் ஆனான் காண்-
விண் இழி தண் வீழிமிழலை யானே"

இப்பாடலில் கந்தருவர் பாடுகின்ற இசையின் பண்ணாகவும், அவற்றின் திறம் ஆகவும் இறைவன்

இருக்கின்ற செய்தி கூறப்பட்டுள்ளது.

53. "மான் ஏறு கரம் உடைய" எனத் தொடங்கும் பதிகம் திருவீழிமிழலை தலத்திற்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம் தம்மை ஆட்கொண்ட இறைவன் எவ்வாறு இருந்தார் என்பதை உரைக்கின்றது.

பாடலின் ஒவ்வொரு வரியிலும், "போலும்" என்ற சொல் இடம் பெற்றுள்ளது. ஒவ்வொரு பாடலும், "அடியேனை ஆள் உடைய அடிகள் தாமே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

54. "ஆண்டானை, அடியேனை" எனத் தொடங்கும் பதிகம் திருப்புள்ளிருக்கு வேளூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனின் பெருமைகளை உரைத்து அவனைப் போற்றாமல் வீணே நாட்களை கழித்தேனே என்ற வருந்திப் பாடும் வகையில் அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலும்,

"..... புள்ளிருக்கு வேளூரானை
போற்றாதே ஆற்ற நாள் போக்கினேனே !"

என்னும் இறுதி வரியுடன் நிறைவுபெறுகிறது. இப்பதிகத்தின் பத்தாம் பாடலில்,

"இறுத்தானை, இலங்கையர்கோன் சிரங்கள் பத்தும்
எழுநரம்பில் இன்இசை கேட்டு இன்புற்றானை"

என்னும் வரியில், இறைவன் இராவணனின் இன்இசை கேட்டு இன்புற்ற திறம் வெளிப்படுகிறது.

55. "வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி" எனத் தொடங்கும் பதிகம் திருக்கயிலாயம் தலத்துக்குரியது. பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் இறைவனின் பெருமைகளைப் பலவாறு போற்றிப் பாடப்பட்டுள்ளது. இக்காரணம் பற்றியே இஃது "போற்றித் திருத்தாண்டகம்" என்னும் சிறப்புப் பெயர் பெற்றுத்

திகழ்கின்றது. இப்பதிகத்தின் ஏழாம் பாடலில் நாவுக்கரசர்

"பண்ணின் இசை ஆகி நின்றாய் போற்றி"

என்று இறைவனைப் பண்ணாகவும் இசையாகவும் போற்றிப் பாடுகின்றார். இப்பதிகத்தின் ஒன்பதாம் பாடல் ஓதுவார்களால் பரவலாகப் பாடப்பட்டு வரும் பாடலாகும். இப் பாடல் வருமாறு :

"மூவாய், பிறவாய், இறவாய், போற்றி !
முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி !
தேவாதி தேவர் தொழும் தேவே, போற்றி !
சென்று ஏறி எங்கும் பரந்தாய், போற்றி
ஆவா ! அடியேனுக்கு எல்லாம், போற்றி !
அல்லல் நலிய அலந்தேன் போற்றி !
காவாய் ! கனகத் திரளே, போற்றி
கயிலை மலையானே, போற்றி போற்றி !"

ஒவ்வொரு பாடலும், "கயிலை மலையானே, போற்றி போற்றி" என்னும் இறுதி வரியுடன் நிறைவுபெறுகிறது. பாடலின் ஒவ்வொரு வரியும் "போற்றி" என்னும் இறுதிச் சொல்லுடன் நிறைவடைகிறது.

56. "பொறை உடைய பூமி, நீர் ஆனாய் ! போற்றி" எனத் தொடங்கும் பதிகம் திருக்கயிலாயம் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனின் பெருமைகளைப் போற்றி உரைக்கின்றது. இதனால் இப்பதிகம் "போற்றித் திருத்தாண்டகம்" என்னும் சிறப்புப் பெயரைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு பாடலின் இறுதி வரி "கயிலை மலையானே, போற்றி போற்றி!" என்றும் ஒவ்வொரு வரியின் இறுதிச் சொல்லும் "போற்றி" என்றும் அமைந்துள்ளது.

57. "பாட்டு ஆன நல்ல தொடையாய் போற்றி !" எனத் தொடங்கும் பதிகம் திருக்கயிலாயம் தலத்திற்குரியது. ஒன்பது பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனின்

பெருமைகளையும், உருவையும் சிறப்பித்துப் பாடும் பதிகமாகும். ஒவ்வொரு பாடலின் இறுதி வரியும், "கயிலை மலையானே, போற்றி போற்றி!" என்றும், இறுதிச் சொல் "போற்றி போற்றி" என்றும் நிறைவடைகிறது. இப்பதிகத்தின் ஏழாம் பாடலில், "பண்மேலே பாவித்து இருந்தாய் போற்றி ! பண்ணொடு யாழ் வீணை பயின்றாய் போற்றி!" என்னும் வரிகளில் இறைவன் பண் மேல் விருப்பம் கொண்டு இருப்பவனாகவும் பண், யாழ், வீணை ஆகியவற்றைப் பயின்றவனாகவும் விளங்கும் திறம் வெளிப்படுகிறது.

58. "மண் அளந்த மணிவண்ணர்" எனத் தொடங்கும் பதிகம் திருவலம்புரம் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனைத் தலைவனாகவும், தம்மைத் தலைவியாகவும் பாவித்துப் பாடும் வகையில் பாடப்பட்டுள்ளது. நாட்டிய அரங்கில் பாடி அபிநயிக்கும் வகையில் இப்பதிகம் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு பாடலும், "வலம்புரமே புக்கு, அங்கே மன்னினாரே" என்னும் இறுதிச் சொல்லுடன் நிறைவு பெறுகிறது. அகப்பொருட் துறையிலமைந்த இப்பாடலை மனத்திற் கொண்டு சிற்பியொருவன் வடித்த கவின்மிகு சிலையொன்று "வட்டணை காட்டவந்த நாயகர்" என்னும் பெயரில்,[4] இன்றும் திருவலம்புரத்தில் திகழ்வதைக் காணலாம்.

59. "தொண்டு இலங்கும் அடியவர்க்கு" எனத் தொடங்கும் பதிகம் திருவெண்ணியூர் தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் உருவச் சிறப்பை விளக்குகின்றது. ஒவ்வொரு பாடலும் "வெண்ணி அமர்ந்து உறைகின்ற விகிர்தனாரே" என்னும் இறுதி வரியுடன்நிறைவு பெறுகிறது. இப்பதிகத்தில் ஐந்தாம் பாடலில், "பண் இலங்கு பாடலோடு ஆடலாரும் பருப்பதமும் பாதூரும் மன்னினாரும்" என்னும் வரியில் இறைவன், பண் இலங்கும் பாடலோடு ஆடுபவர்" என்று அறியமுடிகிறது.

4 கப்புரெட்டியார், நாவுக்கரசர்

60. "மூத்தவனை, வானவர்க்கு" எனத் தொடங்கும் பதிகம் திருக்கற்குடி தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் பெருமைகளைப் பலவாறு பேசி, அவ்விறைவனைத் தாம் கற்குடியில் கண்ணார கண்டதாகக் கூறுகிறார். ஒவ்வொரு பாடலும்,

"..... கற்குடியில் விழுமியானை
கற்பகத்தை ; கண்ஆரக் கண்டேன், நானே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

61. "மாதினை ஓர் கூறு உகந்தாய்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கன்றாப்பூர் தலத்துக்குரியது. ஒன்பது பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனைப் பலவாறு உருகிப் போற்றித் தொழும் அடியவர்கள் நெஞ்சில் கன்றாப்பூர் இறைவனைக் காணமுடியும் என்னும் பொருள்பட பாடப்பட்டுள்ளது. சான்றாக ஐந்தாம் பாடல் வருமாறு :

"விருத்தனே! வேலை விடம் உண்ட கண்டா!
விரிசடைமேல் வெண்திங்கள் விளங்கச்சூடும்
ஒருத்தனே! உமைகணவா! உலக மூர்த்தி!
நுந்தாத ஒண்சுடரே! அடியார் தங்கள்
பொருத்தனே! என்றுஎன்று புலம்பி, நாளும்
புலன் ஐந்தும் அகத்து அடக்கி, புலம்பி நோக்கி,
கருத்தினால் தொழும் அடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணல்ஆமே!"

ஒவ்வொரு பாடலும்,

"......தொழும் அடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணல் ஆமே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

62. "எத்தாயர் எத்தந்தை எச்சுற்றத்தார்" எனத் தொடங்கும் பதிகம் திருஆனைக்கா தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், உலக மாயையை விலக்கி இறைவனின் பொற்பாதங்களை அடையும் வழியைத் தேடுவதன்றி வேறு என்ன செய்ய வேண்டும்

என்னும் கருத்தில் பாடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலின் இறுதி வரியும்,

"..... உன் பொன்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டம் கொண்டு அடியேன் என் செய்கேனே?"

என்று வினவும் வகையில் பாடப்பட்டுள்ளது. சில பாடல்கள் இறைவனின் பெருமைகளைப் புகழ்ந்து பாடும் வகையிலும் அமைக்கப் பெற்றுள்ளது.

63. "முன் ஆனைத் தோல் போர்த்த" எனத் தொடங்கும் பதிகம் திருஆனைக்கா தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனைப் பலவாறாகப் போற்றி அவ்விறைவனை சென்று ஆடினேனே என்னும் கருத்தில் பாடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலும்,

"..... திருஆனைக்கா உளானை,
செழுநீர்த்திரளை, சென்று ஆடினேனே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெற்றுள்ளது.

64. "கூற்றுவன் காண் கூற்றுவனை" எனத் தொடங்கும் பதிகம் திருக்கச்சி ஏகம்பம் தலத்துக்குரியது. பதினொரு பாடல்கள் கொண்டது. இறைவனை பலவாறு வருணித்துப் பாடி அத்தகைய இறைவன் தம் எண்ணத்து உள்ளான் என்னும் கருத்துப்பட பாடப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலும்,

"..... எழில் ஆரும் பொழில் ஆர்கச்சி
ஏகம்பன் காண்; அவன் என் எண்ணத்தானே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. இப்பதிகத்தின் நான்காம் பாடல் கிடைக்கப்பெறவில்லை. பாடல்கள் முழுவதிலும் "காண்" என்னும் சொல் விரவி வந்துள்ளது.

65. "உரித்தவன் காண்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கச்சி ஏகம்பம் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் பெருமைகளையும், தோற்றப்பொலிவையும் வருணித்து அத்தகைய இறைவன் என் எண்ணத்தில் உளானே என்னும் கருத்தில்

பாடப்பட்டுள்ளது. சான்றாக ஒன்பதாம் பாடல் வருமாறு

"முந்தை காண், மூவரினும் முதல் ஆனான் காண்,
மூஇலை வேல் மூர்த்தி காண், முருக வேட்குத்
தந்தை காண், தண் கட மா முகத்தினாற்குத்
தாதை காண், தாழ்ந்து அடியே வணங்குவார்க்குச்
சிந்தை காண், சிந்தாத சித்தத்தார்க்குச்
சிவன் அவன்காண், செங்கண் மால்விடை ஒன்று ஏறும்
எந்தை காண்-எழில் ஆரும் பொழில் ஆர்கச்சி
ஏகம்பன் காண்; அவன் என் எண்ணத்தானே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

66. "தாய் அவனை, வானோர்க்கும்" எனத் தொடங்கும் பதிகம், திருநாகேச்சுரம் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் திருநாகேச்சுவர இறைவனைப் பலவாறு போற்றி, அவ்விறைவனைச் சேராதவர் நன்நெறியில் சேராதவரே என்னும் கருத்து புலப்படும் படி பாடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலும்,

" . . . . . திருநாகேச்சுரத்து உளானை
சேராதார் நன்நெறிக்கண் சேராதாரே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

67. "ஆள் ஆன அடியவர்கட்கு" எனத் தொடங்கும் பதிகம் திருக்கீழ்வேளூர் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனை நாடுவோர் கேடு இல்லாதவர் என்னும் பொருள்பட பாடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலும்,

" . . . . . கீழ்வேளூர் ஆளும் கோவை,
கேடு இலியை, நாடுமவர் கேடு இலாரே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

68. "கருமணியை கனகத்தின் குன்று ஒப்பானை" எனத் தொடங்கும் பதிகம் திருமுதுகுன்றம் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில், இறைவனின் தோற்றப் பொலிவைப் பலவாறு போற்றி, அவ்விறைவனை அறிய மாட்டாமல் திகைத்து நிற்கின்றேனே என்று திருநாவுக்கரசர் பாடுகிறார். ஒவ்வொரு பாடலும்,

"..... திருமுதுகுன்று உடையான் தன்னை
தீவினையேன் அறியாதே திகைத்த ஆறே!"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

69. "ஆராத இன்னமுதை" எனத் தொடங்கும் பதிகம் திருப்பள்ளியின் முக்கூடல் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனைப் பலவாறு புகழ்ந்து பாடி, அவ்விறைவனைப் பயிலாமல் வீணாக உழன்று வருகிறேனே என்று வருந்தி பாடுகிறார். ஒவ்வொரு பாடலும்,

"..... பள்ளியின் முக் கூடலானை
பயிலாதே பாழே நான் உழன்ற ஆறே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

70. "தில்லைச் சிற்றம்பலமும்" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். பதினொரு பாடல்கள் கொண்ட இப்பதிகம் "க்ஷேத்திரக் கோவைத் திருத் தாண்டகம்" என்னும் சிறப்புப் பெயரைக் கொண்டது. தில்லைச் சிற்றம்பலம் போன்ற தலங்களை வரிசைப்படுத்தி, இத்தலங்களில் கயிலாயநாதனை காணலாமே என்னும் குறிப்பில் பாடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலும் "கயிலாய நாதனையே காணல் ஆமே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. சான்றாக பதினோராம் பாடல் வருமாறு :

"புலிவலம், புத்தூர், புகலூர் புன்கூர்
புறம்பயம் பூவணம் பொய்கை நல்லூர்
வலிவலம் மாற்பேறு வாய்மூர் வைகல்
வலஞ்சுழி வாஞ்சியம் மருகல் வன்னி
நிலம்மலி நெய்த் தானத்தோடு எத்தானத்தும்
நிலவு பெருங்கோயில், பல கண்டால், தொண்டீர்!
கலிவலி மிக்கோனைக் கால் விரலால் செற்ற
கயிலாய நாதனையே காணல் ஆமே"

71. "பொருப்பள்ளி, வரைவில்லா" எனத் தொடங்கும் பதிகம் பொதுப்பதிகமாகும். பதினொரு பாடல்களைக் கொண்ட இப்பதிகம் "அடைவு

திருத்தாண்டகம்" என்னும் சிறப்புப் பெயரைக் கொண்டது. பொருப்பள்ளி, சக்கரப்பள்ளி, திருக்காட்டுப்பள்ளி போன்ற தலங்களில் உறையும் இறைவனைப் பகர்வோர் மேல் உலகில் இனிதாக உறைவர் என்றும், சில பாடல்களில் பல்வேறு தலங்களில் உறையும் இறைவனைத் தொழுவோர்களுக்கு வினைகள் அறும் என்றும் பாடப்பட்டுள்ளன.

72. "அலைஆர் புனல் கங்கை" எனத் தொடங்கும் பதிகம் திருவலஞ்சுழி தலத்திற்குரியது. ஒரே ஒரு பாடல் மட்டுமே கொண்ட இப்பதிகம் வலஞ்சுழியில் உறையும் இறைவனைப் புகழ்ந்து பாடுகின்றது. இப்பாடல் வருமாறு:

"அலைஆர் புனல் கங்கை நங்கை காண
அம்பலத்தில் அரு நட்டம் ஆடி, வேடம்
தொலையாத வென்றியார், நின்றியூரும்
நெடுங்களமும் மேவி, விடையை மேற்கொண்டு
இலைஆர் படை கையில் ஏந்தி எங்கும்
இமையவரும் உமையவளும் இறைஞ்சி ஏத்த,
மலைஆர் திரள் அருவிப் பொன்னி சூழ்ந்த
வலஞ்சுழியே புக்கு இடமா மன்னினாரே"

73. "கருமணி போல் கண்டத்து அழகன் கண்டாய்" எனத் தொடங்கும் பதிகம் திருவலஞ்சுழியும் திருக்கொட்டையூர்க் கோடீச்சுரமும் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் இவ்விரு தலங்களில் உறையும் இறைவனின் பெருமைகள் உரைக்கப் பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலும்,

"......கொட்டையூரில்
கோடீச்சுரத்து உறையும் கோமான் தானே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. ஒவ்வொரு பாடலிலும் "கண்டாய்" என்னும் சொல் பாடல் முழுவதிலும் விரவி வந்துள்ளது.

74. "சொல்லானை, பொருளானை" எனத் தொடங்கும் பதிகம் திருநாரையூர் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்டது. இறைவனின் பெருமைகளை எல்லாம் உரைத்து அவனை நாரையூர் நகரில் தாம்

கண்டதாகக் கூறுகிறார். ஒவ்வொரு பாடலும், "நாரையூர் நன்நகரில் கண்டேன், நானே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. பாடல்கள் முழுவதிலும் 'தன்னை' என்னும் சொல் விரவி வந்துள்ளது. இப்பதிகத்தின் ஏழாம் பாடலில், "கொக்கரை சச்சரி வீணைப் பாணி யானை" என்னும் வரியில், கொக்கரை, சச்சரி, வீணை ஆகிய இசைக்கருவிகள் இடம்பெற்றுள்ளன.

75. "சொல் மலிந்த மறை நான்கு" எனத் தொடங்கும் பதிகம் திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம் தலத்துக்குரியது. பதினோரு பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் உருவ வருணனையாக அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலும், "குடந்தைக் கீழ்கோட்டத்து எம் கூத்தனாரே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. ஒவ்வொரு பாடலின் வரிகளிலும் 'போலும்' என்கிற சொல் விரவி வந்துள்ளது.

76. "புரிந்து அமரர் தொழுது ஏத்தும்" எனத் தொடங்கும் பதிகம் திருப்புத்தூர் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் திருநாவுக்கரசர் தம் சிந்தையுள் உறையும் இறைவனின் புகழை ஏத்தியும் உருவச் சிறப்பை வருணித்தும் பாடுகிறார். ஒவ்வொரு பாடலும்,

"............... திருப்புத்தூரில்
திருத்தளியான் காண்; அவன் என் சிந்தையானே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. பாடலின் ஒவ்வொரு வரியிலும் "காண்" என்ற சொல் விரவி வந்துள்ளது.

77. "பாட அடியார் பரவக் கண்டேன்" எனத் தொடங்கும் பதிகம் திருவாய்மூர் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் நாவுக்கரசர் தாம் கண்ட வாய்மூர் இறைவனைப் பலவாறு புகழ்ந்து வருணிக்கிறார். ஒவ்வொரு பாடலும், "வாய்மூர் அடிகளை நான் கண்ட ஆறே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. பாடலின் ஒவ்வொரு வரியிலும், "கண்டேன்" என்ற சொல் விரவி வந்துள்ளது. சான்றாக ஏழாம் பாடல் வருமாறு :

"குழை ஆர் திருத்தோடு காதில் கண்டேன்

கொக்கரையும் சச்சரியும் கொள்கை கண்டேன்
இழை ஆர் புரிநூல் வலத்தே கண்டேன்;
ஏழ்இசை யாழ், வீணை, முரலக் கண்டேன்;
தழை ஆர் சடை கண்டேன்; தன்மை கண்டேன்;
தக்கை யொடு தாளம் கறங்கக் கண்டேன்;
மழை ஆர் திருமிடறும் மற்றும் கண்டேன்;
வாய்மூர் அடிகளை நான் கண்ட ஆறே!"

இப்பாடலில் திருநாவுக்கரசர் கொக்கரை, சச்சரி முதலிய கருவிகளை உடைய இறைவனைத் தாம் கண்டதாகவும், யாழ், வீணை முரலுவதையும், தக்கை, தாளம் ஆகிய கருவிகள் ஒலிப்பதையும் கூறுகிறார்.

78. "ஒன்றா உலகனைத்தும் ஆனார் தாமே" எனத் தொடங்கும் பதிகம். திருஆலங்காடு தலத்துப் பதிகமாகும். பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் இறைவனின் பெருமைகளையெல்லாம் உரைத்து, அவ்விறைவன் திருஆலங்காட்டில் உறைபவர் என்று பாடுகிறார். ஒவ்வொரு பாடலும்,

"திருஆலங்காடு உறையும் செல்வர் தாமே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. பாடலின் ஒவ்வொரு வரியும் "தாமே" என்னும் இறுதிச் சொல்லுடன் நிறைவு பெறுகிறது. ஆறாம் பாடலில் "பண்தான் இசை பாட நின்றார் தாமே" என்னும் வரியிலும், எட்டாம் பாடலில், "பண் இயலும் பாடல் உகப்பார் தாமே" என்னும் வரியிலும் பண் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

79. "தொண்டர்க்குத் தூநெறிஆய்" எனத் தொடங்கும் பதிகம் திருத்தலையாலங்காடு தலத்திற்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் திருநாவுக்கரசர் இறைவனின் பெருமைகளைப் பலவாறு பேசி, தலையாலங்காட்டு இறைவனைச் சாராது பல் நாள் வீணே போக்கினேனே என்று வருந்திப் பாடும் வகையில் அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலும்,

"....... தலையாலங்காடன் தன்னை
சாராதே சால நாள் போக்கினேனே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

80. "பாரானை பாரினது பயன் ஆனானை" எனத் தொடங்கும் பதிகம் திருமாற்பேறு தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனைப் பலவாறு சிறப்பித்து, திருமாற்பேறு இறைவனைத் தான் சென்றடைந்த திறத்தை எடுத்துக் கூறுகிறார். ஒவ்வொரு பாடலும்,

"......திருமாற் பேற்று எம்
செம்பவளக் குன்றினை-சென்று அடைந்தேன் நானே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

81. "கண்தலம் சேர் நெற்றி" எனத் தொடங்கும் பதிகம் திருக்கோடிகா தலத்திற்குரியது. எட்டுப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் இறைவனைத் தாம் கண்ட திறத்தைக் கூறுகின்றார். ஒவ்வொரு பாடலும், "கோடிகா அமர்ந்து உறையும் குழகன் தானே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. பாடலின் ஒவ்வொரு வரியும், "கண்டாய்" என்னும் சொல்லுடன் நிறைவு பெறுகிறது.

82. "வானத்து இளமதியும்" எனத் தொடங்கும் பதிகம் திருச்சாய்க்காடு தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் திருச்சாய்க்காட்டில் இனிதுறையும் இறைவனின் உருவப் பொலிவை வருணிக்கின்றார். ஒவ்வொரு பாடலும், "திருச்சாய்க்காட்டு இனிது உறையும் செல்வர் தாமே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. எல்லா பாடல்களிலும் "போலும்" என்ற சொல் விரவி வருகின்றது.

83. "விண் ஆகி நிலன் ஆகி" எனத் தொடங்கும் பதிகம் திருப்பாதூர் தல்த்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் சிறப்புக்களை உரைத்து அவ்விறைவனைக் கண்டு அடியேன் உய்ந்தேன் என்னும் பொருள்பட அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலும், "பரஞ்சுடரைக் கண்டு அடியேன் உய்ந்த ஆறே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. முதல் மூன்று பாடல்களில், "ஆகி" என்னும் சொல் விரவி

வந்துள்ளது.

84. "பெருந்தகையை, பெறற்கு அரிய" எனத் தொடங்கும் பதிகம் திருச்செங்காட்டங்குடி தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் திருவிளையாடல்களையும், தம்மை சமண மதத்தில் இருந்து விடுவித்து அருள் செய்த திறத்தையும் பாடி அவ்விறைவனைச் செங்காட்டங்குடியில் நான் கண்டு கொண்டேன் என்று நாவுக்கரசர் பாடுகிறார். ஒவ்வொரு பாடலும், "செங்காட்டங்குடி அதனில் கண்டேன், நானே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

85. "ஆர்த்தான் காண், அழல் நாகம்" எனத் தொடங்கும் பதிகம் திருமுண்டீச்சுரம் தலத்துக்குரியது. ஒன்பது பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் திருநாவுக்கரசர் இறைவனின் தோற்றப் பொலிவை பாடி, அவ்விறைவன் தம் சிந்தையுளான் என்று பாடுகிறார். ஒவ்வொரு பாடலும்,

"............ திருமுண்டீச்சுரத்து மேய
சிவலோகன் காண்; அவன் என் சிந்தையானே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவடைகிறது. பாடல்கள் முழுவதிலும் "காண்" என்னும் சொல் விரவி வருகின்றது. "மூவன்காண்" எனத் தொடங்கும் நான்காம் பாடல் ஓதுவார்களால் பரவலாக பாடப்பட்டு வரும் பாடலாகும்.

"மூவன்காண்; மூவர்க்கும் முதல் ஆனான் காண்;
முன்னும் ஆய், பின்னுமாய், முடிவு ஆனான்காண்
காவன்காண்; உலகுக்கு ஓர் கண் ஆனான் காண்
கங்காளன் காண்; கயிலை மலையினான் காண்;
ஆவன்காண்; ஆ அகத்து அஞ்சு ஆடினான் காண்;
ஆர் அழல்ஆய் அயற்கு அரிக்கும் அறிய ஒண்ணாத்
தேவன்காண்-திருமுண்டீச்சுரத்து மேய
சிவலோகன் காண்; அவன் என் சிந்தை யானே"

86. "பெருந்தகையை, பெறற்கு அரிய" எனத் தொடங்கும் பதிகம் திருச்செங்காட்டங்குடி தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் திருவிளையாடல்களையும், தம்மை சமண மதத்தில்

இருந்து விடுவித்து அருள்செய்த திறத்தையும் பாடி அவ்விறைவனைச் செங்காட்டங்குடியில் நான் கண்டு கொண்டேன் என்று நாவுக்கரசர் பாடுகிறார். ஒவ்வொரு பாடலும், "செங்காட்டங்குடி அதனில் கண்டேன், நானே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

86. "கருஆகிக் கண்ணுதலாய்" எனத் தொடங்கும் பதிகம் திருஆலம் பொழில் தலத்துக்குரியது. ஒன்பது பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் திருநாவுக்கரசர் இறைவனின் பெருமைகளையும், சமண மதத்திலிருந்து தம்மை விடுவித்து ஆட்கொண்ட இறைவனின் அருளையும் கூறி, அத்தகைய இறைவனை சிந்திக்க வேண்டும் என்று நெஞ்சை விளித்துப் பாடுகிறார். ஒவ்வொரு பாடலும்,

**"......... தென்பரம்பைக் குடியில் மேய**
**திருஆலம் பொழிலானை; சிந்தி, நெஞ்சே!"**

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

87. "வானவன் காண்" எனத் தொடங்கும் பதிகம் திருச்சிவபுரம் தலத்துக்குரியது. எட்டுப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனின் சிறப்புக்களை எடுத்துரைக்கின்றன. ஒவ்வொரு பாடலும், "சிவன் அவன்காண்–சிவபுரத்து எம் செல்வன் தானே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. ஒவ்வொரு பாடலிலும் "காண்" என்னும் சொல் விரவி வந்துள்ளது. இப்பதிகத்தின் ஏழாம் பாடலில், "வீணையோடு இசைந்து மிகுபாடல் மிக்க கையவன் காண்" என்னும் குறிப்பில் இறைவன் வீணையோடு இசைந்து பாடல் பாடும் தன்மையினன் என்று தெரிகிறது.

88. "ஆர் ஆரும் மூ இலைவேல்" எனத் தொடங்கும் பதிகம் திரு ஓமாம் புலியூர் தலத்துக்குரியது. ஒன்பது பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் சிறப்புக்களை எடுத்துக் கூறுகின்றது. ஒவ்வொரு பாடலும்,

**"..... வடதளி எம் செல்வன் தன்னை;**
**சேராதே திகைத்து நான் செலுத்தினேனே!"**

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

89. "அல்லிமலர் நாற்றத்து" எனத் தொடங்கும் பதிகம் திருஇன்னம்பர் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் சிறப்புக்களை உரைக்கின்றது. ஒவ்வொரு பாடலும்,

"இன்னம் பர்த் தான்தோன்றி ஈசனாரே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. எல்லா பாடலிலும் "போலும்" என்னும் சொல் விரவி காணப்படுகிறது. சான்றாக ஒன்பதாம் பாடல் வருமாறு :

"கரு உற்ற காலத்தே என்னை ஆண்டு
கழல் போது தந்து, அளித்த கள்வர் போலும்;
செருவில் புரம் மூன்றும் அட்டார் போலும்;
தேவர்க்கும் தேவர் ஆம் செல்வர் போலும்;
மருவில் பிரியாத மைந்தர் போலும்;
மலர் அடிகள் நாடி வணங்கல் உற்ற
இருவர்க்கும் ஒருவராய் நின்றார் போலும்-
இன்னம்பர்த் தான் தோன்றி ஈசனாரே"

90. "மூ இலை நல்சூலம்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கஞ்சனூர் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் உருவச் சிறப்பை வருணிக்கின்றது. ஒவ்வொரு பாடலும்,

"......... கஞ்சனூர் ஆண்ட கோவை,
கற்பகத்தை, - கண் ஆரக் கண்டு உய்ந்தேனே!"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

91. "பன்னிய செந்தமிழ் அறியேன்" எனத் தொடங்கும் பதிகம் திருஎறும்பியூர் தலத்துக்குரியது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் திருநாவுக்கரசர் இறைவனை நினையாது, சமண மதத்தில் இருந்து வீணில்தாம் கழித்த நாட்களை எண்ணியும் இறைவன் தம்மை ஆட்கொண்டு அருள் செய்த திறத்தையும் பாடுகின்றார். ஒவ்வொரு பாடலும்,

"....... எறும்பியூர் மலைமேல் மாணிக்கத்தை
செழுஞ்சுடரை சென்று அடையப் பெற்றேன் நானே"

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. இப்பதிகத்தின் பத்தாம் பாடலில், இராவணன் தம்முடைய முன்கைநரம்பினை எடுத்துக் கீதம் பாடிய திறம் குறிப்பிடப்பட்டுள்ளது.

92. "மூஇலை வேல் கையானை" எனத் தொடங்கும் பதிகம் திருக்கழுக்குன்றம் தலத்திற்குரியது. இரண்டு பாடல்கள் கொண்ட இப்பதிகம், இறைவனின் தோற்றப் பொலிவை விளக்குகின்றது. ஒவ்வொரு பாடலும், "கற்பகத்தை-கண்ஆரக் கண்டேன் நானே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

93. "நேர்ந்து ஒருத்தி ஒரு பாகத்து" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், "பலவகைத் திருத்தாண்டகம்" என்ற சிறப்புப் பெயருடன் விளங்குகின்றது. பூந்துருத்தி, நெய்த்தானம், ஐயாறு, பழனம், சோற்றுத்துறை, வலஞ்சுழி, கண்டியூர், குடமூக்கு, வெண்காடு ஆகிய தலங்களில் உறையும் இறைவனின் பெருமைகளை உரைத்து, அத்தலங்களின் பெயரைக் கூறினால் வினைகள் அகலும் என்னும் பொருள்பட பாடியுள்ளார். இப்பதிகத்தின் பத்தாம் பாடலில், உலக மாயையில் உழல வேண்டாம். நமச்சிவாய என்னும் இறைவனின் திருநாமத்தைக் கூறி வீடுபேற்றினை அடைக என்று நெஞ்சுக்கு அறிவுறுத்துகிறார். இப்பாடல் வருமாறு :

"தந்தை யார்? தாய் யார்? உடன் பிறந்தார்
தாரம் ஆர்? புத்திரர் ஆர், தாம்தாம்ஆரே?
வந்த ஆறு எங்ஙனே? போன ஆறு ஏதோ?
மாயம் ஆம்; இதற்கு ஏதும் மகிழ வேண்டா!
சிந்தையீர்! உமக்கு ஒன்று சொல்லக் கேண்மின்
திகழ் மதியும் வாள் அரவும் திளைக்கும் சென்னி
எந்தையார் திருநாமம் "நமச்சிவாய"
என்று எழுவார்க்கு இரு விசும்பில் இருக்கல் ஆமே"

94. "இரு நிலன் ஆய், தீ ஆகி" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் "நின்ற திருத்தாண்டகம்" என்னும் சிறப்புப்

பெயர் கொண்டது. இறைவன் பலவாறு நின்ற சிறப்பை இப்பதிகம் எடுத்துரைக்கின்றது. பெரும்பாலான பாடலில் "எழும் சுடர் ஆய் எம் அடிகள் நின்ற ஆறே" என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது.

95. "அப்பன் நீ அம்மை நீ" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் தனித்திருத்தாண்டகம் என்ற சிறப்புப் பெயர் கொண்டு விளங்குகின்றது. ஒவ்வொரு பாடலும் தனித்தனிப் பொருளைக் கொண்டு பாடப்பட்டிருப்பதால் இச்சிறப்புப் பெயர் கொண்டிருக்கலாம். இப்பதிகத்தின் ஐந்தாம் பாடலில் திருக்கோயில் இல்லாத ஊரும், மற்றும் இறைவனை பணியாத ஊரும், பாடாத ஊரும் ஊரே அல்ல; காடு" என்னும் குறிப்பில் பாடியுள்ளார். இப்பதிகத்தின் "குலம் பொல்லேன் குணம் பொல்லேன்" எனத் தொடங்கும் 9ஆம் பாடலில் திருநர்வுக்கரசர் தம்மை இழிநிலையில் வைத்து பாடுகிறார். இப்பதிகத்தின் முதல் பாடலும், "ஆட்டுவித்தால் ஆர் ஒருவர் ஆடாதாரே" எனத் தொடங்கும் மூன்றாம் பாடலும் ஓதுவார்களால் சிறப்பாகப் பாடப்பெற்று வரும் பாடல்களாகும். சான்றாக முதற்பாடல் வருமாறு :

"அப்பன் நீ, அம்மை நீ, ஐயனும் நீ,
அன்பு உடைய மாமனும் மாமியும் நீ
ஒப்பு உடைய மாதரும் ஒண் பொருளும் நீ,
ஒரு குலமும் சுற்றமும் ஓர் ஊரும் நீ,
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்று வாய் நீ,
துணை ஆய் என் நெஞ்சம் துறப்பிப்பாய் நீ,
இப் பொன்நீ, இம்மணி நீ, இம் முத்து(ந்)நீ,
இறைவன் நீ-ஏறு ஊர்ந்த செல்வன் நீயே"

96. "ஆமயம் தீர்த்து அடியேனை" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். பதினோரு பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனின் தோற்றப் பொலிவையும், பெருமைகளையும், அருளையும் தம்மை ஆட்கொண்ட திறத்தையும் உரைக்கின்றது. பாடலின் ஒவ்வொரு வரியும், "கொண்டார்" என்னும் இறுதிச் சொல்லுடன் நிறைவு பெறுகிறது. இப்பதிகத்தின் பத்தாம்

பாடலில்,

"சாமத்தின் இசை வீணை தடவிக் கொண்டார்"

என்னும் குறிப்பில் இறைவன் சாம கான இசையை வீணையில் வாசித்த திறம் குறிப்பிடப்பட்டுள்ளது.

97. "அண்டம் கடந்த சுவடும் உண்டோ?" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். பதினோரு பாடல்கள் கொண்ட இப்பதிகம், "வினாவிடைத் திருத்தாண்டகம்" என்ற சிறப்புப் பெயர் கொண்டு விளங்குகின்றது. முதல் ஐந்து பாடல்களில் ஒவ்வொரு வரியின் இறுதிச் சொல்லும் உண்டோ? என்ற வினாவுடன் அமைந்து பாடலின் இறுதி வரி, "சொல்லீர், எம்பிரானாரைக் கண்ட ஆறே!" என்று அமைந்துள்ளது. அடுத்த மூன்று பாடல்கள் மற்றும் பதினோறாம் பாடலில் இறைவனின் தோற்றப் பொலிவை விளக்கும் வகையில் ஒவ்வொரு வரியின் இறுதிச் சொல்லும் "கண்டேன்" என்னும் சொல்லுடன் முடிகிறது. ஒன்பதாம் பாடல் இறைவனின் உருவச் சிறப்பைக் கூறி "உண்டு" என்னும் இறுதிச் சொல்லைக் கொண்டு விளங்குகிறது. பத்தாம் பாடல் முழுவதிலும் அல்லான் என்னும் சொல் விரவி வருகின்றது.

98. "நாமார்க்கும் குடி அல்லோம்" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம், "மறுமாற்றத் திருத்தாண்டகம்" என்னும் சிறப்புப் பெயரைக் கொண்டமைகிறது. ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு கருத்தில் பாடப்பெற்றுள்ளது. இப்பதிகத்தின் முதற்பாடல் திருநாவுக்கரசரின் வாழ்க்கை வரலாற்று ரீதியாக சிறப்பு வாய்ந்தது. இப்பாடல் வருமாறு :

"நாம் ஆர்க்கும் குடி அல்லோம்; நமனை அஞ்சோம்;
நரகத்தில் இடர்ப்படோம்; நடலை இல்லோம்;
ஏமாப்போம்;பிணி அறியோம்; பணிவோம் அல்லோம்;
இன்பமே-எந்நாளும் - துன்பம் இல்லை;
தாம் ஆர்க்கும் குடி அல்லாத் தன்மை ஆன
சங்கரன், நல்சங்க வெண்குழை ஆர் காதின்
கோமாற்கே,நாம் என்றும் மீளா ஆள்ஆய்க்

கொய்ம்மலர்ச் சேவடி இணையே குறுகினோமே"

<u>இப்பாடல் எழுந்த பின்னணி வரலாறு வருமாறு</u>

சமண சமயத்திலிருந்து சைவ மதத்தைத் தழுவிய திருநாவுக்கரசரின் (தருமசேனரின்) செயலைக் கண்டு சமணர்கள் மிகவும்கோபமுற்றனர், அதனால் பல சூழ்ச்சிகள் புரியத் தொடங்கினர், பல்லவ மன்னனிடம் சென்று தருமசேனர் தமக்கு சூலை நோய் வந்ததென்று பொய் சொல்லி சைவராகி நம் சமயத்தைத் துறந்தார் என்று கூறினர். இதனைக் கேட்ட மன்னன் மிகவும் சினமுற்று, தருமசேனனை இங்கு கொண்டுவாருங்கள் என்று அமைச்சர்களுக்கு ஆணையிடுகின்றான். அரசனது ஆணையை நிறைவேற்றத் துணிந்த அமைச்சர்கள் சேனை வீரர்களுடன் திருவதிகையை சென்று திருநாவுக்கரசரிடம் அரசன் உம்மை அழைத்து வரும்படி உத்திரவிட்டுள்ளான் என்று கூறினர். இதனைக் கேட்ட திருநாவுட கரசர் மேற்கண்ட பாடலை முதற்பாடலாகக் கொண்ட இப்பதிகத்தைப் பாடுகின்றார். அரசன் ஆணைக்கு இது மறுமாற்றமாக அமைவதால் இஃது மறுமாற்றத் திருத்தாண்டகம் என்ற பெயருடன் வழங்குகின்றது.

இப்பாடலின்முதல்வரியைமாணிக்கவாசக பெருமானும், யாமார்க்கும் குடியல்லோம்; யாதுமஞ்சோம்''என்று எடுத்தாளுகின்றார். சுத்தாங்கமாகவும் பண்ணாங்கமாகவும் பாடுவதற்கு ஏற்றவாறு இப்பாடலின் அமைப்பு அமைந்துள்ளது. எனவே அரிகாம்போதி இராகத்திலிருந்து பிறந்த ஜன்னிய இராகங்களுள் முதன்மையானதாகக் கருதப்படும் தக்கேசிப் பண்ணில் (காம்போதி இராகத்தில்) இப்பாடலை இசையமைத்துப் பாடலாம். இதற்குரிய சுரதாளக் குறிப்பு வருமாறு:

பண்: தக்கேசி தாளம்: கண்டசாபு
இராகம்: காம்போதி

| /5 | /5 |
|---|---|
| ; தச்ா நீ ; த | தா;தாதாதா |
| .நா மார்க்கும் | குடிஅல்.லோம் |
| பா பபாத பதச்ா | ச்நி நித தாபா; |
| . நமனை அஞ். | சோம்....... |
| ;நிதா பா;ப | மாபா தா மாகா |
| .நர கத்தில் | இடர் ப டோம் |
| ;மாகா பா, த | ச்நி பத ச்ா; ; |
| .ந ட லை இல் | லோம் .... |
| ;மக பா தா ச்ா | ச்ாரீக்ா ரிச்ச்ா நீ |
| .ஏ மாப் போம் | பிணிஅ றி யோம் |
| தா தச்ா ரிச் நிதா | தா;நித பாபா |
| . பணி வோம் அல் | லோம் .... |
| தா; க்ா ரீ ச்ா | ச் நிரிச் நிதநீபா |
| இன் ப மே. | எந் .. நா..ளும் |
| பா தா மக கா பா | தா ; ச்ா ; ; |
| துன் . பம் .. இல் | லை ..... |

மற்ற அடிகளையும் இதே போல் பாடவும்.

99. "எண்ணுகேன்; என் சொல்லி'' எனத் தொடங்கும் பதிகம் திருப்புகலூர் தலத்திற்குரியது, பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் இறைவனை வருணிக்கும் வகையில் அமைந்துள்ளது. பெரும்பாலான பாடல்கள்,

"......... உன் அடிக்கே போதுகின்றேன்
பூம் புகலூர் மேவிய புண்ணியனே!''

என்னும் இறுதி வரியுடன் நிறைவு பெறுகிறது. இதில் திருநாவுக்கரசர், புகலூர்ப் பெருமானை நோக்கி, புண்ணியனே! உன்னுடைய திருவடிக்கே நானும்

வருகின்றேன் என பக்திப் பெருக்கெடுத்த நிலையில் விண்ணப்பிக்கின்றார், இந்நிலையில்திருநாவுக்கரசர் இவ்வுலக வாழ்வைத் துறந்து இறைவன் திருவடியைச் சேர்ந்த நாள் சித்திரைத் திங்கள் சதயத்திருநாள் எனப் பெரியபுராணம் கூறும். இதனடிப்படையிலேயே இந்நாளை அப்பரின் சதயத் திருநாளாக தலங்கள் தோறும் கொண்டாடப்பட்டு வருகின்றது.

இதுகாறும் கூறியவற்றால், திருத்தாண்டகப் பதிகங்கள் முழுவதும் அவற்றின் பொருள் அடிப்படையிலும், பாடல் அமைப்பு முறையிலும் அரிகாம்போதி இராகத்தில் பொருத்தமாக திகழும் பெற்றிமை அறிய முடிகிறது. இப்பதிகங்களின் குறிப்பிடத்தக்க அம்சம் என்னவெனில் இவை சுத்தாங்கமாக அரிகாம்போதி இராகத்தில் மரபு முறை மாறாமல் இன்றளவும் பாடப்பட்டு வருவதேயாகும், இதற்கு இப்பதிகங்கள் கோயில்களில் ஓதுவார்களால் பாடப்பட்டு பிரபலமாக்கப் பட்டமையே என்று கூறலாம். ஒவ்வொரு பாடலிலும் ஒரு குறிப்பிட்ட சொல் ஒரு வரிக்கும் அடுத்த வரிக்கும் இடையில் ஒருவித இடைவெளி விட்டு இடம் பெறுகிறது. இவ்வகையான அமைப்பு தாண்டகப் பாடல்களை விருத்தமாக அமைத்துப் பாடுவதற்கு ஏற்றவாறு திகழ்கின்றன. கருத்து ரீதியாகவும் இப்பாடல்கள் இறைவனின் சிறப்புக்களையும் பெருமைகளையும் வருணிப்பதால் இவைவிருத்தமாக பாடுவதற்கு ஏற்றவை என்று கருதலாம்.

பண்ணாங்கமாகவும் இசை அமைத்துப் பாடுவதற்குச் சில பதிகங்கள் வாய்ப்பாக அமைந்துள்ளன. இவ்வகையில் இரண்டு பாடல்களுக்கு இசை அமைத்துச் சுரதாளக் குறிப்புகள் இவ்வியலில் கொடுக்கப்பட்டுள்ளன,

## தாண்டக இசையும் தியாகராஜ சுவாமிகளின் கீர்த்தனைகளும்

அப்பர் சுவாமிகளின் திருத்தாண்டகப் பதிகங்கள் தமிழிசையின் "சுத்தமேளம்'' எனப்படும்முதல் இசையான அரிகாம்போதிஇராகத்தில் மரபு வழியாக ஓதுவார்களால் விருத்தமாக பாடப்பட்டு வருகின்றது, இவற்றைப் பிற்காலத்து இயலிசைப் புலவர்கள் நன்கு கேட்டு இன்புற்றிருக்கலாம். மேலும் தம்முடைய பாடல்களில் இவ்விசை அமைப்பைப் பதித்திருக்கலாம்.

இவ்வகையில் அப்பரின் திருத்தாண்டகப் பதிகங்களின்இசை அமைப்பில் திளைத்து இன்புற்றவர்களில் முதன்மையாக வைத்துக் கருதப்படுபவர், திருநாவுக்கரசரின் காலத்திற்கு பத்து நூற்றாண்டுகளுக்குப் பின்னர் வாழ்ந்த தியாகராஜ சுவாமிகள்ஆவார். மற்ற இசை மேதைகளைக் காட்டிலும் அரிகாம்போதி இராகத்தில் அதிக அளவில் பாடல்களை இயற்றிய்வர் என்ற சிறப்பு இவருக்குள்ளது, திருவையாற்றினை இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்த தியாகராஜ சுவாமிகள் அரிகாம்போதி இராகத்திலமைந்த திருத்தாண்டக இசை அமைப்பை தேவார ஓதுவார்கள் வாயிலாகவும், அதனைப் பின்பற்றி நாதசுர இசையிலும் கேட்டு இன்புற்றிருக்கலாம். அந்த இசையறிவை அப்படியே தம்முடைய பாடல்களில் பதித்திருக்க வாய்ப்புண்டு.[5] ஒரே ஒரு வேறுபாடு,தியாகராஜ சுவாமிகளின் பாடல்கள் பண்ணாங்கமாக இயற்றப்பெற்றுப் பாடப் பெற்று வருகிறது, அப்பரின் பாடல்கள் சுத்தாங்கமாக பாடப்பெற்று வருகிறது. தியாகராஜ சுவாமிகளின் பாடல்கள் தெலுங்கு மொழியிலமைந்தவை. அப்பருடைய பாடல்கள் தமிழ் மொழியிலமைந்தவை. அரிகாம்போதி இராகத்திலமைந்த தியாகராஜ சுவாமிகளின் கிருதிகள் வருமாறு:[6]

1. உண்டேதி ராமு டொகடே- ரூபகம்
2. எந்தரானிதன - ஆதி (2களை)
3.எந்துகு நிர்தய - ஆதி (2 களை)
4. ஒக மாட ஒக பாணமு - ரூபகம்
5. சனிதோடி - ஆதி (1 களை)
6. தினமணி வம்ச - ஆதி (2 களை)
7. நே னெந்து வெதகுதுரா - ஆதி (கருநாடக பெஉறாக்)
8, ராம நன்னு ப்ரோவரா - ரூபகம்
9. ரார பணி சயன - ரூபகம்
10. லாலி லாலியனி - 1 களை -உத்சவசம்ப்ரதாய கீர்த்தனை
11. வல்லகா தனக - ரூபகம்
12. வினதா ஸுத - ஆதி (1களை)

அப்பரின் திருத்தாண்டக இசை மேற்கண்ட தியாகராஜ கிருதிகளின் வாயிலாக பண்ணாங்க முறையில் வளர்ச்சியடைந்துள்ளன என்று கருதலாம். மொழி வேறுபாடு கருதாமல் இந்த இசையை எடுத்தாண்ட தியாகய்யரின் திருவுள்ளத்தை நினைந்து போற்றுதல் நம் கடனாகும்,

## முடிவுரை

இறைவனை அடைவதற்கு உரியவழிகளாகச் சொல்லப்பெறும் ஒன்பதுவித பக்திநெறிகளுள், "தாஸ்யம்" எனப்பெறும் தொண்டு வழியைப் பின்பற்றி இறைவனை அடையலாம் என்ற உண்மையை உலகுக்கு எடுத்துக்காட்டியவர் திருநாவுக்கரசர். தாமே உழவாரப் பணியை மேற்கொண்டு தலங்கள்தோறும் சென்று இறைவனை ஏத்திப் பாடியுள்ளார். தொண்டு நெறியை இசையின் மூலம் உலகுக்கு உணர்த்தியவர் என்கிற அளவில் திருநாவுக்கரசரின் சிறப்பு அளவிடற்கரியது.

திருநாவுக்கரசர் தேவாரப் பாடல்களில் இசை வகிக்கும் பங்கினை ஆராய்ந்ததன்வாயிலாக அறியவரும் செய்திகள் ஈண்டு தொகுத்தளிக்கப்படுகிறது. இவை முறையே 1) பாடல் அமைப்பு அடிப்டையிலும், 2) இப்பாடல்களைப் பாடுமுறையிலும், 3) பிற்கால இயலிசைப் புலவர்களுக்கு இப்பாடல்கள் முன்னோடியாகத் திகழ்ந்த திறம், 4) இப் பாடல்களைப் பிரபலமாக்குவதற்கு மேற்கொள்ள வேண்டிய வழிமுறைகள் ஆகியன ஈண்டு நிரலே காணலாம்.

<u>பாடல் அமைப்பு</u>

தற்போதுள்ள கிருதி, கீர்த்தனை, பதம் போன்ற இசைப் பாடல்களின் அமைப்பிற்குத் திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல்களே முன்னோடியாகத் திகழ்ந்துள்ளன எனக் கருதலாம். குறிப்பாக, பல்லவி, அநுபல்லவி, சரணம் ஆகிய உறுப்புகளைக் கொண்ட தற்காலப் பாடல்களுக்குத் திருநாவுக்கரசரின் சில தேவாரப் பாடல்கள் முன்னோடியாகத் திகழ்ந்துள்ளன. திருநாவுக்கரசரின், "மாதர் பிறைக் கண்ணியானை" என்று தொடங்கும் பதிகத்தின் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும்,

"கண்டேன் அவர் திருப்பாதம்
கண்டறியாதன கண்டேன்''

இதில் நான்கு அடிகளுக்கு மேல் ஐந்தாவது அடியாக, தற்போதைய பல்லவி போல் அமைந்திருக்கக் காணலாம்.இவ்வாறே, "சுண்ண வெண் சந்தன சாந்தும்'' "தலையே நீவணங்காய்" என்ற பதிகத்திலும் பல்லவிக்குரிய தோற்றம் காணப்படுவதை அறிய முடிகிறது, எனவே பிற்கால கீர்த்தனையின் பல்லவி போன்ற வடிவம் கி,பி, ஏழாம்நூற்றாண்டில் அப்பர் தேவாரத்தில் முதன்முறையாகக் காணப்பெறுகின்றது என்று கூறலாம்,

திருநாவுக்கரசர் பாடல்கள் இறைவன் புகழ் தொடர்பாகவும், தலைவன்–தலைவி முறையிலமைந்த அகத்துறைப் பாடல்களாகவும் திகழ்கின்றன. இவ்வகையில் இப்பாடல்கள் பிற்காலத்திலெழுந்த கீர்த்தனை, பதம் ஆகிய உருப்படி வகைகளுக்கு முன்னோடிக் கருவாகத் திகழ்ந்துள்ளன என்று கூறலாம்.

பாடுமுறை

திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல்கள் பெரும்பாலும் சுத்தாங்கமாகவே பாடப்படுகின்றன. பண்ணாங்கமாக மொத்தம் இருபத்தோரு பதிகங்களே காணப்படுகின்றன. சுத்தாங்கம் என்பது எடுத்துக்கொண்ட இராகத்தை தாளம் போடாமல் வார்த்தைகளைக் கொண்டு விரிவாகப் பாடுதல். இதனை இசை ரீதியாக, "விருத்தம் பாடுதல்'' என்று கூறுவர். சொற்கள் இல்லாமல் இராகத்தை மட்டும் விரிவாகப் பாடும் முறை தற்போது மிகவும் பிரபலமாக உள்ளது. இதனைஇராக ஆலாபனை என்று கூறுவர் . இஃது பண்டைய தமிழிசையில் "நிறவாளத்தி'' என்று கூறப்படும். எனவே தற்போது இசையரங்குகளில் 'இராக ஆலாபனை' செய்து பின்னர் கீர்த்தனைப் பாடுதல்' என்னும் முறைக்குத் திருநாவுக்கரசரின் சுத்தாங்கமாகப்

பாடப்பெறும் பாடல்களே வழிவகுத்துள்ளன என்று கருதலாம்.

இவ்வகையில் ஓதுவார் தருமபுரம் சுவாமிநாதன் பாடி வெளிவந்துள்ள ஒலிநாடாக்கள் குறிப்பிடத்தக்க முறையில் அமைந்துள்ளன. இதில் ஒரு பதிகத்தின் ஒரு பாடல் சுத்தாங்கமாகவும் மற்றொருபாடல் அதே பண்ணில் (இராகத்தில்) பண்ணாங்கமாகவும் இருக்கும் வகையில் அமைந்துள்ளன. ஒரு பதிகத்தில் இரண்டு பாடல்களைக் கொண்டு. பல்லவி,அனுபல்லவி சரணம் ஆகிய எட்டு வரிகள் கொண்ட கீர்த்தனை அமைப்பாகவும் இதில் பாடப்பட்டுள்ளது.

எனவே தற்போதைய இசையரங்குகளில் காணப்படும் மனோதர்ம சங்கீத பிரிவில் இராக ஆலாபனை, நிரவல் முதலான இலக்கண நெறிகளுக்குத் திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல்கள் வித்திட்டுள்ளன என்று கூறினால் அது மிகையாகாது.

**திருநாவுக்கரசரும் மற்ற இயலிசைப் புலவர்களும்**

திருவள்ளுவர் கையாண்டுள்ள பழமொழியைத்' தம் பாடலில்பொன்னே போற் போற்றியுள்ளார், இவ்வாறே நாவுக்கரசருக்குப்பிற்பட்ட மாணிக்கவாசகர் முதலானோர் நாவுக்கரசரின் வழி நிலையைப் போற்றி ஏற்றுள்ளதென்பதைக் காணமுடிகிறது.

திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தரோடு சமகாலத்தில் வாழ்ந்தவர். இவ்விருவரும் கூட்டு வழிபாடு மேற்கொண்டு சிவதல யாத்திரை செய்துள்ளமை சேக்கிழாரால் பாடப்பட்டுள்ளது, இரண்டு இடங்களில் திருஞானசம்பந்தரை அப்பர் தம் பாடல்களில் குறித்துள்ளார். திருஞானசம்பந்தர் மூன்று வயதிலேயே உமையம்மையின் அருளால் பாடும் புலமை பெற்று தேவாரப் பதிகங்கள் இயற்றத்

தொடங்கினார், ஆனால் திருநாவுக்கரசர் எண்பத்தொரு ஆண்டுகள் கொண்ட தம் வாழ்க்கையின் இளமைக் காலத்தைச் சமண மதத்தில் கழித்துவிட்டு தம் வாழ்க்கையின் பிற்பகுதியில் சைவத்திற்கு வந்தார். வயது முதிர்ந்த பருவத்தில் பாடல்கள் இயற்றும் திறன் பெற்றார். இதற்கேற்ற பண்கள் இப்பாடல்கள் பாடுமுறையில் கையாளப்பட்டிருப்பது அறிந்துணர முடிகிறது. வாழ்க்கையில் தாம் பெற்ற அனுபவங்களின் வெளிப்பாடு இப்பாடல்களிலும் இவற்றோடு பொருந்திய இசையிலும் காணமுடிகிறது.

திருஞானசம்பந்தர் பாடல்களைப் பாடுமுறையில் காணமுடியாத ஒரே ஒரு பண் (இராகம்) திருநாவுக்கரசர் பாடல்கள் பாடுமுறையில் காணமுடிகிறது. இதுவே திருத்தாண்டகப் பாடல்கள் அமைந்த அரிகாம்போதி இராகமாகும். இவ்விருவரும் சமகாலத்தில் வாழ்ந்திருப்பதால் திருஞானசம்பந்தர் பாடல்கள் அமைந்துள்ள பண்கள் அனைத்திலும் திருநாவுக்கரசரும் பாடல்கள் பாடியிருக்கலாம். ஆனால் பத்து பண்களில் அமைந்துள்ள பதிகங்கள் மட்டுமே தற்போது நமக்குக் கிடைத்துள்ளன என்று கூறலாம்.

பாடுமுறையில் பார்க்கும் போது திருஞானசம்பந்தர் பாடல்கள் முழுவதும் பண்ணாங்கமாக பாடப்பட்டு வருகின்றன. திருநாவுக்கரசர் பாடல்களில் பெரும்பாலும் சுத்தாங்கமாகப் பாடப்பட்டு வருகின்றன. இதனையே இவ்விருவர் இசையிலும் உள்ளதொரு குறிப்பிடத்தக்க வேறுபாடாகக் கருதலாம்.

திருநாவுக்கரசரைப் பின்பற்றி பிற்கால இயலிசைப் புலவர்கள் பலர் பாடல்கள் பாடியுள்ளனர்.

குறிப்பாக 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தஅருணகிரிநாதரின் திருப்புகழ்ப் பாடல்களில் திருநாவுக்கரசர் பாடல்களின் தாக்கம் தெரிகின்றது. காலனிடத்து தமக்குச் சிறிதும் அச்சமில்லை என்னும் கருத்தில் திருநாவுக்கரசர் பாடியுள்ளார். அருணகிரிநாதரும் இதே கருத்தில் பல திருப்புகழ்ப் பாடல்கள் பாடியுள்ளார். சான்று: காலனிடத்து அணுகாதே. அப்பர் சமண சமயத்தில் இருந்த நாட்களில் இறைவனை நினையாமல் இருந்ததை எண்ணி வருத்தத்துடன் உருகிப் பாடுகிறார். சில பாடல்களில் தம்மை இழிநிலை படுத்தியும் பாடியுள்ளார். இதே போன்று அருணகிரிநாதரும் மாதர் வலையில் வயப்பட்டு முருகப் பெருமானை நினையாயல் வீணில் கழித்த நாட்களை எண்ணி வருந்திப் பாடுகிறார்.

திருநாவுக்கரசரின் வாழ்க்கையின் திருப்புமுனையாக அமைந்த நிகழ்ச்சி, சிவபெருமான் இவருக்குச் சூலை நோய் கொடுத்து தடுத்தாட் கொண்டமை. அருணகிரிநாதர் வாழ்க்கையிலும் இவர் பல நோய்களால் வருந்தி இறுதியில் முருகப்பெருமானாரால் தடுத்தாட் கொள்ளப் பட்டார் என்று மரபுவழி வரலாற்றின் மூலம் அறிகிறோம்.

திருநாவுக்கரசர் செந்தமிழ் பதிகம் பாடியமையால் ''நாவுக்கரசு'' என்ற பெயரை இறைவனே அருளினார் என்று அறிகிறோம். இதே போன்று அருணகிரிநாதரையும் " நாதா" என்று இறைவனே விளித்ததாக அகச்சான்றுகளின் மூலம் அறிகிறோம்.

திருநாவுக்கரசரின் திருத்தாண்டகப் பதிகங்கள் பாடப்பட்டு வரும் அரிகாம்போதி இராகத்தில் 18

